நேரு குழந்தைகள் புத்தகாலயம்

# சாதனையாளர்கள் சிறுவயதில்


தங்கமணி

சித்திரங்கள்
பார்த்தா சென்குப்தா






நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# உள்ளடக்கம்

# முன்னுரை

இத்தொகுப்பில் இடம் பெறும் சாதனையாளர்கள் அனைவரும் ஒரு காலத்தில் இதனைப் படித்துக் கொண்டிருக்கும் சிறுவர், சிறுமியரைப் போலவே சராசரி கனவுகள், ஆசைகள், விருப்பு வெறுப்புகள், கேள்விகள் மற்றும் சந்தேகங்கள் நிறைந்த சிறுவர் சிறுமியராக இருந்தவர்கள்தான். ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் ஏற்பட்ட திருப்புமுனைகள்தான் அவர்கள் பிற்காலத்தில் தேர்ந்தெடுத்த துறைகளில் ஈடுபடுவதற்கு உந்துகோலாகவும், அவர்களின் ஆளுமையை உருவகப்படுத்துவதற்குக் காரணமாகவும் இருந்திருக்கிறது.

தம் அனுபவங்களின் வழியே அவர்கள் கற்ற பாடங்களின் துணையால் அவர்கள் வளர்ந்து ஆளாகிய பின்னர், விஞ்ஞானம், சட்டம், கலைத்துறை, தொழில்துறை, சமூகத்தொண்டு மற்றும் சினிமா போன்ற, தாம் தேர்ந்தெடுத்த துறைகளில் புகழ் பெற்றுள்ளனர். இவர்கள் சுதந்திர இந்தியாவின் சில சாதனையாளர்கள்.

கடின உழைப்பும், விடாமுயற்சியும் சிறப்புத் தன்மையின் முக்கியமான அங்கங்களாகும். இவை இரண்டும் ஒருவரிடம் இருந்தால் அவர் புகழின் உச்சியை எட்ட முடியும் என்பதை வலியுறுத்துவது தான் இப்புத்தகத்தின் நோக்கம்.

இத்தொகுப்பில் உள்ள கதைகள் யாவும், அந்தந்தப் பிரமுகருடன் நடத்திய நேர்முகப் பேட்டியின்போது அவர்கள் என்னுடன் பகிர்ந்து கொண்ட குழந்தைப் பருவ நினைவுகளின் அடிப் படையில் எழுதப்பட்டவை. நிகழ்ச்சிகள் அனைத்தும் உண்மையானவை. கதைகளை உயிரோட்டம் உள்ளதாக்க, குறிப்பிட்ட பிரமுகரின் அனுமதி பெற்று, சூழ்நிலைகளும் உரையாடல்களும் அவற்றுக்கேற்ப

அமைக்கப்பட்டுள்ளன. தத்தம் கதைகளைப் படித்து, தம் கருத்துக்களைத் தெரிவித்து, அதன் மூலம் இத் தொகுப்பின் மதிப்பை உயர்த்தியதற்காக அவர்கள் ஒவ்வொருவருக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்கமணி



# ஒருபிடி வாதுமைப் பருப்பு

"பேச்சுப் போட்டியில் கலந்துகொள்ள விரும்புவோர் கையை உயர்த்துங்கள்," வகுப்பில் ஆசிரியர் அறிவித்தார்.

உயர்ந்த கைகளில் நாநியின் கையும் ஒன்று. பெயர்களைக் குறித்துக்கொண்டே வந்த ஆசிரியர் நாநியிடம் வந்தவுடன் நின்றார். ஆச்சரியத்தில் அவர் கண்கள் விரிந்தன.

"நாநி, நீ உண்மையாகவே போட்டியில் கலந்து கொள்ள விரும்புகிறாயா?" சந்தேகத்துடன் அவனைப் பார்த்து ஆசிரியர் கேட்டார்.

"ஆ... ஆ. மா..ம் சார். நா.. நா..ன் மு..யற்-சி செய்ய வி..வி...ரும்பு...கிறேன்," என்று பதிலளித்தான் நாநி. அவன் பின்னாலிருந்து மெல்லிய சிரிப்பொலி எழுந்தது. நாநி முகம் சிவந்தான், ஆனால் தன் முடிவை மாற்றிக்கொள்ளவில்லை.

பதினொன்று வயதான நாநி திக்கிப் பேசுவான். ஒரே வார்த்தையை, பலமுறை திக்கிய பிறகு சரியாக உச்சரிக்கும் அவன், பேச்சுப்போட்டியில் பங்கெடுத்துக் கொள்வதென்பது அவன் மன உறுதிக்கு ஒரு சான்றாகும். ஆசிரியரால் அவனுடைய துணிச்சலை மெச்சாமல் இருக்க முடியவில்லை. ஆனாலும் அவனுக்கு அதில் ஏற்படக்கூடிய சிக்கல்களை மேலும்



ஒருமுறை எடுத்துக் கூறினார்.

"நாநி, ஐந்து நிமிடங்களுக்குக் குறை யாமல் பேச வேண்டும். தலைப்பு அந்த நேரத் தில்தான் கூறப்படும். உன்னால் முடியுமா?"

இம்முறை அவன் தலையை மட்டும் ஆட்டினான். பேசுவதற்கான தலைப்பு போட்டிக்கு சற்றுநேரம் முன்புதான் தரப்படு மென்ற தகவல் அவனுக்கு இன்னும் அதிக உற்சாகமளித்தது. எந்த கருப்பொருளானாலும் ஒரே நொடியில் அவனுடைய மூளை சுறுசுறுப்பாக இயங்கி அத்தனை விவரங்களையும் சேகரித்து, தொகுத்துக் கொடுக்கும் ஆற்றல் பெற்றது. அவனுடைய பேச்சு எதிராளியை நிச்சயம் அசர வைத்துவிடும்.

அவன் தன் ஆசிரியரை உறுதியுடன் பார்த்தான். போட்டியில் பங்கேற்பதாக முடிவு செய்துவிட்ட அவன், எக்காரணம் கொண்டும் பின்வாங்குவதாக இல்லை. தலைநிமிர்ந்து அமர்ந்திருந்த நாநியிடம் தன்னம்பிக்கை மட்டுமில்லாமல், பிடிவாதமும் நிறையவே இருந்தது.

மற்ற மாணவர்கள் சட்டென்று சிரித்து விட்டாலும், அவனைத் தொடர்ந்து கேலிசெய்யத் தயங்கியதற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. ஒன்று, அவன் படிப்பில் படுசுட்டியாக இருந்தது; மற்றொன்று, அவனுடைய இரக்க குணம்; மற்ற மாணவர்களுக்கு உதவ எப்போதும் முன் வருபவன். இதுவே அவன் மற்ற மாணவர்களைத் தன்பால் ஈர்க்கக் காரணமாக இருந்தது. ஏதாவதொன்றை செய்வதென்று அவன் முடிவு செய்து விட்டால் அதனை முடிப்பதில் ஏற்படும் தடைகளை—அது திக்குவாயாகவே இருப்பினும் பொருட்படுத்தாமல், எப்பாடு பட்டேனும் செய்து முடிப்பானென்று அவர்கள் நன்றாக அறிவார்கள்.

திக்குவாய் அவனுக்கு மிகவும் தொல்லையைக் கொடுத்தது. குறிப்பாக ஏதாவது பேசத் தொடங்கிய வுடன் அவன் திடீரென திக்கத் தொடங்கிவிடுவான். திக்குவாய்ப் பேச்சைக் குணப்படுத்த அவனும் . 'ல பயிற்சிகளைச் செய்து பார்த்துவிட்டான். புத்தகங் களிலிருந்து கடினமான பகுதிகளைப் படிப்பது, சொல் வதற்குக் கடினமான பழமொழிகளை நிறுத்தாமல் சொல்வது போன்ற பயிற்சிகளை தொடர்ந்து

செய்தான். இப்பயிற்சிகள் அவனுக்கு ஓரளவு பயனும் அளித்தன. சிலசமயம் சற்றும் திக்காமல் பல வாக்கியங்கள் பேசியபிறகு திடீரென்று திக்க ஆரம்பித்து விடுவான். இது அவனை மேலும் பேச விடாமல் திணறடித்துவிடும். இதனால், பலமுறை தான் சொல்ல நினைப்பதைச் சொல்ல முடியாமல் போய் எரிச்சலை ஏற்படுத்தும்.

"அப்பா, நா..நா-ன் பே-பேச்சுப் போட்-ட்-டியில் சேர்ந்திருக்கிறேன்," நாநி அன்றிரவு சாப்பிடும்போது தன் தந்தையிடம் கூறினான்.

"அப்படியா? மிகவும் நல்லது. எதைப் பற்றிப் பேசப் போகிறாய்?" என்று கேட்டார் அவர்.

"தெரியாது. போட்டிக்கு முன்புதான் தலைப்பை அறிவிப்பார்கள்," இம்முறை சற்றும் திக்காமல் நாநி பதிலளித்தான்.

திடீரென்று நினைத்துக் கொண்டவராய், "ஓ! நான் மறந்தே போனேன்! இன்று கடைக்கு திருமதி. தஸ்தூர் வந்திருந்தபோது திக்குவாயைக் குணப்படுத்த ஒரு நல்லயோசனை கூறினார். வாயில் சிறிய கூழாங் கற்களை வைத்துக்கொண்டு பேசுவது திக்குவதை நிறுத்துவதற்கான சிறந்த பயிற்சி என்று அவர் கூறினார். நீயும் முயற்சி செய்து பாரேன்!" என்றார் அவர். "ச..ச..ரிப்பா! இன்றே முயற்சி செய்கிறேன். நாளை பேச்சுப்போட்டியில் அது எனக்கு உதவக் கூடுமல்லவா?"

"பேச்சுப் போட்டிக்குத் தயார் செய்ய உனக்கு நான் உதவவா?" நாநியின் அக்கா ஆமி கேட்டாள். "நீ குறிப்பிட்ட நேரத்திற்குள் பேச்சை முடிக்கக் கடிகாரம் பார்த்து மணி சொல்கிறேன்" நாநி மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டான்.

நாநியின் முயற்சிகளுக்கு அக்குடும்பத்தில் யாரும் தடை செய்ததில்லை. அவன் பெற்றோர் நாநியையும், ஆமியையும் எல்லாவிதத்திலும் ஊக்குவித்து உற்சாக மூட்டினர். ஒருவருக்கொருவர் அன்பும் ஆதரவும் தந்து, உறுதுணையாக நின்ற அக்குடும்பம் மிக நெருக்கமானது.

அன்றிரவு நாநி ஆமியுடன் செய்த பயிற்சியின் முடிவில் சற்றே திக்கினாலும் சரளமாகப் பேசினான்.

"போட்டியிலும் இப்படியே பேசு." அவனை ஊக்குவிக்கும் விதமாக ஆமி கூறியது நாநிக்கு மிகுந்த



உற்சாகமளிப்பதாக இருந்தது.

மறுநாள் பேச்சுப்போட்டி நடக்கவிருந்த கூடம் நிரம்பியிருந்தது. அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட தலைப்புக்களிலிருந்து நாநி தேர்ந்தெடுத்தது, 'அயரா முயற்சி வெற்றிதரும்' என்பதாகும்.

அவனுடைய முறை வந்தபோது மிக நன்றாகப் பேசினான். தன்னால் இயன்ற வரை ஒருவர் முயற்சி செய்தால் எதையுமே சாதித்து விட முடியும் என்று தீர்மானமாகக் கூறினான். அவன் தேர்ந்தெடுத்திருந்த தலைப்பு, போட்டியில் அவன் முயற்சியைப் பற்றியதாகவே தோன்றியது. உரையின் தொடக்கத்தில் சற்றுத் திக்கியவன், போகப்போக தன்னம்பிக்கை யுடன் பேசத் துவங்கினான். 'விடா முயற்சி' என்ற வார்த்தையில் மட்டும் பலமுறை திக்கினாலும் மனம் தளராமல் பேசி முடித்தான். கரவொலி காதைப் பிளந்தது. அதுதான் நாநியின் வாழ்க்கையில் முதல் சொற்பொழிவு.

அவனுக்கு அன்று பரிசு கிடைக்கவில்லை என்றாலும், நிகழ்ச்சியைத் தலைமை தாங்கிய தலைமையாசிரியரிடமிருந்து பாராட்டு நிச்சயம் கிடைத்தது.

"நாநி இன்று போட்டியில் பேசியதை வாழ்க்கை யில் கடைப்பிடித்தால் முன்னேற நல்ல வாய்ப்பிருக் கிறது" என்று அவன் பேச்சைக் குறிப்பிட்டுப் பேசினார். இதைக் கேட்ட நாநி மிகவும் உற்சாக மடைந்தான்.

அன்று மாலை குதூகலத்துடன் வீட்டுக்கு விரைந்த நாநி, தன் தந்தையின் உலர் சலவைக் கடைக்குச் சென்று அவருக்கு அன்று நடந்தவை அனைத்தையும் விவரித்தான்.

"இது மிகவும் மகிழ்ச்சிகரமான செய்தி நாநி. இதேபோல் நீ முயற்சி செய்துகொண்டிருந்தால், கடவுளின் அருளால் ஒருநாள் மிகப் பெரிய மேடைப் பேச்சாளனாக வருவாய்," என்றவாறே அவனைத் தட்டிக் கொடுத்தார். நாநியின் தந்தைக்கு கடவுளிடம் எவ்வளவு நம்பிக்கை இருந்ததோ, அதே அளவு நம்பிக்கை கடின உழைப்பின்மீதும் இருந்தது.

அதன் பிறகு அவர் அலமாரியிலிருந்து இரண்டு புத்தகங்களை எடுத்து அவனிடம் கொடுத்தார். "நமது

வழக்கமான வாடிக்கையாளரான திருமதி ராணி இவற்றை உனக்காகத் தந்தார். இவை உனக்குப் பிடிக்குமென்று நினைக்கிறேன்," என்றார். அவற்றைப் பெற்றுக்கொண்ட நாநிக்கு அளவிட முடியாத மகிழ்ச்சி.

சிறுவயதிலிருந்தே தன் தந்தையிடமிருந்து புத்தகங்களின் சிறப்பைப்பற்றி அவன் நன்கு அறிந்திருந்தான். "புத்தகங்களைப் படிக்கப் படிக்கத்தான் ஒரு சிறந்த மனிதனாக உருவாக முடியும்," என்று அவர் அடிக்கடி கூறுவார். நாநிக்குக் கரும்பு தின்பதற்குக் கூலியா வேண்டும்? தன் சின்னஞ்சிறு விரல்களால் புத்தகத்தின் பக்கங்களைத் திருப்ப என்றைக்குக் கற்றுக் கொண்டானோ அன்றிலிருந்து அவனுக்குப் படிப்பதில் ஈடுபாடு இருந்தது.

முதலில் குஜராத்தி புத்தகங்களைப் படித்துக் கொண்டிருந்தவன், ஏழாவது வயதிலிருந்து ஆங்கிலப் புத்தகங்களைப் படிக்க ஆரம்பித்தான். புத்தகத்தைக் கையில் எடுத்தால் தன்னைச் சுற்றி நடப்பது எதுவும் அவனுக்குத் தெரியாது. விளையாடக் கூடப் போகாமல் புத்தகத்தில் மூழ்கியிருப்பான்.

பள்ளியிலிருந்து நாநியுடன் வந்திருந்த அவன் நண்பன் ஹஃபீஸ், "இன்று விளையாட வருவாயல்லவா?" என்று கேட்டான். ஆனால் நாநிக்கோ வேறு முக்கியமான வேலை இருந்தது! "இன்று வரமாட்டேன். இந்தப் புத்தகங்களை இன்றே முடிக்க வேண்டும்," என்றான்.

"எல்லாவற்றையுமா?" ஹஃபீஸால் தன் காதை நம்ப முடியவில்லை!

அதிவேகமாகப் படிப்பதில் தேர்ச்சி பெற்ற நாநி, "ஆமாம், எல்லாவற்றையும்தான்," என்று நிதானமாகப் பதிலளித்தான்.

"வர வர நீ விளையாட வருவதேயில்லை. இப்படியே போனால் உன் உடல் பலவீனம் அடைந்து விடும்." அவன் நண்பன் குற்றம் சாட்டும் பாவனையில் கூறினான்.

"நான் வீட்டுக்குள்ளிருந்தாலும் சும்மா உட்கார்ந்திருக்கவில்லையே! என் மூளைக்குப் போதுமான பயிற்சி கிடைத்துக் கொண்டுதானே இருக்கிறது? உடற்பயிற்சிக்கு இந்த மூளைப் பயிற்சி எந்தவிதத்திலும் குறைந்ததல்ல."



"உன் உடலில் பலமேயில்லையென்றால் மூளைக்கு எவ்வளவு பயிற்சி கிடைத்தும் என்ன பயன்," ஹம்ஃபீஸ் விடுவதாக இல்லை.

"ஓ ஹம்ஃபீஸ்! உனக்கு எப்படிப் புரிய வைப்பது? இதோ பார். மூளை வேலை செய்ய எரிபொருளைப் பயன்படுத்துகிறது. எரிபொருள் எந்த விதத்தில் உடலுக்குப் பயன் பட்டால் என்ன? அதனால் உடற்பயிற்சி செய்வதிலோ, புத்தகம் படிப்பதிலோ எந்த வித்தியாசமுமில்லை," என்று வாதாடினான் நாநி.

"ஹம்ஃபீஸ், நாநியுடன் உன்னால் வாதிட முடியாது. உன் வாதங்கள் ஒவ்வொன்றுக்கும் அவனிடம் எதிர்வாதம் தயாராக இருக்கும். ஒருநாள் அவன் நிச்சயம் வக்கீலாகத்தான் போகிறான்," நண்பர் களிருவரும் பேசுவதைக் கேட்டுக்கொண்டிருந்த அவன் தந்தை சிரித்தபடி கூறினார்.

ஹம்ஃபீஸிடம் கூறியதைத்தான் அவர் தன் குடும்பத்தினரிடமும், நண்பர்களிடமும் அடிக்கடி கூறுவார். "நாநி தன் வாதங்களைப் பகுத்து, தொகுத் தளிப்பதில் வல்லவன். ஒரு நல்ல வக்கீலுக்கு இதுதான் முதல் தேவை," என்பார் அவர்.

வீட்டில் புத்தகங்கள் படிப்பதோடல்லாமல் நாநிக்கு மும்பையின் கிராண்ட் ரோடு பகுதியிலிருந்த பாப்புலர் புக் டெப்போவுக்குப் போவதற்கும் மிகவும் பிடிக்கும். அதன் உரிமையாளர் திரு. பாட்கல் அவனைப் புத்தகங்களைப் புரட்டிப் பார்க்கவும் அங்கு அமர்ந்து படிக்கவும் அனுமதித்தார். அச்சிறுவனுக்குப் புத்தகங்களின் மேலுள்ள ஆர்வமும், அவற்றை வாங்க இயலாமையும் அவருக்கு நன்றாகத் தெரியும்.

ஒருநாள் நாநி வழக்கம்போல் அங்கு சென்றிருந்த பொழுது, திரு. பாட்கல் அவனிடம் ஒரு புத்தகத்தைக் கொடுத்தார். "இப்புத்தகத்தின் பிரதிகள் இன்றுதான் வந்தன. இவற்றுள் ஒன்று சற்று சேதமடைந்திருப்பதால் அதைத் திருப்பி அனுப்பப் போகிறேன். உனக்கு வேண்டுமானால் கொண்டுபோய் படித்துவிட்டு நாளை திருப்பிக்கொடு. விற்பனையாளருக்கு இதனை நாளை மறுநாள்தான் கொடுக்க வேண்டும். ஆனால் புத்தகம் பழுதாகாமல் பார்த்துக் கொள்," என்றார் அவர்.

நாநிக்கு மகிழ்ச்சியில் தலைகால் புரியவில்லை!

"உண்மையாகவே இதனை நான் எடுத்துக் கொண்டு போகலாமா? மிக்க நன்றி ஐயா. நான் இதை மிகக் கவனமாகத் திருப்பித் தருவேன்," என்றான்.

அங்கிருந்து வரும் வழியில் ஓரிரண்டு பழைய புத்தகக் கடைகளுக்குச் சென்றான். புதிய புத்தகங்கள் வாங்க அவனிடம் பணம் கிடையாது. ஆனால் ஒவ்வொரு பைசாவையும் சேர்த்து வைத்து பழைய புத்தகங்கள் வாங்குவது அவன் வழக்கம். அன்று அவனுக்குப் பிடித்த புத்தகம் ஏதும் கண்களுக்குப் புலப்படவில்லையாதலால், திரு. பாட்கல் கொடுத்த புத்தகத்தை மார்புடன் சேர்த்து அணைத்தவாறு வீடு நோக்கி நடந்தான்.

அப்புத்தகம் சுய உதவி பற்றியது. அவனுக்கு இலக்கிய நூல்களும் பிடிக்கும். ஆனால் அவற்றை பள்ளியில் படித்து விடுவதால், இதுபோன்ற புத்தகங்களைப் படித்து அவற்றிலிருந்து பயனுள்ள விஷயங்களைக் கற்பதில் அவனுக்கு நாட்டம் அதிகம். இதைத் தவிர அவன் விரும்பிப் படிப்பது கவிதைகள். அவற்றை ஒரு முறை படித்து, மனப்பாடம் செய்து, அப்படியே ஒப்பித்து தன் வகுப்பு மாணவர்களை ஆச்சரியத்தில் மூழ்கடிப்பான்.

அவன் வீடு போய்ச் சேர்ந்த பொழுது அவன் தாய் ஒரு பிச்சைக்காரனுக்கு உணவளித்துக் கொண்டிருந்தார். அவன் உண்டு முடித்தபின் அவனுக்குத் தன் கணவரின் பழைய சட்டையொன்றைக் கொடுத்தார். பிச்சைக்காரன் மகிழ்ச்சியுடன் சட்டையைப் பெற்றுக்கொண்டு வாயார வாழ்த்தி விட்டுச் சென்றான். இது நாநிக்குப் புதிதல்ல. அவன் பெற்றோர் இருவரும் கடவுள் பக்தி மிகுந்தவர்கள்; ஏழை எளியோர்க்கு உதவும் பண்புடையவர்கள்.

"கடவுள் நமக்கு இவ்வளவெல்லாம் கொடுத்திருப்பது நாம் பிறருக்கு உதவ வேண்டும் என்பதற்காகத்தான்," என்று அவன் தந்தை அடிக்கடி கூறுவார்.

தன் தந்தையின் சலவைக் கடையின் பற்றுவரவுக் கணக்குகளை நாநி எழுதுவது வழக்கம். ஒருமுறை அவன் கணக்கு வழக்குகளைச் சரிபார்த்துக் கொண்டிருந்தபோது தன் தந்தை சிலரிடமிருந்து சலவைக்குக் குறைவாகப் பணம் வாங்குவதைக் கவனித்தான்.

"அப்பா, இந்தப் புடவையை உலர்சலவை செய்ய நீங்கள் ஓரணா மட்டுமே வாங்கியிருக்கிறீர்கள்.



வழக்கமாக இரண்டணா அல்லவா வாங்குவீர்கள்,"

"ஆமாம் நாநி. அது டாக்டருடைய மனைவியின் ஒரே நல்ல புடவை. அவருக்குத் தன் அண்ணனின் மகள் திருமணத்திற்கு உடுத்திச் செல்ல அவசரமாகத் தேவைப் பட்டது. அவருக்கு நம் வழக்கமான கட்டணம் கட்டுப்படியாகாது," என்றார் அவன் தந்தை. நாநி அவர் கூறியதைக் கவனமாகக் கேட்டான். இவ்வாறு பலமுறை தன் பெற்றோர்கள் ஏழை எளியவர்களுக்கு உதவுவதைப் பார்த்திருந்ததால் அவனிடமும் அதே உதவும் மனப்பான்மை ஆழமாகப் பதிந்திருந்தது.

"நாநி, நீ பெரியவனானபின் என்ன செய்யப் போகிறாய்?", என்று அவர்கள் வீட்டிற்கு பக்கத்தில் குடியிருந்த ஒருவர் ஒருமுறை அவனிடம் கேட்டார். "நான் பெரியவனாகி உயர் பதவி வகித்துச் செல் வாக்குடையவனாவேன்," என்றான்.

"செல்வாக்குப் பெற்றபின் என்ன செய்வாய்?" என்றார். "என் நாட்டிற்காக ஏதாவது செய்வேன். ஏழை எளியவர்களுக்கு உதவுவேன்." அச்சிறு வயதில் அவனுக்கு தன் இலட்சியம் எப்படி நிறைவேறும் என்று புரியாவிட்டாலும், பாமரர்களின் நிலை அவனைப் பெரிதும் பாதித்தது என்னவோ உண்மை.

அவர்கள் வசித்து வந்த கட்டிடத்தில் ஜஹாங்கீர் என்றறொரு அனாதைச் சிறுவன் தன் தூரத்து உறவினர்களுடன் தங்கியிருந்தான். தினந்தோறும் அவர்களிடம் வசைகளும், அடி உதைகளும் வாங்கி அழுது கொண்டிருப்பவனை நாநி பலமுறை பார்த்திருக்கிறான். தனக்கு நேரம் கிடைத்த போதெல்லாம் அவன் ஜஹாங்கீரை சமாதானப்படுத்த அவனுக்குச் சிறுசிறு பரிசுகள் எடுத்துச் சென்று அவனுடன் விளையாடுவது வழக்கம். அச்சிறுவனும் நாநியை மிகவும் நேசித்தான்.

ஒருநாள் நாநியின் தாய் ஆப்ரிகாட் பழங்கள் வாங்கியிருந்தார். அவற்றுள் இருக்கும் கொட்டையை உடைத்து அதிலிருந்து வாதுமைப் பருப்பை எடுத்து தம் குழந்தைகளுக்குத் தருவார். அன்றும் அதுபோல் ஒரு கையளவு பருப்பை நாநிக்காக வைத்திருந்தார். புத்தகம் படித்துக் கொண்டே ஒவ்வொன்றாக

அவற்றை வாயில் போட்டுக் கொள்வது அவனுக்கு மிகவும் பிடித்த பொழுதுபோக்கு. அன்றைக்கும் பள்ளியிலிருந்து வந்ததும் அவன் தாய் அவனுக்காக வைத்திருந்த வாதுமைப் பருப்புக்களை அவனிடம் கொடுத்தார். வழக்கம்போல அவனும் புத்தகம் படித்துக்கொண்டே பருப்புகளை சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது ஜஹாங்கீர் அழும் குரல் கேட்டது. புத்தகத்தைப் படிப்பதில் மும்முரமாக இருந்த அவன் அந்த அழுகுரலைக் கவனிக்காமல் தொடர்ந்து படித்துக்கொண்டிருந்தான். முதல் பருப்பை வாயில் போட்ட நேரத்தில் அவனுடைய அப்பாவின் குரல் கேட்டது.

"நாநி, இப்பருப்புகளை ஜஹாங்கீருக்குத் தர வேண்டுமென்று உனக்குத் தோன்றவில்லையா?" மிக மென்மையான குரலில் கேட்டார்.

புத்தகத்தை முடிக்கும் அவசரத்தில் இருந்த நாநி, "நான் ஏன் அவனுக்குத் தரவேண்டும்? எனக்கு வாதுமைப் பருப்பு மிகவும் பிடிக்கும். தவிர என்னிடம் இருப்பது கொஞ்சமே. அம்மா இவற்றை எனக்குத் தானே தந்தார்?" அவன் சரமாரியாக கேள்விகளை அடுக்கினான். தந்தையிடம் அவ்வாறு என்றுமே பேசியதில்லை.

"நாநி, இங்கே வா," என்றார் அவன் தந்தை. அவனைத் தன்னருகில் அமர்த்திக்கொண்டு அவன் கையை எடுத்துத் தன் கையினுள் வைத்துக்கொண்டு மென்மையாகப் பேச ஆரம்பித்தார்.

"மகனே! கடவுள் உனக்கு வாழ்க்கையில் எவ்வளவு நன்மைகள் செய்திருக்கிறார் பார்? உனக்கு அன்பான பெற்றோர் உள்ளனர்; உன் தந்தைக்கு நிரந்தர வருமானம் வருகிறது; நாம் நல்ல வீட்டில் வசிக்கிறோம்; நாம் படித்தவர்கள். கடவுள் நமக்கு இவ்வளவும் எதற்காகக் கொடுத்திருக்கிறார் தெரியுமா உனக்கு? நம்மைவிட எளியவர்களுடன் இவற்றை யெல்லாம் பகிர்ந்து கொள்வதற்குத்தான். இவை அனைத்தையும் நாமே சுயநலத்துடன் அனுபவிப்பதற் காக அல்ல.

"ஜஹாங்கீரைப் பார். அவன் ஒரு அனாதை. இவ்வுலகத்தில் அவனுக்கு என்று யாருமே இல்லை. அவனிடம் எதுவுமே இல்லை. அவனுடன் ஒப்பிடும் போது உன்னிடம் எல்லாமே இருக்கிறது. அல்லவா?



இந்த வாதுமைப் பருப்புகளையாவது அவனுடன் பகிர்ந்து கொள்ளாவிட்டால் கடவுளுக்கு மகிழ்ச்சி ஏற்படுமா?”

நாநி தன் கையிலிருந்த பருப்புகளைப் பார்த்தான். வியர்வைப் பிசுபிசுப்பில் அவை ஈரமாகிக் கொண்டிருந்தன. அவன் தந்தை ஒருமுறை கூடத் தன் குரலை உயர்த்தவோ அவனைக் கட்டாயப்படுத்தவோ இல்லை. ஆனால் அவருடைய மென்மையான குரலும், அதிலிருந்த அன்பும், உண்மையும் அவனை அவர் கூறும் ஒவ்வொரு வார்த்தையையும் கவனமாகக் கேட்க வைத்தன. அவன் சட்டென எழுந்தான். ஒரு



கைக்குட்டையில் அவ்வாதுமைப் பருப்புகளைச் சுற்றி எடுத்துக் கொண்டான். "இதோ வருகிறேன் அப்பா," என்று கூறி வெளியில் விரைந்தான்.

"இவை அத்தனையும் எனக்காகவா?" நாநியின் கையிலிருந்த வாதுமைப் பருப்புகளைப் பார்த்துப் பசியால் வாடியிருந்த கண்கள் ஆச்சரியத்தால் விரிய ஜஹாங்கீர் கேட்டான். அவன் கண்களிலும், கன்னத்திலும் கோடாக வழிந்திருந்த கண்ணீர் இன்னும் பளபளத்துக் கொண்டிருந்தது. அவனைக் கண்ட நாநி, சற்று முன்னர்தான் அவனுடன் வாதுமைப் பருப்புக்களைப் பகிர்ந்துகொள்ள மறுத்ததை நினைத்து வருந்தினான்.



"ஜஹாங்கீர். சாப்பிடு," என்று அன்புடன் கூறினான் நாநி.

"உனக்கு? உனக்கு வேண்டாமா?" ஜஹாங்கீர் சந்தேகத்துடன் அவனைக் கேட்டான்.

"வேண்டாம். நான் ஏற்கெனவே நிறைய சாப்பிட்டு விட்டேன். இவை உனக்காகத் தான்."

இதனைக் கேட்ட ஜஹாங்கீர் திரும்பவும் அழ ஆரம்பித்துவிட்டான். நாநி கலவரம் அடைந்தான்.

"நீ ஏன் அழுகிறாய்?" பதட்டத்துடன் கேட்டான். ஜஹாங்கீர் பதிலேதும் சொல்லாமல் நாநியைக் கட்டிக் கொண்டு இன்னும் உரத்து அழலானான்.

நாநி அவனைச் சமாதானப்படுத்திவிட்டு யோசனையுடன் வீடு நோக்கி சென்றான்.

"அப்பா, வாதுமைப் பருப்பை வாங்கிக் கொண்ட பிறகும் ஜஹாங்கீர் ஏன் அழுதான்?" தன் சந்தேகத்தைத் தந்தையிடம் கேட்டான்.

"எவ்வாறு கொடுமை ஒரு குழந்தையை அழவைக்குமோ, அவ்வாறே, அன்பும் இரக்கமும் கூட கண்ணீர் வரவழைக்கும். இவையிரண்டிலும் உள்ள வித்தியாசம் என்னவென்றால் ஒன்று வருத்தத்தினால் வரும் கண்ணீர், மற்றொன்று, மகிழ்ச்சியால் வருவது. தன்னிடம் இருப்பதைப் பிறருடன் பகிர்ந்து கொள்வதன் முக்கியத்துவம் இப்பொழுது உனக்குப் புரிந்ததா?"

"இத்தனை சிறிய செயல் மற்றொருவருக்கு மகிழ்ச்சியளிக்கும் என்றால், நான் இவற்றைச் செய்ய இன்னும் நிறைய வழிகள் தேடுவேன்" அன்று நாநி தீர்மானம் செய்துகொண்டான்.

"இவ்வுலகத்தில் எத்தனையோ ஆயிரம் பேர் ஜஹாங்கீரைப் போல் ஒடுக்கப்பட்டு, தன் உரிமைகளுக்காகப் போராட இயலாமலும், வழி தெரியாமலும் இருக்கின்றனர். நான் அவர்களுக்காகப் பாடுபடுவேன்," என்று சிறுவன் நாநி அக்கணமே முடிவு செய்தான்.

# நாநி யார்?

1920ம் ஆண்டு ஜனவரி 16ம் தேதி பிறந்த நாநி பால்கிவாலா ஒரு பிரபலமான வழக்குரைஞர் மற்றும் மனித உரிமைகளுக்காக போராடுபவர். திரு. பால்கிவாலா, அரசின் கொடுமையினால் வாடும் தனி மனிதர்களின் சார்பில் பல வரலாற்றுப் புகழ்பெற்ற வழக்குகளில் வாதாடியிருக்கிறார். பேச்சுரிமை மற்றும் சிறுபான்மையினரின் உரிமைகளுக்காகவும் அயராமல் போராடியிருக்கிறார். இவற்றில் பெரும்பான்மையான வழக்குகளை ஒடுக்கப்பட்டோர் மற்றும் எளியவர் களின் சார்பில் வாதாடியமையால், அவற்றை இலவச மாக வாதாடியிருக்கிறார்.

திரு. பால்கிவாலா 1977லிருந்து 1979வரை அமெரிக்காவில் இந்தியாவின் தூதுவராகப் பணி யாற்றியிருக்கிறார். அவருக்கு பல அமெரிக்கப் பல்கலைக் கழகங்கள் சட்டத்துறையில் முனைவர் பட்டங்களை அளித்து கௌரவித்திருக்கின்றன.

அவர் சட்டம், வரிவிதிப்பு, இந்திய அரசியல் அமைப்புச்சட்டம், நம் பண்பாடு போன்ற பல விஷயங்களைப்பற்றி புத்தகங்கள் எழுதியிருக்கிறார். நாட்டின் வரவுச் செலவுத்திட்டம் மற்றும் வரி சம்பந்தப்பட்ட விஷயங்களைப் பற்றிய அவருடைய தெளிவான உரைகள் புகழ்பெற்றவையாகும். மத்திய அரசின் வரவு செலவுத் திட்டத்தை விமர்சனம் செய்யும் அவருடைய சொற்பொழிவு பல்லாயிரம் மக்களைத் திரளவைத்து, உலகத்திலேயே அதிகம் மக்களை ஒரு பொதுக்கூட்டத்தில் திரட்டிய சிறப்புப் பெருமையை ஈட்டி கொடுத்திருக்கிறது. பதினைந்து வயதுவரை திக்குவாயால் திணறியவருக்கு இது ஒரு மகத்தான சாதனையல்லவா?

திரு. பால்கிவாலா அண்மையில் அஸோசி யேட்டட் சிமெண்ட் கம்பெனியின் தலைமைப்



பதவியிலிருந்து ஓய்வு பெற்றார். இது தவிர அவர் பல இந்திய மற்றும் வெளிநாட்டுக் கம்பெனிகளின் இயக்குனராகவும் இருந்திருக்கிறார். தற்போது பல அறக்கட்டளைகளின் அறங்காவலராகவும், ஃபோரம் ஃபார் ஃப்ரீ என்டர்பிரைசஸ் (பேச்சுரிமை அமைப்பில்) தலைவராகவும் அவர் பொறுப்பேற்று உள்ளார்.



# பேருந்து நிறுத்தம்

மேதா அன்று மிக்க மகிழ்ச்சியாக இருந்தாள். பள்ளி ஆண்டுவிழாவிற்காக மாணவர்கள் போட்ட நாடகத்தில் அவள் தலைமையாசிரியரின் வேடமேற்று பலத்த பாராட்டுப் பெற்றிருந்தாள். அவளுக்கு நிறையப் பரிசுகள் கிடைக்கவிருந்தன. அவற்றில், இரண்டு பட்டிமன்றங்கள், ஒரு பேச்சுப்போட்டி மற்றும் ஒரு கட்டுரைப் போட்டி ஆகியவற்றுக்கான பரிசுகளும் கிடைத்தன. மாணவர் பத்திரிகையின் மிகச் சிறந்த எழுத்துக்கான பரிசு ஒன்றும் கொடுக்கப் படவிருந்தது. அப்பத்திரிகையில் மேதாவின் பல கட்டுரைகளும், கவிதைகளும் இடம் பெற்றிருந்தன.

பரிசு வழங்கும் விழா தொடங்கியது. மேதா மகிழ்ச்சி பொங்க ஒவ்வொரு பரிசாக வாங்கி வந்தாள். பத்திரிகையின் மிகச் சிறந்த எழுத்துக்கான பரிசு அறிவிக்கப்பட்டது. அவள் எழுதியிருந்த 'ஸ்ந்த்ரா ஆனி லிம்பு' (ஆரஞ்சும் எலுமிச்சையும்) என்ற கவிதைக்குப் பரிசு வழங்கப்பட்டிருந்தது. மேதா தன் பரிசை வாங்கச் சென்றபோதுதான், அறிவிப்பாளர் அவள் பெயரை அறிவிக்காமல் அவளுடைய ஆறாம் வகுப்புத் தோழியான சுனிதாவின் பெயரை அறிவித்துக் கொண்டிருந்ததைக் கவனித்தாள்! அதைக் கேட்ட மேதாவுக்கு பெருத்த அதிர்ச்சி!



சுனிதாவுக்கும் அதிர்ச்சிதான். அவள் பரிதாபமாக, “மேதா, நீ எழுதிய கவிதைக்கு நான் எப்படிப் பரிசு வாங்குவது?” என்று கேட்டாள்.

அதிர்ச்சியிலிருந்து இன்னும் விடுபடாத மேதா, ஒருவழியாக சமாளித்துக் கொண்டு “அது உன் தவறல்ல,” என்றாள்.

இதற்குள் அறிவிப்பாளர் மற்றொரு முறை சுனிதாவின் பெயரை அறிவிக்கவே, அவள் மேதாவுக்குக் கிடைக்க வேண்டிய பரிசை வாங்க மேடையை நோக்கி ஓடினாள். பயமும், மகிழ்ச்சியும் ஒருங்கிணைந்து இத்தவறைப் பள்ளி நிர்வாகத்தின் கவனத்திற்குக் கொண்டுவரவிடாமல் அவளைத் தடுத்தன.

இவ்வளவு குழப்பத்துக்கும் காரணம் ஒரு ஆசிரியை. மேதா நிறைய எழுதுவாள். தன் நோட்டுப் புத்தகத்தில் பல கருத்துக்களில் கதைகளும், கவிதைகளும் எழுதிய வண்ணம் இருப்பாள். கிராமப்புறத்தில் மழை, பறவைகள், வானம், ஒரு ஏழைச் சிறுவனும் அவன் குடும்பமும் என்பன போன்ற பல கருத்துக் களில் அவள் எழுதியிருந்தாள். அவற்றைப் படித்த ஆசிரியை அவளை வியந்து பாராட்டினார்.

“இவை ஒவ்வொன்றும் நன்றாக இருக்கின்றன. இவற்றில் சிலவற்றை நம் பள்ளிப் பத்திரிகையில் பிரசுரிக்க எடுத்துக் கொள்ளலாம் என்று நினைக் கிறேன். ஆனால் அனைத்தையும் உன் பெயரில் பிரசுரிக்க முடியாது; அதனால், சிலவற்றை வேறு மாணவ-மாணவியர் பெயரில் பிரசுரித்தால் உனக்கு ஆட்சேபணை ஏதும் இல்லையே?” என்று அவர் மேதாவைக் கேட்டார்.

தான் எழுதியவை பிரசுரிக்கப்படப் போகின்றன என்ற மகிழ்ச்சியில் அவளும் இதற்கு உடனே ஒப்புக் கொண்டாள். வெவ்வேறு பெயரில் பிரசுரிக்கப்பட்ட கவிதைகளில் ‘ஸந்த்ரா ஆனி லிம்பு’ என்ற கவிதை சுனிதாவின் பெயரில் பிரசுரமாகி, பரிசுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தது.

நாடகத்திற்காக அணிந்திருந்த தலைமை யாசிரியர் உடையில் இருந்த மேதா, மௌனமாகத் தேம்பிக் கொண்டிருந்தாள். அவளால் தனக்கு இழைக்கப்பட்ட அநீதியைப் பொறுத்துக் கொள்ள

முடியவில்லை. ஒருவேளை அந்த ஆசிரியை கவிதையை எழுதியது யார் என்ற உண்மையை அவையினருக்குச் சொல்லியிருந்தால்கூட அவள் தான் பரிசு வாங்காததைப் பொருட்படுத்தி இருக்க மாட்டாள். ஆனால் ஆசிரியை ஏதும் கூறாமல் மௌனமாக இருந்ததுதான் அவளை அதிகம் பாதித்தது. துக்கமும், கூச்சமும் மேதாவைத் தானே பரிசுக்கு நியாயமான உரிமையாளர் என்று அவையில் அறிவிக்க விடாமல் தடுத்தன.

ஆனால் வீட்டிற்கு வந்த பிறகு அவளால் தன் துக்கத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. "அவர்கள் செய்தது நியாயமே இல்லை! அக்கவிதையை எழுதியது நான். எனக்குப் பரிசு கிடைக்காததைப் பற்றிக்கூட வருத்தமில்லை, ஆனால் இப்பொழுது எல்லாரும் அக்கவிதையை சுனிதாதான் எழுதி யிருக்கிறாள் என்று நம்புகிறார்கள்!" என்று தன் தாயிடம் தேம்பினாள் மேதா. "ஆசிரியையோ, சுனிதாவோ இதை மறுத்துச் சொல்லவில்லை."

அவள் தாய் திருமதி. கனோல்கர் இதைக் கேட்டுக் கோபமுற்றார்! "இது மிகத் தவறான செயல்! உங்கள் தலைமையாசிரியரிடம் நாளை நான் வந்து பேசுகிறேன்!" என்று கூறி மேதாவைச் சமாதானம் செய்தார் அவர்.

அடுத்த நாள் காலைக் கூட்டத்தில் தலைமை யாசிரியர், பத்திரிகையின் சிறந்த எழுத்துக்கான பரிசு நியாயமாக மேதாவுக்குச் சேரவேண்டியதுதான் என்று கூறி, நடந்த தவறுக்கு வருத்தமும் தெரிவித்தார். அதன் பிறகுதான் மேதாவின் நீதிப் போராட்டம் முடிந்தது.

சுறுசுறுப்பும், கலகலப்பான பேச்சும் கூடிய மேதா என்றுமே நியாயத்திற்காகப் போராடுபவள். மென்மையான உணர்வுகளைக் கொண்ட அவள், தன்னைச் சுற்றிலும் நடப்பவற்றில் ஈடுபாடு கொண்டு அநியாயங்களைக்கண்டு வெகுண்டு எழுவாள். நியாயம் கிடைக்கும் வரை போராடுவது அவள் இயல்பு. அவளுடைய தாய், அஞ்சல் அலுவலகத்தில் தன் வேலை நேரம் போக, எஞ்சிய நேரத்தில் சமூகத் தொண்டு புரிபவர். தந்தையோ தொழிற்சங்கத் தலைவர். அவர்களிடமிருந்துதான் மேதா சிறுவயது முதற்கொண்டே பிறருடைய தேவைகளை அறிந்து அவர்களுக்கு உதவும் பான்மையைக் கற்றிருந்தாள்.



அவளுடைய இந்த இயல்புதான் மும்பையில் செம்பூரில் அவர்கள் வசித்து வந்த மத்திய தர குடியிருப்புப் பகுதியில் அவளைப் பிரபல மாக்கி அனைவருடைய அன்பையும் பெறக் காரணமாக இருந்தது.

அவள் வயதையொத்த மற்ற பெண்களைப் போலல்லாமல் மேதா எப்பொழுதும் எதாவது செய்துகொண்டேயிருப்பாள். தான் பங்கெடுக்கப்போகும் பட்டிமன்றம் அல்லது பேச்சுப் போட்டிக்காக ஆயத்தம் செய்து கொள்வதோ, அக்கம் பக்கத்திலுள்ள சிறுவர் சிறுமியரின் கைகளில் அழகான மெஹந்தி (மருதாணி) வரைவதோ, கதைகள் சொல்வதோ, எதுவாக இருந்தாலும் மேதா எப்போதும் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருப்பாள். அவள் வரைகின்ற மெஹந்தி அக்குடியிருப்பில் மிகவும் பிரபலம். பாட்டிலும், நடிப்பிலும்கூட அவளுக்கு ஆர்வம் நிறைய இருந்ததால் அப்பகுதியில் நடக்கும் கலை நிகழ்ச்சிகளில் பங்குபெற அவளுக்கு நிறைய அழைப்புகள் வருவதுண்டு.

மேதா 12 வயதாக இருக்கும்போது அவளுக்கு ஒரு நூல்நிலையம் ஆரம்பிக்கும் எண்ணம் தோன்றியது. அவளிடமோ பணம் இல்லை! அதனால் பழைய பத்திரிக்கைகளிலிருந்து படக்கதைகள், கேலிப் படங்கள், சிறுவர்கள் படித்து மகிழக்கூடிய கட்டுரைகள் மற்றும் குழந்தைகள் பகுதிகளைக் கத்தரித்து நோட்டுப்புத்தகங்களில் ஒட்டினாள். இப்புத்தகங்களை அவள் தன் குடியிருப்புப் பகுதியில் மற்றும் பக்கத்திலிருந்த குடிசைப் பகுதியிலிருக்கும் சிறுவர்களுக்குச் சுற்றுமுறையில் இலவசமாகக் கொடுத்தாள்.

அவளுக்கிருந்த ஏராளமான வேலைகளைச் செய்து முடிப்பதற்கு நேரமே இல்லாதது போல் இருக்கும்!

பேச்சுப் போட்டிகளுக்கு ஆயத்தம் செய்ய மேதா ஒரு புதுமையான முறையைக் கையாளுவது வழக்கம். கண்ணாடியின் முன்னால் நின்று, ஒரு நீண்ட மூச்சை உள்ளிழுத்துக் கொண்டு, தன் பிம்பத்தைச் சபையினராகப் பாவித்துக் கொண்டு, உரையைச் சொல்லிப் பார்ப்பாள். அப்படிப் பேசும்போது கண்ணாடியில் தெரியும் தஂஎ உருவத்தின் கஂஸகளுக்குள் உற்று

நோக்கியவாறு பேசுவாள்.

"பேசும்போது எப்பொழுதும் எதிரில் இருப்ப வர்களை கண்களுக்குள் பார்த்து பேசு. உண்மையும், நேர்மையும் உள்ளவர்கள் அப்படித்தான் செய்வார்கள். பிறரிடமிருந்து எதையாவது மறைக்க விரும்புவோர் மற்றும் அவமானத்தால் குன்றியிருப்பவர்தான் அடுத்தவரின் கண்களைத் தவிர்ப்பார்கள்," என்று மேதாவின் தாய் அவளுக்கு அடிக்கடி கூறுவார்.

அவர், மேதா பேசும்போது அவளுடைய உச்ச ரிப்பைச் சரிசெய்து, திருத்தி அவளை ஊக்குவிப்பார். "இது போதாது. உன்னால் இதைவிடச் சிறப்பாகச் செய்ய முடியும்," என்று அவளை இன்னும் சிறப்பாகச் செய்யத் தூண்டுவார்.

அவளுடைய பெற்றோர் அவளிடம் என்றும் பரிசுகள் வாங்கிவரும்படி கூறமாட்டார்கள். ஆனால் தன்னால் இயன்ற அளவு எதையும் சிறப்பாகச் செய்யத் தூண்டிய வண்ணம் இருப்பார்கள். அவர்கள் சொல்வதைப்போல் செய்தால் பரிசுகள் தானாகவே வந்து குவியும் விந்தையைக் கண்டு மேதா பலமுறை வியந்திருக்கிறாள்.

இவ்வளவு சுறுசுறுப்பாக இயங்கியும் மேதா வீட்டு வேலைகள் செய்வதை நிறுத்தியதில்லை. அன்றும் அவ்வாறுதான் ஏதோ வேலையில் ஈடுபட் டிருந்தபோது தோழி அல்கா, அவளை விளையாட அழைக்கும் குரல் கேட்டது. தன் வீட்டு பால்கனி யிலிருந்து பார்த்த மேதா, "என்னால் இப்பொழுது வர முடியாது அல்கா. எனக்கு நிறைய வேலைகள் இருக்கின்றன," என்றாள்.

"இன்று மாலை நாங்கள் எல்லோரும் 'அமர் ப்ரேம்' பார்க்கப் போகிறோம். நீ வருவாயா?" என்று அல்கா கேட்டாள்.

"ஊகூம். நான் பண்டார்கர் ஆன்டிக்கு இன்று மாலை அவருடைய திரைச்சீலைகளை மாட்டுவதற்கு உதவுவதாகக் கூறியிருக்கிறேன்."

"அதன் பிறகு சரேகா அக்காவுக்கு மெஹந்தி வரைந்துவிடவேண்டும். நான் என் வீட்டுப் பாடங் களைக்கூட எழுத வேண்டும்," என்றாள் மேதா. திரைப்படங்கள் பார்ப்பதில் அவ்வளவாக அவளுக்கு ஆர்வம் கிடையாது. மேலும் திரைப்படத்திற்குச் செலவழிக்க அவள் பெற்றோர் அவளுக்குக் கைச்



செலவுப் பணம் தருவது வழக்கமுமில்லை.

அன்று அவள் தன் நண்பர்களுடன் விளையாடப் போகாவிட்டாலும், மைதானத்திற்கு சாதாரணமாகப் போவது வழக்கம். அவளுடைய இனிமையான குணமும், விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையும் அனைவரையும் அவளைத் தங்கள் அணியில் சேர்த்துக்கொள்ள வைக்கும்.

அன்று விடுமுறை நாளாக இருந்ததால் அக்குடியிருப்பிற்கு சிறு வியாபாரிகள் பலரும் வந்து பொருட்களைக் கூவி விற்பார்கள். அவர்களில் பலர் அவள் தாயைப் பார்க்க வந்தார்கள். அவர்களுடைய சிக்கல்களைக் கேட்டறிந்து அவர்களுக்கு உதவி புரிவார். அன்றும் அது மாதிரி, பழைய துணிகளுக்குப் பதிலாகப் பாத்திரங்கள் தரும் ஒரு பெண்மணி மேதாவின் தாயைப் பார்க்க வந்திருந்தார்.

சமையலறையில் அவருக்கு உதவியாக இருந்த மேதாவிடம், "நான் இப்பொழுது வேலையாக இருக்கிறேன். அவளைப் பிறகு வரச்சொல்," என்றார், உடனே மேதா அங்கிருந்தவாறே தன் தாய் கூறியவற்றைக் கூவி அறிவித்தாள்.

"மேதா நீ அவ்வாறு கூவியழைத்தது எவ்வளவு அநாகரிகமாக நடந்துகொள்வது தெரியுமா? இங்கிருந்தே பதில் சொல்வதாக இருந்தால் நானே சொல்லியிருக்க மாட்டேனா? நீ எழுந்து போய் அவளை நேருக்குநேர் பார்த்துக் கூறுவாய் என்று தானே உன்னிடம் சொல்லச் சொன்னேன்? இது யாரிடமும் பேசுவதற்கான முறையல்ல. அதுவும் வியர்வை சிந்தி உழைக்கும் அவளைப் போன்ற தொழிலாளர்களை நடத்தும்விதம் இது அல்ல. இனி ஒருபோதும் இப்படிச் செய்யாதே, புரிந்ததா? மரியாதை இல்லாமல் நீ நடந்து கொண்டது இதுவே கடைசி முறையாக இருக்கட்டும்," என்று கூறினார். அவர் தன் குரலை உயர்த்தாவிட்டாலும் அதில் இருந்த கோபத்தை மேதாவால் உணர முடிந்தது.

அவள் பாத்திரம் விற்கும் பெண்மணியிடம் மரியாதை இல்லாமல் நடந்துகொள்வதாக நினைக்கவில்லை. அப்படித் தெரிந்திருந்தால் அவள் அவ்வாறு செய்திருக்க மாட்டாள். தன் தாய் சொன்னவுடன், சட்டென்று பெருங்குரலில் அவளிடம் அதைக்

கூறிவிட்டாள்; அவ்வளவுதான். பிறரிடம் மரியாதையாக நடந்து கொள்வதுதான் அவளும் அவள் தம்பியும் அவர்கள் பெற்றோரிடம் கற்ற முதல் பாடம். பெற்றோர்களும் தம் குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுப்பதையெல்லாம் கடைபிடித்தனர். தொழிலாளர்களிடம் அவர்கள் காட்டிய அன்பும், பரிவும் தான் அப்பகுதியில் வாழ்ந்தவர்களை அவர்கள்பால் ஈர்த்தது. தத்தம் குறைகளை அவர்கள் மேதாவின் பெற்றோரிடம் கூறி விடைகாண முயன்றனர்.

அன்று மாலை பல தொழிலாளர்கள் மேதாவின் வீட்டில் குழுமலாயினர். விரைவில் அறை நிரம்பி விட்டது. வந்தவர்கள் ஒருவருக்கொருவர் சுமுகமாக வணக்கம் தெரிவித்துக்கொண்டபோதும், கூட்டத்தில் சலசலப்பு மிகுந்திருந்தது. கோபத்தில் குரல்கள் உயர்ந்தன. மேதாவும், அவள் தம்பியும் அறையின் ஒரு மூலையில் உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்தனர். மேதா முகத்தின் எதிரே பிடித்துக் கொண்டிருந்த தன் புத்தகத்தின் மறைவிலிருந்து அறையில் நடப்பவற்றைப் பார்த்தும், கேட்டும் கொண்டிருந்தாள். அவள் தம்பியோ எந்த கவலையுமின்றி ஏதோ படம் வரைந்து கொண்டிருந்தான். அங்கு குழுமி இருந்தவர்களின் அனல் பறக்கும் பேச்சுக்களைப் புரிந்து கொள்ளும் வயது அவனுக்கு ஆகியிருக்கவில்லை. ஆலை ஒன்றில் ஏதோ தகராறு என்பதை அவர்களின் பேச்சுக்களிலிருந்து மேதா புரிந்து கொண்டாள்.

தன் எதிரில் சாயம் வெளுத்த குர்தா-ஜிப்பா அணிந்த, சற்றே பருமனான ஒருவரிடம் மேதாவின் தந்தை, "நிர்வாகத்தின் நிபந்தனைகளுக்கு உடன் படுவதற்கு முன்னால் அவற்றின் பின் விளைவுகளைப் பற்றி நினைத்துப் பார்த்திருக்க வேண்டாமா?" என்று கடுமையாகக் கேட்டார். "உங்கள் நடவடிக்கையால் இப்பொழுது நிர்வாகத்திற்கும் தொழிலாளர்களுக்கும் இடையிலான பேச்சுவார்த்தை எந்த அளவு பாதிக்கப் படப் போகிறது என்பதை சற்றேனும் சிந்தித்துப் பார்த்தீர்களா," என்று தொடர்ந்து கேட்டார்.

புத்தகத்தின் மறைவில் மேதா அவர் குரலைக் கேட்டு நடுங்கினாள். அக்குரலில் பேசும்போது அவள் தந்தை மிகவும் வலிமை உள்ளவராகவும் அச்சமூட்டுபவராகவும் அவளுக்குத் தோன்றுவார். அத்தொழிலாளி, பயந்தவாறே தன் பக்கத்தை எடுத்துச்



சொன்னார். அவர் பேசி முடிக்கும்வரை காத்திருந்த கனோல்கர், அவர் செய்த பிழைகளை ஒவ்வொன்றாகச் சுட்டிக் காட்டினார். விரைவில் அந்த மனிதருக்குத் தான் அறியாமையால் செய்த தவறுகள் புரிந்து அவரிடமே அவற்றைச் சரி செய்ய வழிகளைக் கேட்டறிந்தார்.

வெகுநேரம் கழித்து, அனைவரும் சென்ற பிறகு, மேதா மெல்ல தன் தந்தையிடம் சென்றாள். "அப்பா! நீங்கள் அவரிடம் ஏன் அவ்வளவு கோபமாய் இருந்தீர்கள்? அவர் தனக்குச் சரி என்று பட்டதைத்தானே செய்தார்?" என்று கேட்டாள்.

"தொழிற்சங்க விவகாரங்கள் பற்றி உனக்கு என்ன தெரியும் மகளே? போய் உன் பாடங்களைப் படி!" என்று கூறினார். அவருடைய குரலின் கடுமையின் பின்னால் அன்பு மறைந்திருந்தது. தான் சொன்னதைக் கேட்டு வாடிவிட்ட அவள் முகத்தைக் கண்டு, அவள் மீது இரக்கம் கொண்டவராய் அவளுக்கு எடுத்து உரைக்கலானார். "தொழிற்சங்கத் தலைவராக இருந்தால் சரியான முடிவுகள் எடுப்பது மிக அவசியம். ஏனென்றால் பல ஆயிரம் தொழிலாளர் களின் வாழ்க்கை ஒரு தவறான முடிவால் பாதிக்கப் படும் அபாயம் இதில் இருக்கிறது" என்று விளக்கினார்.

"அது எப்படி" என்று ஆவலுடன் கேட்டாள் மேதா.

"தொழிற்சங்கத் தலைவர்களான எங்கள் முதல் கடமை தொழிலாளர்கள்பால்தான் இருக்கவேண்டும், ஏனென்றால் தங்கள் குறைபாடுகளைத் தீர்த்து வைத்து தங்களுக்கு உதவ, அவர்கள் எங்களைத்தான் நம்பி யிருக்கிறார்கள். இத்தகைய நம்பிக்கை எங்கள் பொறுப்பை பன்மடங்காக்கிவிடுகிறது. ஒரு தொழிற் சங்கத் தலைவர் தான் பிரதிநிதியாக இருக்கும் தொழிலாளர்களின்பால் பொறுப்பும், நேர்மையும் இருப்பது மிக்க அவசியம். இந்த வேலையில் கவன மின்மைக்கு இடமே இல்லை, புரிந்ததா?" என்றார். அவள் வேறு ஏதாவது கேட்பதற்குள், "பேச்சுப் போட்டிக்காக நீ தயார் செய்த உரை எங்கே, அதைக் கொண்டுவா, பார்க்கலாம்," என்று பேச்சை மாற்றினார் அவர்.



அவள் எழுதிய உரைகளை எப்பொழுதும் அவர்

திருத்தித் தருவது வழக்கம். வாக்கியங்களை எப்படி அமைத்தால் அழுத்தம் தர முடியும் என்று அவளுக்குக் கற்றுக் கொடுத்தார். அவளுடைய தவறு களுக்காக பல முறை கோபிக்கவும் செய்வார். மேதாவுக்குத் தன் தாய் மென்மையாகக் கற்பித்தது அதிகம் பிடித்தாலும், தன் தந்தையிடம் உரையைக் காட்டி திருத்தாமல் இருந்ததே இல்லை!

மேதாவுக்குத் தன் தாயுடன் வெளியில், அதிலும் மும்பையின் நெரிசலும், கலகலப்பும் மிகுந்த தாதர் பகுதிக்குச் சென்று பொருட்கள் வாங்குவது மிகவும் பிடித்த விஷயம். அங்குள்ள கடைக்காரர்களுக்கு அவள் தாயை நன்றாகத் தெரிந்திருந்ததால் அவரை இன்முகத்துடன் வரவேற்றனர். தீபாவளி நெருங்கிக் கொண்டிருந்ததால் துணிமணி வாங்கும் பொருட்டு மேதா தன் தாயுடன் தாதர் சென்றாள். அவளுக்காக சரிகை மற்றும் பூ வேலைப்பாடுகளுடன் கூடிய ரோஜா வண்ண குட்டைப் பாவாடை ஒன்று வாங்கினார் அவள் தாய்.

திரும்பும்போது அவர்கள் பேருந்துக்காகக் காத்திருந்தனர். மேதா தன்னைச் சுற்றி நோட்டம் விட்டாள். வரிசையில் நிற்பவர்களைக் கவனிப்பது அவளுக்கு அலுக்காத ஒன்று. அவர்களைப்பற்றி மனதுக்குள் கதைகள் புனைவது அவளுக்கு ஒரு பொழுதுபோக்கு. உதாரணத்திற்கு, அதோ வெற்றிலை குதப்பியவாறு நிற்கும் அந்த தடிமனான மனிதர், பணம் வசூல் செய்யச் சென்று கொண்டிருக்கும் ஒரு சிறு வியாபாரியாக இருக்கக்கூடும். அவர் முகம் கடுமையாக இருப்பதிலிருந்து மேதா அந்த முடிவுக்கு வந்திருந்தாள். அவருக்குப் பின்னால் மராத்தி செய்தித் தாளைப் படித்துக் கொண்டிருக்கும் நடுவயதுப் பெண்மணி பள்ளி ஆசிரியையாக இருக்கலாம். அவள் முகம் சிரிப்பில்லாமல் கடுமையாக இருந்தது. மேதா, அந்தப் பெண்மணி தன் வகுப்பில் தொல்லை கொடுக்கும் மாணவனின் காதைத் திருகுவதாகக் கற்பனை செய்துபார்த்தாள்.

அதன்பின் அவள் பார்வை இடுப்பில் ஒரு குழந்தையுடன் பின்னால் நிற்கும் இளமங்கையின் மீது விழுந்தது. அவள் மிகவும் களைத்துக் காணப்பட்டாள். அவள் புடவையைப் பிடித்துக் கொண்டு ஒரு சிறுவன் நின்றிருந்தான். மேதாவுக்குக் குழந்தைகளை மிகவும்



பிடிக்கும். அவள் அச்சிறுவனைப் பார்த்து புன்முறுவல் செய்தாள். அவன் தன் தாயின் பின்னால் ஒளிந்துகொண்டான். மேதா குனிந்து அவனை எட்டிப்பார்த்தாள். அவனும் எட்டிப் பார்த்துச் சிரித்தான்.

அவனுடைய தாயின் முகத்தில், மேதா அவனுக்கு விளையாட்டுக் காட்டுவதைக் கண்டு நிம்மதி படர்ந்தது. அதுவரை அவன் அவளை மிகவும் நச்சரித்துக் கொண்டிருந்தான். மேதாவைப் பார்த்து புன்முறுவலித்து அவள் பெயரைக் கேட்டாள். மேதா அவளுடன் வெகு நாட்கள் பழக்கப்பட்டவள்போல் பேசலானாள்.

"அம்மா, பசிக்குது. ஒரு பத்து பைசா தாருங்கள்!" அவளருகில் மராத்தியில் ஒரு குரல் கேட்டது. மேதா திரும்பினாள்.

நடுங்கும் கையை நீட்டியவாறு ஒரு பிச்சைக் காரக் கிழவன் நின்றிருந்தான். அவன் தலை தன்னிச்சையாக ஆடியது. அவன் முகத்தில் தாடி வளர்ந்திருந்தது; கண்கள் நீர் நிரம்பி அழுவதைப் போலிருந்தன; அவன் அணிந்திருந்த உடைகள் கிழிந்து



தொங்கின. குளிக்காத அவன் உடலிலிருந்து நாற்றம் வீசியது.

அந்த வயதான பெண்மணி புடவைத் தலைப்பால் தன் மூக்கை மூடிக்கொண்டார்; இளம் தாயோ முகத்தைத் திருப்பிக் கொண்டாள். குட்டிச் சிறுவன்கூட அம்மாவின் பின்னால் ஒளிந்துகொண்டு கிழவனைப் பயந்த கண்களுடன் பார்த்தான். இவற்றையெல்லாம் பார்த்த மேதாவுக்கு வேதனையாக இருந்தது. எல்லாரும் ஏன் இப்படி நடந்து கொள்கிறார்கள் என்று புரியவில்லை.

கிழவன் சாதுவாக, நல்லவனாகக் காணப்பட்டான். "பாவம்! அவன் வீட்டில் தண்ணீர் இல்லை போலும்! அதனால்தான் அவனால் குளிக்கவோ,





துணிகளைத் துவைக்கவோ முடியவில்லை. இல்லாவிட்டால் அவன் ஏன் இவ்வளவு அழுக்கான உடைகளை அவன் அணிய வேண்டும்?" என்று அவள் நினைத்தாள்.

மற்றவர்கள் கிழவன் இருப்பதையே மறந்து விட்டாற்போலிருந்தது. மேதாவின் கற்பனை கொடி கட்டிப் பறக்கலாயிற்று.

பிச்சைக்காரனுக்கு நிச்சயமாக குடும்பம் ஒன்று இருக்க முடியாது. இருந்திருந்தால் அவனை இவ்வாறு பிச்சையெடுக்க அனுமதித்திருக்க மாட்டார்கள். அவனுக்கென்று ஒரு குடும்பம் இருந்தால் இந்நேரம் பேரப் பிள்ளைகள் அவனிடம் கதை கேட்டுக் கொண்டு இருந்திருப்பார்கள். அவன் அன்பு மிக்க தாத்தாவாக இருந்திருப்பான்! ஆனால் இப்பொழுதோ அவன் எல்லாராலும் வெறுக்கப்பட்ட ஒரு பரிதாபமான மனிதனாக இருந்தான்.

அப்போது யாரோ அவனை நோக்கி சில்லறையை வீசினார்கள். நடுங்கிய கைகளால் அதைப் பிடித்துக்கொள்ள முடியவில்லை; அது சாலையில் உருண்டோடியது. தள்ளாடியவாறே குனிந்து அதைத் தேடலானான். மேதாவால் இதற்கு மேல் அதைப் பார்த்து பொறுத்துக் கொண்டிருக்க முடியவில்லை. அவளும் சட்டென்று குனிந்து சில்லறையைத் தேடலானாள். அதை அலட்சியமாக வீசியெறிந்த மனிதரின் மீது அவளுக்குக் கோபம் வந்தது. அவள் தனியாக இருந்திருந்தால் அவரிடம் தான் அவரைப் பற்றி என்ன நினைக்கிறாளென்று கூறியிருப்பாள். ஆனால் தாய் உடனிருந்ததால் ஏதும் சொல்லவில்லை.

அவள் சில்லறையைத் தேடுவதற்குள் அவர்கள் போகவேண்டிய பேருந்து வந்துவிட்டது. "மேதா, சீக்கிரம் வா!" என்று அவள் தாய் அழைத்தார். கீழே சில்லறையைத் தேடிக் கொண்டிருந்த மேதாவின் கையைப் பிடித்து அவர் அவசரமாக இழுத்தார்.

"இருங்கள்!" என்று கூறிய மேதாவை நிற்க விடாமல் அவளுக்குப் பின்னால் பொறுமை இழந்து வரிசையில் இருந்தவர்கள் முன்னோக்கித் தள்ளினர். அனைவருக்கும் பேருந்தில் ஏறுவது ஒன்றே குறிக் கோளாக இருந்தது. யாருக்கும் அந்த ஏழைப் பிச்சைக் காரனைப் பற்றி கவ ா ல இருந்ததாகத் தெரியவில்லை.

அவன் பாவம் இன்னும் தன் சில்லறையைத் தேடிக் கொண்டிருந்தான்.

பேருந்தில் ஏறிய பிறகு மேதா, தன் கைப்பையி லிருந்து பயணச் சீட்டுக்கான பணத்தை எடுத்துக் கொண்டிருந்த தன் தாயைப் பார்த்து வேதனை யடைந்தாள். அனைவரையும் மரியாதையுடனும், அன்புடனும் நடத்த வேண்டும் என்று அவளுக்கு வலியுறுத்திக் கூறும் அவள் தாயே பிச்சைக்காரனைப் பற்றிக் கவலைப்படவில்லை என்பதை நினைத்து மேதாவுக்கு துக்கம் தொண்டையை அடைத்தது. கண்களில் தளும்பிய தண்ணீர் வழிந்தோடும் நிலையில் இருந்து.

பிச்சைக்காரனுக்கு நாணயம் கிடைத்து விட்டதா இல்லையா என்று தெரிந்துகொள்ள அவள் கழுத்தை வளைத்து ஜன்னலுக்கு வெளியே பார்க்க முயன்றாள். ஆனால் ஜன்னலுக்கருகில் அமர்ந்திருந்தவர்கள் அவளை எரிச்சலுடன் பார்க்கவும், அவள் பின்னால் நகர வேண்டி வந்தது. கிழவனுக்கு நாணயம் கிடைக்காமலேயே போய் அவன் பட்டினி கிடக்க நேர்ந்திருக்குமோ என்று அஞ்சினாள். அவளைப் பொறுத்தவரை, அன்றைய பொழுது அவளுக்குக் கசந்துவிட்டது.

மனிதர்கள் இன்னொரு சக மனிதனின் துயரத் தால் பாதிக்கப்படாமல் எப்படி இருக்க முடியுமென்று அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. "ஏழையாக இருப்பவர்களை எல்லாரும் வெறுப்பார்களா?' இதையே நினைத்து நினைத்து அவளுக்குக் கோபமும், கையாலாகாத்தனமும் அவளை ஆட்கொண்டன. இந்த நிலையினை எப்பாடுபட்டாவது என்றாவது ஒருநாள் மாற்றியே தீரவேண்டும் என்று முடிவு செய்தாள். அன்று வாங்கியிருந்த ரோஜா வண்ணப் பாவாடையை அணியும் போதெல்லாம் அந்தக் கிழவனின் நினைவு வந்து கொண்டேயிருக்கும் என்பதால், என்றுமே அதை அணிவதில்லை என்றும் முடிவு செய்தாள்.

ஏழைகளுக்காக ஏதாவது செய்யவேண்டுமென்று நினைத்தது மட்டுமல்ல, அவள் அதைச் செயல்படுத் தினாள். அவளுக்குப் பதினான்கு வயதாக இருக்கும் போது குடிசைப் பகுதிகளுக்குச் சென்று அங்கு வசிக்கும் மக்களுக்கு சுகாதாரம் மற்றும் எழுத்தறிவு



கற்பித்தாள். மற்ற சிறுவர்களுடன் சென்று அங்குள்ள குழந்தைகளுக்குக் கதைகளும் சொன்னாள். ஏழை எளியவர்களுக்கு உதவும் மனப்பான்மை அவளுக்கு இயற்கையாகவே இருந்தது. அவள் பெற்றோரும் இதனை ஊக்குவித்தனர்.

இவ்வேலைகளை எல்லாம் துவங்கி சுமார் ஒரு வருடத்திற்குப் பிறகு மேதா, அவர்கள் குடியிருப்பில் நடந்த இரத்ததான முகாமுக்குச் சென்றாள். தானும் இரத்ததானம் செய்ய வேண்டுமென்று அவள் விரும்பினாள். ஆனால் அங்கிருந்த மருத்துவர்களுக்கு அவள் கையில் ரத்தம் எடுக்குமளவிற்கு பெரிய நாளம் கிடைக்கவில்லை. “வீட்டிற்குப் போ. மகளே! பெரியவளானதும் திரும்பி வா,” என்று அன்புடன் கூறினர். ஆனால் மேதாவோ அவர்கள் ரத்தத்தை எடுத்துக்கொள்ளும்வரை அங்கிருந்து நகரவேயில்லை.

அவள் வளர வளர, அவளுடைய சமூகத் தொண்டுகளும் முறையாக வளர்ந்தன. சமூகப் பணியில் மேல்நிலை பட்டப்படிப்பை முடித்தவுடன் மேதா, சமூகத்தின் நலிவுற்றோரின் நலனுக்காக, அவர்கள் சுற்றுச்சூழலுடன் இயைந்து, அமைதியாக வாழ்வதற்காகப் போராட ஆரம்பித்தார்.

# எளியோரின் ஆதரவாளர்

டிசம்பர் 1, 1954ஆம் ஆண்டு பிறந்த மேதா பாட்கர், பல தொண்டு அமைப்புக்களுடன் இணைந்து பணியாற்றினார். எழுபதுகளிலும், எண்பதுகளிலும் மும்பையின் குடிசைப் பகுதிகளின் வளர்ச்சித் திட்டங்களைத் தலைமை தாங்கி நடத்தினார். பின்னர் குஜராத்தின் வடகிழக்குப் பகுதியில் வாழும் பழங்குடி மக்களிடையே ஈடுபட்டிருக்கும் நடவடிக்கைக் குழுக்களுடன் சேர்ந்து தொண்டாற்றி அவர்களின் உரிமைகளுக்காகவும், முன்னேற்றத்துக்காகவும் போராடலானார்.

1985ஆம் ஆண்டு அவர் நர்மதை ஆற்றின் குறுக்கே அணை கட்டப்படவிருந்ததை எதிர்த்துப் போராடுவதற்காக 'நர்மதா பச்சாவோ ஆந்தோலன்' எனும் அமைப்பைத் துவங்கினார். இந்த அணை கட்டி முடிக்கப்பட்டால் பல நூறு கிராமங்களை மூழ்கடித்து, மகாராஷ்டிரம், மத்தியப்பிரதேசம் மற்றும் குஜராத் மாநிலங்களில் வாழும் ஆயிரக்கணக்கான விவசாயிகளையும் பழங்குடி மக்களையும் இடம் பெயர வைக்கும் அபாயம் இருக்கிறது. நர்மதா பச்சாவோ ஆந்தோலனுக்கு இந்தியாவிலும், வெளி நாடுகளிலும் நர்மதா ஆக்ஷன் கமிட்டி என்ற பெயரில் ஆதரவுக் குழுக்கள் இருக்கின்றன.

மேதா பாட்கர் நேஷனல் அலையன்ஸ் ஆஃப் பீப்பிள்ஸ் மூவ்மென்ட் என்ற அமைப்பின் ஒருங் கிணைப்பாளரும் ஆவார். இவ்வமைப்பு, மக்கள் போராட்டங்களின் மூலமாக வளர்ச்சி குறித்த விஷயங்களுக்காகப் போராடுகிறது.

பள்ளி மற்றும் கல்லூரி நாட்களில் பேச்சுப் போட்டிகள், பட்டி மன்றம் மற்றும் நாடகங்களில் பரிசுகள் வாங்கிக் குவித்த மேதா பாட்கர், பின்னாளில் தன் சமூகத் தொண்டிற்காக தேசிய அளவில் பல



விருதுகள் வாங்கியிருக்கிறார். சர்வதேச அளவிலும் அவர் விருதுகள் பெற்றிருக்கிறார். மாற்று நோபல் பரிசு என்று அழைக்கப்படும் 'ரைட் டு லைவ்லி ஹூட் அவார்ட்' (சுவீடன் 1992), கோல்டுமேன் சுற்றுச்சூழல் பரிசு (அமெரிக்கா 1993) மற்றும் சிறந்த சர்வதேச அரசியல் இயக்கவாதி (1995) என்ற விருது ஆகியவற்றால் கௌரவிக்கப் பட்டார்.



# மௌனத்தின் நிறங்கள்

"சதீஷ்! இன்று நீ ஏன் பள்ளிக்கூடம் வரவில்லை?"

இக்கேள்வியை சுரேந்தர் மூன்று முறை கேட்ட பிறகுதான் அது சதீஷ் காதில் விழுந்தது. அவன் கண்களை மூடியவாறு படுத்திருந்தான். அவன் நெற்றியில் வியர்வை முத்து முத்தாகப் பூத்திருந்தது.

"எனக்கு உடம்பு சுகமில்லை," என்றான் சதீஷ். சிறிது காலமாகவே அவனுக்கு அடிக்கடி சுகமில்லாமல் இருந்தது.

"ஏன், உன் உடம்புக்கு என்னவாயிற்று, சதீஷ்?" கவலையுடன் கேட்ட சுரேந்தர் அவன் நெற்றியைத் தொட்டுப் பார்த்தான்.

"எனக்குத் தெரியவில்லை சுரேந்தர். என் காலில் செய்யப்பட்ட அறுவை சிகிச்சைக்குப் பிறகுதான் என் உடல்நிலை இவ்வளவு மோசமாகிவிட்டது. தலை வெடித்துச் சிதறி விடும் போன்று தலைவலி வருகிறது. அதன் பின் ஒன்றுமே கேட்பதில்லை; எல்லாமே நிசப்தமாகவும் இருட்டாகவும் போய்விடுகின்றன. எனக்கு எல்லாமே மிகவும் வெறுமையாக இருக்கிறது. அது சரி, நீ ஏன் இவ்வளவு மெதுவாகப் பேசுகிறாய்? எனக்கு காதே கேட்கவில்லை," என்றான் சதீஷ். சுரேந்தர் அவனை விநோதமாகப் பார்த்தான். அவன் உரக்கத்தான் பேசிக் கொண்டிருந்தான்! ஒரு வேளை



சதீஷுக்குக் காது கேட்காமல் போய் விட்டதோ என்று அவன் கவலை கொண்டான்.

பாவம் சதீஷ்! அதற்கு முந்தைய வருடம் அவன் குடும்பத்துடன் காஷ்மீருக்குப் போய் வந்ததிலிருந்தே உடல் நலமில்லாமல் துன்பப் பட்டுக் கொண்டிருந்தான். அங்கிருந்த பள்ளத்தாக்கில் தன் தந்தை மற்றும் அண்ணன் இந்தருடன் அவன் நடைப்பயணம் மேற்கொண்ட போது ஒரு விபத்து நேர்ந்தது. அவர்கள் போகும் வழியில் ஒரு காட்டாற்றின் மீது உடைந்து விழும் நிலையிலிருந்த மரப்பாலத்தைக் கடக்க வேண்டியிருந்தது. சிறுவர்கள் இருவரும் பாலத்தின்மீது நின்றவாறு சுழித்துக் கொண்டோடும் நீரை ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தனர்.

"அண்ணா, அங்கே பார், தண்ணீர் எப்படி நுரைத்துக்கொண்டு ஓடுகிறதென்று!'' சதீஷ் உற்சாகமாகச் சுட்டிக்காட்டினான். அடுத்த கணமே அவன் கால் தவறி தண்ணீருக்குள் விழுந்தான்! அவன் அபாயக் கூக்குரல் தண்ணீரின் இரைச்சலில் கேட்கவில்லை. கண்விழித்துப் பார்த்தபோது அவன் கால்களிரண்டும் மாவுக்கட்டு போடப்பட்டிருந்தன; தலை கனத்து வலித்தது; உடலெங்கும் சிராய்ப் புக்களும் காயங்களும் வலியைத் தந்தன.

பல அறுவை சிகிச்சைகளுக்குப் பிறகும் அவன் கால்கள் வெகு பலவீனமாகவே இருந்தன. காய்ச்சலும் காது சம்பந்தப்பட்ட தொல்லைகளும் அடிக்கடி அவனை வாட்டின.

இவற்றையெல்லாம் நினைவுகூர்ந்த சுரேந்தர், சதீஷ் வலியால் துடிப்பதைக் கண்டான். அவன் ஓய் வெடுக்கட்டும் எனக் கருதி, கிளம்பத் தயாரானான்.

"நாளை பள்ளிக்கூடம் வருவாயா?" சதீஷைக் கேட்டான். மாட்டேனென்று தலையசைத்தான் சதீஷ். அவன் போனபிறகு சதீஷின் கண்களிலிருந்து ஒரு கண்ணீர்க்கோடு அவன் கன்னத்தில் வழிந்தோடியது. அவனுக்குத் தன் தலையை ஏதோ பெரிய பாரம் அழுத்திக் கொண்டிருப்பது போலவும் எல்லாமே எங்கோ தொலைவிலிருப்பது போலவும் இருந்தது. எல்லாவற்றுக்கும் மேல் ஒருவித மயான அமைதி அவனை வாட்டியது. படுக்கையில் படுத்திருப்பது

அவனுக்குப் பெரும் தண்டனையாகவும் வேதனை யாகவும் இருந்தது.

எங்கும் நிலவிய அமைதி அவனை மிகவும் பாதித்தது. சில சமயம் அவனுக்கு எதுவுமே கேட்காது. அவனைச் சுற்றி நடக்கும் அனைத்தும் ஊமைப் படங்கள் போலிருக்கும். அவனுக்குச் சில சமயம் உரக்கக் கத்தி அவ்வமைதியைக் குலைக்க வேண்டும் போலிருக்கும். எட்டே வயதான சதீஷுக்கு இது பயங் கரமான அனுபவமாக இருந்தது. டாக்டர்களுக்கே அவனுடைய நோய் என்னவென்று புரியவில்லை. கால்களைக் குணப்படுத்த அவனுக்கு கொடுத்த மருந்துகளினால் வந்த ஏதோ பின்விளைவு அது என்று மட்டுமே அவர்கள் அறிந்திருந்தனர்.

சதீஷ் அடிக்கடி விடுப்பு எடுப்பதையும், காது கேளாமையையும் காரணம் காட்டி பள்ளி நிர்வாகம் அவனைப் பள்ளியிலிருந்து நீக்கப் போவதாக அவன் தந்தை திரு. அவ்தார் நாராயணனிடம் தெரிவித்தது. "வேறு பள்ளியில் உன்னைச் சேர்க்கிறேன் சதீஷ்," என்று அவன் தந்தை கூறினார்.

சதீஷ் வேண்டாமென்று தலையசைத்தான். அவனுக்குப் புதிய பள்ளிக்குப் போய் அங்குள்ள மாணவர்களுடன் சாதாரணமாக பேசிப் பழக முடியாமல் இருப்பதில் விருப்பமில்லை. தவிர அவன் காது கேளாமையைப் பார்த்து அவர்கள் அவனை கேலி செய்வதையும் அவன் விரும்பவில்லை.

"மகனே, நீ பள்ளிக்குச் சென்று படிப்பது மிக அவசியம். படிப்பறிவு இல்லாமல் வாழ்க்கையில் நீ என்ன செய்வாய்?" என்று அவன் தந்தை கேட்டார்.

அவர் பேசியது அனைத்துமே சதீஷ் காதில் விழவில்லை என்றாலும் அவர் என்ன சொல்கிறார் என்பதை அவனால் ஊகிக்க முடிந்தது. அவனுக்குப் பலவாறும் எடுத்துக்கூறி, புரியவைத்து, வற்புறுத்திய பின் ஒருவாறு பள்ளிக்குப் போக ஒப்புக்கொண்டான்.

ஆனால் அங்கும் அவர்களுக்கு ஏமாற்றமே மிஞ்சியது. அவன் கேட்கும் திறனை இழந்திருந்ததால் அனுமதிக்க இயலாது என்று கூறிவிட்டனர். "இது சாதாரணமான சிறுவர்கள் படிக்கும் பள்ளிக் கூடம். உங்கள் மகனை நீங்கள் செவிட்டூமைகள் படிக்கும் பள்ளியில் சேர்த்து விடுங்கள்," என்று அப்பள்ளியின் தலைமையாசிரியர் சதீஷின் தந்தைக்கு யோசனை



கூறினார். தந்தைக்கோ, இதைக் கேட்டு கோபம் வந்து விட்டது.

"ஐயா, என் மகன் ஊமையில்லை! அவனுக்குக் காதில் மட்டும் சிறு கோளாறு இருப்பதால் கேட்கும் திறன் பாதிக்கப்பட்டிருக்கிறது. அவ்வளவுதான்," என்று அவர் எவ்வளவோ வாதாடியும் பயனில்லை. அவர்கள் சென்ற மற்ற பள்ளிகளிலும் இதையே கூறினார்கள். மனமொடிந்த தந்தையும் மகனும் வீடு திரும்பினர்.

அன்று மாலை அவன் தந்தையின் நண்பர் ஒருவர் அவர்கள் வீட்டிற்கு வந்தார். சிறிது நேரம் ஊர்க் கதைகள் பேசியபிறகு அவர் சதீஷின் பள்ளிப் படிப்பைப் பற்றி கேட்டார். அவர்களுக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தைப் பற்றி அவன் தந்தை அவரிடம் கூறினார்.

"சதீஷை ஊனமுற்றோர் பள்ளியில் சேர்க்கலாமே! அங்கு ஏதாவதொரு தொழிலைக் கற்றுக் கொண்டு பிழைப்புக்கான வழி தேடலாம் அல்லவா," என்று அவர் கேட்டார்.

சதீஷின் தந்தை அத்தகைய பள்ளிகளைப் பற்றி நன்றாகவே அறிவார். அப்பள்ளிகளில் பொதுவாக ஊனமுற்ற சிறுவர்களுக்குக் கூடை பின்னவும், பிரம்பு நாற்காலி வேயவும்தான் கற்றுக்கொடுக்கப்படும் என்பது அவருக்குத் தெரியும். அச்சிறுவர்களுக்கு அநேகமாக முறையான படிப்பறிவும் தரப்படாது. இதனால் அங்கு படிக்கும் மாணவர்கள் திறமையுள்ள தொழிலாளர்களாகத்தான் இருக்க முடிந்தது. அவரால் தன் மகன் அத்தகையதொரு பள்ளியில் படிப்பதைக் கற்பனைகூட செய்துபார்க்க முடியவில்லை.

மனமொடிந்து போனாலும் அவர் நம்பிக்கை இழக்கவில்லை. ஆனால் சதீஷ் பெரிதும் பாதிக்கப்பட்டவனாய் உற்சாகமிழந்து காணப்பட்டான். கேட்கும் திறனை முற்றிலும் இழந்து விட்டதால் யாருடனும் அதிகம் பேசமுடியவில்லை. அண்ணன் இந்தர் அவனுடன் மணிக்கணக்கில் உட்கார்ந்து அவனுக்குப் புதிய வார்த்தைகளையும், உச்சரிப்பையும் கற்றுக் கொடுத்தார். அக்கம் பக்கத்துச் சிறுவர்களின் ஏச்சுக்கும், கேலிப் பேச்சுக்கும் பயந்து சதீஷ் சிறுகச் சிறுக விளையாடப் போவதைக்கூட தவிர்த்தான்.

தந்தையோ, அவனைப் படிக்க வைப்பதிலேயே குறியாக இருந்தார். "வாழ்க்கையில் முன்னேற வேண்டுமானால் நீ நிறைய படிக்க வேண்டும். நல்ல நூல்களிலிருந்து நிறைய விஷயங்களைப் பற்றி அறிந்து கொள்ளலாம்," என்று அவன் தந்தை அவனுக்கு அடிக்கடி கூறுவார். அவனுக்குப் படிக்க நிறைய நூல்களை வாங்கியும் கொடுத்தார். சதீஷ் அவற்றைப் புரட்டிப் பார்த்தான். உருது மொழியில் லாலா லஜபத் ராயால் மொழி பெயர்க்கப் பட்ட 'கரிபால்டியின் வாழ்க்கை வரலாறு', முன்ஷி ப்ரேம்சந்த் மற்றும் சரத்சந்திரரின் எழுத்துத் தொகுப்புக்கள் போன்ற பல நூல்கள் அவற்றில் இருந்தன.

புத்தகங்களின் வழியே சதீஷுக்கு முன்பாக ஒரு புதிய உலகம் பரந்து விரிந்தது. விரைவில் அவன் ஒரு புத்தகப் புழுவாகி விட்டான்! ஆனால் அவன் படித்த புத்தகங்களில் சில, சற்று வளர்ந்த சிறுவர்களுக்கு எற்றதாகவும், மற்றும் சில, பெரியவர்கள் மட்டுமே படிக்கக் கூடியவையாகவும் இருந்தன. இதனால் அவற்றைப் படித்து அவன் மகிழ்ச்சி அடைவதைக் காட்டிலும் துக்கமே அதிகம் அடைந்தான். அவன் படித்த நூல்கள் அவனுடைய மென்மையான மனதில் ஆழமாகப் பதிந்துவிட்டன. தன் உலகத்தைத் தாண்டி மற்றொரு உலகம் இருப்பதையும், அது தன்னுடைய உலகத்தைவிட துன்பமும் வேதனையும் மிக்கது என்றும் அறிந்து மனவேதனை அடைந்தான். அத்துடன் ஒப்பிட்டால் தான் வாழும் உலகம் மிகவும் இன்பமயமாக இருப்பதாக அவனுக்குத் தோன்றியது. அது ஏன் என்று நீண்ட நேரம் அவன் விடை கிடைக்காமல் சிந்தித்தான்.

மீண்டும் ஒருரு முறை காய்ச்சல் தாக்கியது. அவனை படுக்கையை விட்டு இறங்கவும் முடியாமல் செய்து விட்டது. படுக்கையிலேயே உட்கார்ந்து ஜன்னலுக்கு வெளியே பார்ப்பதும், புத்தகங்கள் படிப்பதையும் தவிர அவனால் வேறெதுவும் செய்ய முடியவில்லை. தான் மிகவும் தனித்து விடப்பட்டது போல் அவன் உணர்ந்தான். தன் பரிதாபமான நிலை கண்டு அவனுக்கு ஒருவித சோர்வு மனப்பான்மை வந்துவிட்டது.

ஒருநாள் அவன் ஜன்னல் வழியே தோட்டத்தின் ஒரு மூலையைப் பார்த்துக் கொண்டிருந்தபோது



அங்கு ஒரு அதிசயமான பறவையைக் கண்டான். அதுபோல் ஒரு பறவையை அவன் அதுவரை பார்த்ததே இல்லை. அதன் வால் இறகு நீளமாகவும், தலையில் கருவண்ணக் கொண்டையும் இருந்தன. இவை இரண்டையும்விட அவனை அதிகம் கவர்ந்தது, அதன் சுறுசுறுப்புத்தான். அதன் கண்கள் அங்கும் இங்கும் குறுகுறுவென்று அலை பாய்ந்த வண்ணம் இருந்தன; அதன் சிறு உடலோ எக்கணமும் பறப்பதற்கு தயாராக இருந்தது! சதீஷ் அந்த அழகிய பறவையை நீண்டநேரம் பார்த்துக் கொண்டே இருந்தான்.

சற்று நேரத்தில் அது அவன் புறம் திரும்பி ஒரு பார்வை பார்த்துவிட்டு அங்கிருந்து பறந்துபோய் விட்டது. அது சென்றவுடன் சதீஷ் கட்டிலில் இருந்து இறங்கி தன் நோட்டையும் பென்சிலையும் எடுத்துக் கொண்டு, தன் மனதில் பதித்து வைத்திருந்த அதன் உருவத்தை வரையலானான். ஒரு சில கோடுகளில் அதனை லாகவமாக அப்படியே அச்சாக வரைந்தும் விட்டான். அவனுக்குத் தான் வரைந்த படம் மிகவும் பிடித்ததால் அதனைத் தன் கட்டிலுக்கு அருகிலிருந்த மேசையின்மீது புத்தகங்களின் மேல் சாய்த்து வைத்தான்.

அன்று கட்டிலில் அமர்ந்தபடி தனக்கு ஏற்ற மற்றொரு பொழுதுபோக்கைக் கண்டுபிடித்து விட்டதில் அவனுக்கு மிகுந்த மகிழ்ச்சி. அதன்பின் அவன் சித்திரங்கள் வரைந்து பல நோட்டுப்புத்தகங் களை நிரப்பினான். அவன் வரைந்த சித்திரங்கள் அவன் மனநிலையைப் பொறுத்து கோபமாகவோ, அமைதியாகவோ, நகைச்சுவை உணர்வுடன் கூடியோ இருந்தன. சித்திரங்கள் போல் இருக்கும் உருது கையெழுத்தில் அவன் தேர்ந்தவனாக இருந்ததால் சித்திரம் வரைவதும் அவனுக்கு எளிதாக வந்தது.

அவன் தந்தை தன் மகனின் இந்த பொழுது போக்கைச் சிறிதும் விரும்பவில்லை. அவன் வரைந்து வைத்திருந்த நோட்டுப்புத்தகங்கள் அனைத்தையும் அங்கிருந்து அவர் அப்புறப்படுத்திவிட்டார். "இது ஒரு வெட்டிப் பொழுதுபோக்கு. இதற்குப் பதிலாக புத்தகங்கள் படித்தாயானால் அறிவாவது வளரும்," என்று அவர் மகனிடம் கூறினார்.

தந்தையின் செய்கையைக் கண்டு அவன் மனம் பொருமினாலும், வரைவதை நிறுத்தவில்லை. "அவனுடைய பொழுதுபோக்கை ஏன் தடுக்கிறீர்கள்?" என்று அவன் தாய்கூட அவரைக் கேட்டார்.

"ஓ, அதுவா? ஓவியத்தால் பணம் சம்பாதித்து வாழ்க்கை நடத்த முடியுமென்று அவன் நினைத்து விடக்கூடாதென்றுதான் நான் அவற்றை அகற்று கிறேன். ஓவியர்கள் பெரும்பாலும் வறுமையில் வாடு வதற்குக் காரணம் அவர்களுக்கு வருமானம் குறைவு என்பதுதான். சதீஷ் போன்ற புத்திசாலிப் பையனுக்கு இது ஏற்ற தொழில் இல்லை. அவன் படித்துத் தன் அறிவை வளர்த்துக் கொண்டால்தான் எதிர்காலம் நன்றாக இருக்கும். தவிர, அவன் காது எந்நேரமும் குணமாகக் கூடும். அவ்வாறு கேட்கும் திறனை அவன் திரும்பப் பெற்றால் பள்ளிக்கூடத்தில் சேரத் தயாராக இருக்க வேண்டாமா?" என்று அவர் மனைவியைக் கேட்டார்.

"இத்தோடு அவன் உடல்நலம் குன்றி மூன்று வருடங்கள் ஆகிவிட்டன. இனியும் அவன் கேட்கும் திறனைத் திரும்பப் பெறுவான் என்று எப்படி நம்ப முடியும்," என்று சதீஷின் தாய் கேட்டார். அவருக்குத் தன் மகன் சாதாரணமாக ஓடியாடி வளைய வருவானென்று சிறிதும் நம்பிக்கை இருக்கவில்லை. ஆனால் அவன் தந்தையோ அவன் நிச்சயம் குணமடைந்து விடுவானென்று உறுதியாக நம்பினார்.

"அவன் வாழ்நாள் முழுவதும் செவிடாகவே இருப்பான் என்று ஏன்நினைக்க வேண்டும்? அவன் சீக்கிரமே குணமடைய வாய்ப்பிருக்கிறது என்று நம்பிக்கையுடனே இருப்போம்" என்று அவர் அடிக்கடி தம் மனைவிக்கு மென்மையாக எடுத்துக் கூறுவார்.

இதன் பின்னும் பலமுறை டாக்டர்களைச் சந்தித்ததுதான் மிச்சம். அவன் உடல்நிலையிலோ, கேட்கும் திறனிலோ ஏதும் முன்னேற்றமில்லை. தன் அமைதி நிறைந்த உலகில், தான் வரையும் ஓவியங்களின் துணையுடன் வாழ்ந்து வந்தான். தந்தை எவ்வளவு மறுப்புக் கூறினாலும் அவன் ஓவியம் வரைவதை நிறுத்தவே இல்லை.

ஒருநாள் அவன் மும்முரமாக வண்ணங்களைக் குழைத்துக் கொண்டிருந்தபோது தன் தந்தை



கதவினருகில் நிற்பதை உணர்ந்தான். தலையை உயர்த்திப் பார்த்த சதீஷ், தான் வரைந்திருந்த ஓவியத்தையே வைத்த கண் வாங்காமல் அவர் பார்த்துக் கொண்டிருந்ததைக் கண்டான். சதீஷின் முகம் சிவந்துவிட்டாலும் வண்ணங்கள் குழைப்பதை நிறுத்தவில்லை.

அவன் தந்தை மெல்ல அறைக்குள் வந்து அருகில் அமர்ந்தார். "உனக்கு ஓவியம் வரைவதில் மிக்க ஆர்வம், இல்லையா, சதீஷ்?" என்று கேட்டார். அவனுக்கு மட்டும் காது சரியாகக் கேட்டிருந்தால் அவர் குரலில் இருந்த நடுக்கத்தைக் கவனித்திருப்பான். அனால் அப்பொழுது அவனால் உதட்டசைவை மட்டும் படிக்க முடிந்தது. அவன் பதிலேதும் பேசவில்லை. அவன் தந்தை மெல்ல அவன் தோளைத் தொட்டார். அவர் தன்னைக் கோபித்துக் கொள்ளப் போகிறார் என்று நினைத்த சதீஷுக்கு அவருக்கு கோபமில்லையென்பதை நம்பவே முடியவில்லை!

சற்று நேரத்தில் வெளியே சென்ற அவர், ஓரிரு மணிநேரத்தில் வண்ணங்கள், பல அளவுகளில் தூரிகைகள் மற்றும் காகிதச் சுருள்களைக் கைநிறைய ஏந்தியவாறு சதீஷின் அறைக்குள் வந்து மேசையின் மீது கவனமாக வைத்தார்.



''அப்பா...'' சதீஷ் அவரை மெதுவாக அழைத்தான். அவர் தலையை மெல்ல அசைத்துப் புன்னகைத்தார். ஆனால் அவர் கண்களிலோ சோகம் நிரம்பியிருந்தது.

"இதெல்லாம் உனக்குத்தான் சதீஷ். இங்கிருக்கும் மிகச் சிறந்த கலைப் பள்ளியில் உன்னைச் சேர்க்க ஏற்பாடு செய்யப்போகிறேன். கலைப்படிப்புப் படித்து உனக்குப் பிடித்த துறையிலேயே நீ வாழ்க்கையை அமைத்துக் கொள்ளலாம்." அவர் பேசுவதைக் கேட்ட சதீஷின் கண்களில் நீர் நிறைந்தது. இறுதியில் அவர் அவனுடைய கலையார்வத்தை அங்கீகரித்து விட்டார்! தன் எதிர்காலம் ஓவியத்தில்தான் இருக்கிறது என்பதை அவர் உணர்ந்து விட்டார் என்பதை அறிந்த அவன் உணர்ச்சி மிகுதியால், தான் அதுவரை செய்யாத ஒரு செயலைச் செய்தான். அவரை இறுகத் தழுவிக் கொண்டான். அக்கணம் அவன் மனதில் கண்டிப்பு மிகுந்த தன் தந்தையின் பால் அன்பு பெருக்கெடுத்தது.





அதன்பிறகு எல்லா ஏற்பாடுகளும் துரித மாக நடைபெற்றன. சதீஷை லாகூரிலிருந்த புகழ் பெற்ற மேயோ கலைப் பள்ளியில் சேர்த்தார். அங்கு சேர்ந்து அவன் சீக்கிரமே ஓவியக் கலையைத் தவிர வாழ்க்கையைப் பற்றிய பல்வேறு விஷயங்களைக் கற்றறிந்தான். ஊனமுற்றவர்களிடம் மற்றவர்கள் எவ்வளவு குரூரமாக நடந்து கொள்கிறார்கள் என்பதை அனுபவத்தில் உணர்ந்தான். பள்ளியிலிருந்த மற்ற மாணவர்கள் நல்ல பண்பாடு மிக்க குடும்பத்திலிருந்து வந்த சதீஷ் போலல்லாமல் பல்வேறு சூழ்நிலை களிலிருந்தும் வந்தவர்கள்.

"அங்கு பார், துரை பெரிய புத்தகமெல்லாம் படிக்கிறார்!" என்று ஏதாவதொரு மாணவன் கூவவும், சதீஷ் உஷாராவதற்குள் மற்ற மாணவர்கள் அவன் புத்தகத்தை வீசியெறிவார்கள். முக்கால்வாசி மாணவர்கள் அவன் அறிவைக் கண்டு பொறாமைப் பட்டனர். மற்றும் சிலர் அவன் குடும்பத்தின் செல்வச் செழிப்பையும், அவன் அணியும் நல்ல உடைகளையும் கண்டு ஆத்திரமடைந்தனர். அவர்களுடைய நடத்தை கண்டு அதிசயப்பட ஏதுமில்லை, ஏனெனில் அவர்கள் பெரும்பாலும் எழுத்தறிவுகூட இல்லாதவர்கள்.

சதீஷ் பல சமயம் தன்னைத் தனிமையாக உணர்ந்தான். இது அவனை மிகவும் வருத்தத்துக்கு உள்ளாக்கியது. இச்சமயங்களில் அவனுக்கு உறுதுணை யாக இருந்தவர் அவனுடைய அண்ணன் இந்தர்தான். அவர் லாகூர் கல்லூரி ஒன்றில் அப்பொழுது படித்துக் கொண்டிருந்தார். அவர் தன் தம்பியைக் கலைப்பள்ளியின் உற்சாகமற்ற சூழ்நிலையிலிருந்து விடுவித்துத் தன்னுடன் கல்லூரிக்கு அழைத்துச் சென்று அங்கு தன் தோழர்களை அறிமுகம் செய்து வைத்தார். அவர்கள் அனைவரும் விழிப்புணர்ச்சி கொண்ட இளைஞர்கள். அவர்களுடன் பழகியதால் சதீஷ் பல புதிய விஷயங்களைப் பற்றி அறிந்து கொண்டான். ஆனால் பள்ளிக்குத் திரும்பியதும் துயரமும், தனிமையும் அச்சிறுவனைத் திரும்பவும் ஆட்கொண்டன.

நல்லவேளை, அவனுக்குப் பள்ளியில் ஓரிரு நல்ல நண்பர்கள் மட்டும் இல்லாமல் இருந்திருந்தால் அவனால் தொடர்ந்து அங்கு படிக்க இயலாமல்

போயிருக்கும். ஒருநாள் வகுப்பில் ஆசிரியர் இல்லாத நேரத்தில் சதீஷ் அவருடைய மேசைக்கருகில் சென்றான். அவனுடைய நண்பன் சமன்லாலும் கூட இருந்தான். இருவரும் மாணவர் பதிவேட்டைப் புரட்டிக் கொண்டிருந்தனர். பெயர்களைப் படித்துக் கொண்டே வந்த சதீஷ், 'போலா' (அசடு) என்ற பெயரைப் பார்த்ததும் சற்றே நின்றான்.

"யார் இந்த புதுப்பையன் போலா?" ஒவ்வொரு வார்த்தையையும் கஷ்டப்பட்டு, மெதுவாக உச்சரித்த வாறு கேட்டான்.

அவன் நண்பன் உடனே பதில் சொல்லாமல் அவன் கண்களைத் தவிர்த்தான். சதீஷ் திரும்பவும் அதே கேள்வியைக் கேட்டபிறகுதான் அவன் பேனாவை எடுத்து மெல்ல, "அது நீதான்" என்று காகிதத்தில் எழுதினான்.

சதீஷ் மௌனமானான். ஓ, இப்படித்தான் மற்ற மாணவர்கள் அவனைக் கூப்பிட்டார்களா? அது போகட்டும். ஆசிரியரும் அவன் பெயரை 'போலா' என்றல்லவா எழுதியிருந்தார்? சமன்லால் அவன் தோள்மீது கைபோட்டுக் கொண்டான், ஆனால் சதீஷின் மனக்காயம் அவ்வளவு எளிதில் ஆறவில்லை.

"இவ்வுலகத்தில் என்னை மற்றவர்களுக்கு இணையாக்க ஏதாவது ஒன்று இருக்குமானால், அது என் கலை மட்டுமாகத்தான் இருக்கும்," என்று அச்சிறுவன் அக்கணம் நினைத்தான். 'ஒருவர் ஒரு ஓவியத்தைப் பார்க்கும்போது அதை வரைந்தவர் செவிடா, ஊமையா, நொண்டியா என்று ஆராய்ச்சி செய்யமாட்டார். நான் மிகச் சிறந்த ஓவியனாக வருவேன்; ஒருவேளை நான் மற்றவர்களைக் காட்டிலும் சிறப்பாகக்கூட ஓவியம் வரையக்கூடும். அப்பொழுது யாரும் என்னை 'போலா' என்றழைத்து என் காது கேளாமையைக் கேலி செய்ய முடியாது," என்று அவன் அன்று தீர்மானித்தான்.

வளர்ந்து பெரியவனானதும் தான் நினைத்ததை நிறைவேற்றினான். இன்று சதீஷ் குஜ்ரால் உலக அளவில் மிகச்சிறந்த கலைஞர்களுள் ஒருவராகக் கருதப்படுகிறார்.



# சதீஷ் இப்பொழுது என்ன செய்து கொண்டிருக்கிறார்?

சதீஷ் குஜ்ரால் இந்தியாவின் முன்னணி ஓவியர்களில் ஒருவர். ஓவியம், சிற்பம், கட்டிடக்கலை போன்ற பல துறைகளிலும் தேர்ச்சி பெற்றவர் இக்கலைஞர். இவர் ஒரு எழுத்தாளரும்கூட.

இவருடைய படைப்புகள் நியூயார்க்கிலிருக்கும் நவீன ஓவியக் கண்காட்சிக் கூடம் (மியூசியம் ஆஃப் மாடர்ன் ஆர்ட்) வாஷிங்டனில் இருக்கும் ஹிரோஷிமா தொகுப்புகள் மற்றும் புதுதில்லியில் உள்ள நவீன ஓவியக் கலைக்கூடம் (நேஷனல் கேலரி ஆஃப் மார்டன் ஆர்ட்) போன்ற உலகத்தின் பல புகழ் பெற்ற பொருட்காட்சிக் கூடங்களில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. கலைத்துறையில் தன்னுடைய படைப்புக்களைப் பற்றி இவர் இதுவரை நான்கு நூல்கள் வெளியிட்டுள்ளார்.

புதுதில்லியில் சதீஷ் குஜ்ரால் வடிவமைத்த பெல்ஜியம் நாட்டின் தூதரகத்தின் வடிவமைப்புக்காக அவருக்கு 20ஆம் நூற்றாண்டின் மிகச்சிறந்த கட்டிட வடிவமைப்புக்கு வழங்கப்படும் பரிசான 'ஆர்டர் ஆஃப் த க்ரௌன்' வழங்கப்பட்டுள்ளது. அவர் பத்ம விபூஷண் பட்டத்தாலும் கௌரவிக்கப்பட்டுள்ளார்.

திரு. குஜ்ரால் தம் துறையில் ஈட்டியுள்ள புகழும் பெருமையும், வெற்றிக்கு உடல் ஊனம் எந்த விதத்திலும் தடையாக முடியாது என்பதற்குச் சிறந்த சான்று.



# சிகரத்தைத் தேடி

"குலு, எழுந்துநில்! நீ எழுதியிருப்பது ஒரு வார்த்தை கூடப் புரியவில்லை!" என்றார் கணித ஆசிரியர். அவர் கையிலிருந்த நோட்டுப்புத்தகத்தில் ஒரே கிறுக்கலாக இருந்தது.

வகுப்பு முழுவதும் சிரித்தது. குலு தலையைக் குனிந்தபடி உட்கார்ந்திருந்தாள். அவள் ஒரு பரீட்சை யிலும் தேற மாட்டாள். வீட்டுப் பாடங்கள் செய்யாத தற்கு, அதைத் தவறாக செய்ததற்கு, வகுப்பில் பாடங் களைச் சரியாக எழுதாதற்கு என்று பலவற்றுக்கும் அவளை ஆசிரியைகள் எப்பொழுதும் திட்டியவாறே இருந்தனர்.

"பாவம் குலு!" என்று லீலா மனதிற்குள் எண்ணினாள், ஆனால் தன் வகுப்புத் தோழியின் மீது அதிக நேரம் இரக்கப்படவில்லை, ஏனென்றால் அன்று அவள் மிகவும் மகிழ்ச்சியாக இருந்தாள். அன்று வெள்ளிக்கிழமையாதலால் அவளுடைய அண்ணன்கள் வார இறுதி விடுமுறைக்காக வீட்டிற்கு வரவிருந்தனர்.

"லீலா! என்ன பகற்கனவு காண்கிறாய்?" ஆசிரியை அவளை அதட்டினார். அன்று அவர் சரியான மனநிலையில் இல்லை போலும்!

தன் பெயர் அழைக்கப்படுவதை உணர்ந்த லீலா



தன் நிலைக்கு வந்தாள். ஆனால் சிறிது நேரத்தில் தன் அண்ணன்களுடன் என்ன விளையாடுவது என்று திட்டமிடுவதில் திரும்பவும் மூழ்கிவிட்டாள்.

லீலாவின் தந்தை திரு. சேட் ரயில்வே துறையில் பணியாற்றியதால் நாடெங்கும் வேலை நிமித்தமாக அடிக்கடி அனுப்பப் படுவார். அவர் மனைவியும் அவருடன் ஊர் ஊராகச் செல்ல வேண்டியிருந்ததால் குழந்தைகளை வீட்டில் விட்டுச் சென்றனர். மகன்கள் ராஜ்குமாரும், சசியும் டார்ஜிலிங்கிலுள்ள ஒரு விடுதி பள்ளியில் படித்தனர். லீலா மட்டும் அவ்வூரிலேயே இருந்த சேட் குடும்ப நண்பர்களான தத் தம்பதிகளுடன் தங்கிப் படித்து வந்தாள். தத் தம்பதியர் அவளிடம் அன்பும், பாசமும் வைத்திருப்பினும், அவர்கள் வீட்டில் வேறு குழந்தைகள் இல்லாததால் லீலா பலமுறை தனிமை யாக உணர்ந்தாள். இதனாலேயே அவள் வார இறுதி விடுமுறைக்காகவும் அவள் அண்ணன்களின் வருகைக்காகவும் காத்திருப்பாள்.

அவள் அண்ணன்மார்களோ அவளுடைய மகிழ்ச்சியில் பங்கு கொள்ள மாட்டார்கள். அவளை விட ராஜ்குமார் மூன்று வயது பெரியவன்; சசி ஒன்றரை வயதும் மூத்தவன். அவர்களைப் பொறுத்த மட்டில் அவள் ஒரு பெரிய தொல்லை! அவர்கள் மரங்களின் மீதேறியும், ஓடிப்பிடித்தும் விளையாடும் போது அவளும்கூட வந்து அவர்களைத் தொல்லைப் படுத்துவதாக நினைத்தனர். தன்னை அவர்களுடன் விளையாட விடவில்லையே என்று லீலா கோபப் பட்டாள்.

"இதோ பார் லீலா... நாங்கள் விளையாடப் போவது ஆண்கள் விளையாட்டு. தவிர, எங்கள் நண்பர்களும் வரப்போகிறார்கள், புரிந்ததா?" என்றான் ராஜ்குமார். மூவரிலும் மூத்தவனான அவனுக்கு அவர்களை அதிகாரம் செய்யப் பிடிக்கும். "மரமேறும் பெண்களைப் பற்றி யாராவது கேள்விப்பட்டிருக் கிறார்களா?" என்று சிரித்தான் அவன்.

"ஏன் கூடாது? உன்னையும், உன் நண்பர் களையும்விட நான் நன்றாக மரம் ஏறுவேன், தெரியுமா? இன்னும் கேட்டால், உங்களை விட வேகமாக என்னால் ஏறமுடியும், ஏனென்றால் நான்

உருவத்தில் உங்கள் எல்லாரையும்விடச் சிறியவள்!" என்று சவால் விட்டாள் அவள். "நீங்கள் ஒப்புக் கொண்டாலும், ஒப்புக் கொள்ளாவிட்டாலும் நான் வரத்தான் போகிறேன்'' என்று தீர்மானமாகக் கூறினாள் லீலா. தங்கையின் பிடிவாதத்தைப் பற்றி நன்றாகவே அறிந்திருந்ததால் அவர்கள் பதிலேதும் கூறவில்லை.

"சரியான தெறியாட்டப் பெண், இல்லை?" என்று கேட்டான் சசி. அவளுடைய இந்த குணத் திற்காக அவன் அவளுக்கு இட்டிருந்த பட்டப்பெயர் 'த்ரில்லி.' தான் அவளைத் தெறியாட்டப் பெண் என்று அழைத்ததால் அவள் கோபப்பட்டு விளையாட வரமாட்டாள் என்று அவன் அவன் நினைத்தான்; ஆனால் அது எவ்வளவு தவறான எண்ணம் என்பது அவனுக்குச் சிறிது நேரத்திலேயே புரிந்து விட்டது. லீலாவும் அவர்களுடைய குணத்தை நன்கு அறிந்தவள்தான். அதனால் அவர்கள் அவளுக்குத் தெரியாமல் வெளியே போகக் கிளம்புவதற்குள், அவர்களைத் தாண்டி மின்னலென ஓடி, ஒரே தாவலில் அருகிலிருந்த மரத்தில் ஏறி உட்கார்ந்து விட்டாள் லீலா!

மரத்தின் உச்சாணிக் கிளையில் உட்கார்ந்து கொண்டு, "உங்களைத் தோற்கடிப்பேன் என்று சொன்னேன் அல்லவா?" என்று எக்காளமிட்டாள்.

அவள் அண்ணன்கள் இருவரும் பெருமூச்சு விட்டனர். அவர்கள் இருவரும் சேர்ந்துகூட அவளைச் சமாளிக்க முடியாமல் திணறினர்! மரம் ஏறுவதற் காகக் பிடிவாதம் பிடிக்காவிட்டால், அவர்கள் செய்யும் ஒவ்வொரு வேலையிலும், விளையாடும் விளையாட்டிலும் பங்கேற்க முன்னால் வந்து நிற்பாள். அவர்களுக்கோ மாளாத எரிச்சல்!

"உன் தொல்லையை நிறுத்தப் போகிறாயா இல்லையா?'' குரலைக் கடுமையாக வைத்துக் கொண்டு ராஜ்குமார் கேட்டான்.

'இல்லை'யென்று குறும்புடன் தலையாட்டிய லீலாவைப் பார்த்து அவர்களுக்கு அடக்க முடியாமல் சிரிப்பு வந்துவிட்டது. தன் குறும்புத் தங்கைமேல் அவர்களுக்கு பாசம் நிறையவே உண்டு.

சில சமயம் அவர்களின் தாய், அவர்களுடன் சில நாட்கள் இருப்பதற்காக டார்ஜிலிங் வருவதுண்டு.



அச்சமயங்களில் அவர் ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்துத் தங்குவது வழக்கம். ஓய்வு கிடைக்கும்போது அவர்கள் தந்தையும் வருவார். மற்றபடி விடுமுறைகளில் லீலாவும் அவள் அண்ணன்களும் தம் பெற்றோர் இருக்குமிடத்திற்கு செல்வது வழக்கம்.

லீலாவின் தாய்க்கு தன் மகள் பாட்டும் நடனமும் கற்க வேண்டுமென்று ஆசை. லீலா ஒரு துடிப்பான, அழகான பெண்ணாக இருக்கவே அவளை ஒரு சிறந்த நடனக் கலைஞராக்க முடியும் என்று நம்பினார். இதன் பொருட்டு அவர் ஒரு நடன ஆசிரியரையும், ஒரு பாட்டு ஆசிரியரையும் நியமித்தார். ஆனால் லீலாவுக்கோ அவற்றில் சிறிதும் ஈடுபாடு இருக்கவில்லை. அவள் போக்கில் அவளை விட்டால் புத்தகங்களைப் படித்துக்கொண்டு, விளையாடிக் கொண்டு, தம் அண்ணன்களுக்கு இணையாக போட்டி போட்டுக்கொண்டு, பெண்ணாக இருப்பதால் அவர்களைவிட தான் எந்த விதத்திலும் குறைந்தவளல்ல என்று நிரூபிப்பதுதான் அவளுக்கு மிகவும் பிடித்த விஷயங்கள்.

"நீ இத்தகைய முரட்டு விளையாட்டுக்களில் ஈடுபடுவதற்குப் பதிலாக படிப்பில் கவனம் செலுத்தினால் நான் மகிழ்ச்சியடைவேன்," என்பார் அவள் தாய். லீலாவோ, சரியான விளையாட்டுப் பெண்ணாக இருந்தாள். வீட்டுப் பாடங்கள் செய்வதோடு படிப்பு முடிந்துவிட்டதாக அவள் நினைத்தாள். தான் ஒரு நல்ல மாணவியென்று அவள் கருதினாள். ஏனென்றால் குலுவைப் போல் அவளை ஆசிரியைகள் திட்டுவதில்லையே!

லீலா அன்று மிகவும் மகிழ்ச்சியாக இருந்தாள். அவள் பெற்றோர் சில வாரங்கள் தங்குவதற்காக டார்ஜிலிங் வந்திருந்தனர். குடும்பம் முழுவதும் ஒன்றாக இருந்ததில் லீலாவுக்கு சந்தோஷம். அடுத்த வாரம் துவங்க இருந்த காலாண்டுப் பரீட்சையைப் பற்றிக் கவலைப்படாமல் லீலா விளையாட்டுக்களில் திளைத்திருந்தாள். இது போதாதென்று தன் அண்ணன்களுடன் சண்டை போட்டுக் கொண்டும் இருந்தாள். தனக்குத்தானே சிரித்துக் கொண்டு அவள் தோட்டத்தின் கோடியிலிருந்த பெரிய மரத்தில் கிடுகிடுவென்று ஏறத் துவங்கினாள்.

"லீலா, நீ பள்ளியிலிருந்து வந்ததிலிருந்து விளையாடிக் கொண்டேயிருக்கிறாய்! எப்பொழுது தான் படிக்கப்போகிறாய்?" என்று கேட்டார் அவளுடைய தாய்.

மரத்தின் கிளையிலிருந்து தொங்கியவாறே, "நான் என் பாடங்களைப் படித்து முடித்து விட்டேன், மம்மி," என்று கூறினாள் அவள்.

"அப்படியானால் நான் உனக்கு ஒரு சிறிய பரீட்சை தருகிறேன் வா," என்றார் அவள் தாய். லீலாவுக்குத் திகில் ஏற்பட்டது! "இல்லை, இல்லை! எனக்கு இன்னும் கொஞ்சம் படிப்பதற்கு மிச்சம் இருக்கிறது. இன்று இரவு அதை முடித்துவிடுகிறேன். நீங்கள் நாளை என்னிடம் கேள்விகள் கேளுங்கள்!" என்று சமாளித்தாள்.

படிக்க ஆரம்பித்த பின்னரும் அவளால் ஒரு இடத்தில் அமர்ந்து கவனமாகப் படிக்க முடிய வில்லை. தண்ணீர் குடிக்கும் சாக்கில் அடிக்கடி எழுந்து வெளியில் வந்து விடுவாள்; அல்லது தன் அண்ணன்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்று பார்க்கச் செல்வாள். ஒன்றுமில்லாவிட்டால் ஜன்னலுக்கு வெளியே வேடிக்கை பார்ப்பாள். ஒவ்வொரு முறை புத்தகத்தை திறந்தபொழுது தனக்கு எல்லாம் தெரியும் என்று நினைத்தவளாய், மெத்தனமாக இருந்தாள்.

சற்று நேரத்திற்குப் பிறகு, படிப்பதாகப் பாவனை செய்வதையும் நிறுத்திவிட்டு, ஒரு கதைப் புத்தகத்தை எடுத்து வைத்துக்கொண்டு தூக்கம் கண்களைச் சுழற்றும்வரை படித்தாள்.

மற்ற கேளிக்கைகளில் ஈடுபட்டிருந்த லீலாவுக்கு நேரம் போனதே தெரியவில்லை. அடுத்த நாள் பரீட்சை என்றவுடன்தான் அவளுக்குத் தன் நினைவே வந்தது. மறுநாள் பள்ளிக்குச் செல்லும்போது தன்னம் பிக்கையுடன் கிளம்பிய அவளுக்கு, பள்ளி நெருங்க நெருங்க, தன் வகுப்பு மாணவிகள் பாடத்தைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்ததைக் கேட்டபிறகுதான் தனக்குப் பாதிக்குமேல் பாடங்கள் தெரியாது என்ற உண்மை உறைத்தது! பரீட்சைத்தாளில் எழுதியிருந்த கேள்விகள் எதுவும் அவளுக்குப் புரியவில்லை.

இருந்தும் தன் பயத்தை மறைத்தவாறு, விடைகளை எழுதத் துவங்கினாள். அவள் எவ்வளவு



வேகமாக எழுதினாள் என்றால், வகுப்பு மாணவர்களிலேயே அவள்தான் முதலில் பரீட்சையை எழுதி முடித்திருந்தாள்! தன்னைச் சுற்றிலும் மற்ற மாணவர்கள் இன்னும் எழுதிகொண்டிருந்ததை அவள் பார்த்தாள். குலுகூட மேஜைமீது கவிழ்ந்த வாறு ஏதோ எழுதிக் கொண்டிருந்தாள். "எல்லாரும் என்னதான் எழுதிக் கொண்டிருப் பார்கள்," என்று நினைத்த லீலாவுக்கு, முதன்முறை யாகக் கவலை ஏற்பட்டது. தான் பாதிக்குமேல் விடைகளை விட்டுவிட்டோமோ என்ற சந்தேகம் அவளுக்கு அப்பொழுதுதான் எழுந்தது. இதேபோல் மற்ற பரீட்சைகளிலும் நடந்தது.

பிறகு பள்ளியில் தர அறிக்கை கொடுக்கும் நாளும் வந்தது. ஆசிரியை, வகுப்பில் முதலிடம் பெற்ற மாணவியிலிருந்து தொடங்கி பெயர்களை அறிவிக்கத் தொடங்கினார். லீலா தன் பெயரை எதிர்பார்த்து



இருக்கையில் சாய்ந்து அமர்ந்துகொண்டாள். தான் பரீட்சையை நன்றாகத்தான் எழுதியிருந்ததாகவும், தனக்கு நல்ல மதிப்பெண்கள் கிடைத்திருக்குமென்றும் அவள் நம்பினாள்.





"இம்முறை பெலிண்டா முதலிடத்தில் இருக்கிறாள்" என்று அறிவித்தார் ஆசிரியை. அவள் தன் அறிக்கையை வாங்கச் சென்ற போது அனைவரும் கைதட்டி அவளுக்கு வாழ்த்து தெரிவித்தனர். சுமன் தாஸ் இரண்டாம் இடத்திலும், ஜாஸ்மின் மூன்றாம் இடத்திலும் இருந்தனர். கரவொலி தொடர்ந்தது. தன் பெயர் அறிவிக்கப் படாததை நினைத்து லீலா அதிகமாகக் கவலைப்பட வில்லை. ஆனால் சுமார் இருபது பெயர்கள் அறிவிக்கப் பட்ட பிறகு அவளுக்குக் கவலை பிடித்துக் கொண்டது. ஒருவேளை ஆசிரியை தன் பெயரை அறிவிக்க மறந்துவிட்டாரோ என்ற சந்தேகம் வந்தது.

இதற்குள் ஆசிரியை திரும்பவும் ஏதோ அறிவிக்கத் தொடங்கினார். "நான் இதுவரை அறிவித்தவை இந்த பரீட்சையில் தேர்ச்சி பெற்றவர் களின் பெயர்கள். இனி வரும் பெயர்கள் தோல்வி யுற்றவர்கள்-"

லீலாவுக்குத் தரை காலடியிலிருந்து நழுவினாற போலிருந்தது. அப்படியானால் நான் தோல்வியுற்று விட்டேனா? இருக்கவே முடியாது! வாயில் ஏதோ கசப்பாக உணர்ந்தாள். அதை விழுங்கிய போது அது தொண்டைக்குழியில் சிக்கியது. ஆசிரியை மற்ற மாணவிகளின் பெயர்களை அழைத்துக் கொண் டிருந்தார், ஆனால் லீலாவின் பெயர் மட்டும் இன்னும் அழைக்கப்படவில்லை. இனி எஞ்சியிருந்தது லீலாவும் குலுவும்தான். லீலா ஆடாமல் அசையாமல் உட்கார்ந்திருந்தாள். 'வகுப்பிலேயே மிக முட்டாளாகக் கருதப்படும் குலுவைவிட தான் எந்த விதத்தில் உயர்ந்தவள்?' என்று அவள் மனம் அவளை இடித்துக் காட்டியது.

அவளால் இதை நம்ப முடியவில்லை. தன் அம்மா சொல்லைக்கேட்டுச் சரியாகப் படித்திருக்க வேண்டுமென்று அவளுக்குத் தோன்றியது. தன் அண்ணன்களுடன் சண்டை போடுவதிலும், சிறு பிள்ளைத்தனமாக நடந்துகொள்வதிலும் நேரத்தை வீணாக்கியிருக்க வேண்டாமென்று அவள் நினைத்து வருந்தினாள்.

வீட்டை நோக்கி நடந்த அவள் கால்கள் பின்னின. தன் பெற்றோரிடம் என்ன கூறுவது என்று

அவள் யோசித்தவண்ணம் நடந்தாள். அதிலும் இன்னும் சிறிதே நாட்களில் திரும்பவும் கிளம்பப் போகும் தன் அப்பாவைக் குறித்தே கவலையாக இருந்தது. அவர் கோபித்துக் கொள்வாரா? தாய் தன்னைத் திட்டுவாரா? நினைக்க நினைக்க அவளுக்கு அவமானம் தாளவில்லை. குலுவும் தானும் ஒரே தரத்தினரா? இல்லை, இல்லை, தான் எப்படி இந்த நிலைக்குத் தாழ்ந்தோம் என்று நினைத்து நினைத்து வருந்தினாள் அவள்.

எப்படியானாலும் தன் பெற்றோருக்கு இந்தக் கெட்ட சமாச்சாரத்தைச் சொல்லியாக வேண்டும். வீட்டிற்குப் போனவுடன் நேரே தன் தந்தையிடம் போய்த் தன் அறிக்கைத்தாளை நீட்டினாள்.

"நான் பரீட்சையில் தோற்றுவிட்டேன்," என்று தரையைப் பார்த்தவாறு கூறினாள். அவள் குரல் கிசுகிசுப்பாய் வெளிவந்தது. அவளிடமிருந்து அறிக்கையை வாங்கிய அவள் தந்தை அதைப் பார்த்துவிட்டுத் தன் மனைவியிடம் கொடுத்தார். அவரும் அதனை ஒருமுறை பார்த்துவிட்டு மேசைமீது வைத்தார்.

"போய் முகம், கை, கால் அலம்பிக்கொண்டு பால் குடி" என்ற மட்டுமே கூறினார் அவர். அவர் கூறியது, ஏதோ பால்குடிப்பதுதான் அப்போதைய தலையாய பிரச்சினை என்பது போலிருந்தது. தன்னை தன் பெற்றோர் இருவரும் கோபிக்கப் போவதில்லை என்று அப்பொழுதுதான் அவள் உணர்ந்தாள். இது அவளுடைய குற்ற உணர்வை மேலும் அதிகரித்தது. மௌனமாக உள்ளே போய் பாலை அருந்திவிட்டு தன் அறைக்குப் போய் படுக்கையின் மேல் குப்புறப் படுத்துக் கொண்டாள் லீலா.

பல்வேறு எண்ணங்கள் அவள் மனதில் எழுந்து அச்சுறுத்தின. மற்ற மாணவிகள் குலுவைப் பார்த்துச் சிரித்ததுபோல் இப்பொழுது தன்னைப் பார்த்துச் சிரிப்பார்களா? "லீலா சரியான முட்டாள், இல்லை?" தன்னைப் பார்த்து ஒருவருக்கொருவர் இவ்வாறு கூறிச் சிரிப்பதாய் அவள் கற்பனை செய்து நடுங்கினாள். ஏழு வயதுச் சிறுமியான லீலாவுக்கு இதைவிடப் பயங்கரமான நிகழ்ச்சி எதுவுமே இருக்க முடியாது என்று தோன்றியது.

முதல்முறையாக அவளுக்கு குலுவின் மனநிலை



புரியலாயிற்று. மற்றவர்கள் அவளைப் பார்த்து சிரிக்கும்போது அவளுடைய முகம் எப்படி சிவக்கும் என்று நினைத்துப் பார்த்தாள். 'அவளைப் பார்த்து சிரித்ததற்காக எனக்கு இது நல்ல தண்டனைதான்,' என்று வெட்கினாள் லீலா. அறிவுத்திறன் குறைவாக இருப்பது அவளுடைய தவறு அல்ல? ஆனால் சற்று கவனமாகப் படித்திருந்தால் நல்ல மதிப்பெண்கள் பெற்றிருக்கலாமே? ஏன், முதல் இடத்தைக்கூட பிடித்திருக்கலாம்.

இவ்வாறெல்லாம் யோசித்துக் கொண்டிருக்கும் போது அவள் தந்தை அறைக்குள் வந்தார். முதலில், அவர் அழைத்ததும் தூங்குவதுபோல் பாசாங்கு செய்யலாம் என்று நினைத்தவள், அது நடக்து என்று தெரிந்தபின், எழுந்து உட்கார்ந்தாள்.

"லீலா, இன்னும் ஒரு வாரத்தில் நான் இங்கிருந்து கிளம்புகிறேன். ஆனால் நான் இப்பொழுது அதைப் பற்றிப் பேச வரவில்லை. உனக்குப் பரீட்சையில் இவ்வளவு குறைந்த மதிப்பெண்கள் ஏன் கிடைத்திருக் கின்றன என்று கேட்கவும் நான் வரவில்லை. ஏனென்றால் அதன் காரணம் எனக்கு ஏற்கெனவே தெரியும். உன் மனப்பான்மைதான் இதற்குக் காரணம். நீ படிப்பில் கவனம் செலுத்தவும் இல்லை; அதை ஒரு பொருட்டாக மதிக்கவும் இல்லை என்ற உண்மை எனக்குத் தெரியும். நம் எல்லாருக்கும் ஒவ்வொரு கடமை உண்டு. நன்றாகப் படிப்பதுதான் மாணவர் களின் கடமை.

"இது தவிர நான் மற்றொன்றும் சொல்ல விரும்பு கிறேன். நம்மில் ஒவ்வொருவரும் நாம் எது செய்தாலும் அதை மிகச் சிறப்பாகச் செய்ய கடமைப்பட்டிருக் கிறோம். நான் சொல்வதை மிகக் கவனமாகக் கேட்டு நினைவில் வைத்துக்கொள். செருப்புத் தைக்கும் தொழிலாளியாக இருப்பது கேவலமில்லை. ஆனால் அத்தொழிலாளி மட்டரக செருப்புக்களைத் தைப்பான் என்றால், அது கேவலமாகும்."

லீலா தன் தலையை மட்டும் அசைத்து ஆமோதித்தாள். உணர்ச்சியால் அவள் தொண்டை அடைத்து பேச முடியாமல் போனது. அக்கணம் அவளுக்குத் தன் தந்தையின்பால் அன்பு பெருக் கெடுத்தது. அவர் தன்னைக் கோபித்துக் கொள்வார்

என்று எதிர்பார்த்த அவளுக்கு, தன் திறமைக்கேற்ப மதிப்பெண்கள் பெறாததால் அவருக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தைக் கண்டு வருத்தமாக இருந்தது.

அவருடைய நம்பிக்கையைச் சிதைத்துவிட்டதாக அவள் நினைத்து, குற்ற உணர்ச்சியால் தவித்தாள். சிறிது நேரம் கழித்து அவள் தாயும் அவர் சொன்னதையே வேறு விதமாகக் கூறினார். அன்று லீலா பெரும் மனமாற்றத்திற்கு உள்ளானாள்.

மறுநாள் பள்ளியில் அவள் குலுவைப் பார்த்து முதல் முறையாகச் சிநேகத்துடன் முறுவலித்தாள். வகுப்பில் ஆசிரியை கேட்ட கேள்விக்கு அவள் தப்பும் தவறுமாகப் பதிலளித்தபோது மற்றவர்கள் சிரித்த போது லீலா மட்டும் சிரிக்கவில்லை. மற்றவர்கள் தன்னைப் பார்த்து சிரிக்கும் நிலைக்கு தான் எவ்வளவு சமீபத்தில் இருந்தோமென்று அவளுக்கு மட்டும்தானே தெரியும்? தவிர, அவளுக்குச் செய்ய வேண்டிய விஷயங்கள் எவ்வளவோ இருந்தன. ஆசிரியை நடத்திக் கொண்டிருந்த பாடங்களை கவனிப்பது அவற்றில் ஒன்று!

'என்னைப் பார்த்து யாரும் சிரிக்காத வண்ணம் நான் நடந்துகொள்வேன். எதைச் செய்தாலும் அதில் தோல்வியடையமாட்டேன்' என்று அன்று தலை நிமிர்ந்து உறுதி பூண்டாள் லீலா. ஒருமுறை தோல்வி யடைந்தது வாழ்நாளுக்கும் போதும்! தன் உறுதியைக் கடைபிடித்தாள் அவள். அரையாண்டு பரீட்சையில் அவள் முதலாவது இடத்தில் இருந்தாள். அன்றிலிருந்து அவள் அவ்விடத்தை யாருக்கும் விட்டும் கொடுக்க வில்லை. இரண்டாவது இடத்தில் வருவதைப் பற்றி அவள் நினைத்துக்கூட பார்க்கவில்லை! முதல் இடத்தில் இருந்தபோதும் ஒவ்வொரு பரீட்சையிலும் முன்னதைவிட அதிக மதிப்பெண்கள் எடுக்க முயன்று வெற்றியும் பெற்றாள். சுருக்கமாகச் சொன்னால், அவள் தன்னையே மேன்மேலும் சிறப்பாகச் செய்யத் தூண்டிய வண்ணம் இருந்தாள்.

சில ஆண்டுகளில் முதலிடம் வகிப்பது அவளுக்கு ஒரு பழகிய கலையான பிறகு, அவளுக்குத் தன் அண்ணன்களின் நண்பனான சுதந்திர வீர்சிங் ஜுனேஜா அறிமுகமானான். அவர்கள் வெவ்வேறு பள்ளிகளில் படித்தாலும் ஒரே வகுப்பு மாணவர்கள். அவனும் அவளைப்போல் ஒரு நல்ல மாணவன்.



அவன் அவர்களுடைய வீட்டிற்கு வரும் போதெல்லாம் இருவரும் தத்தம் பாடங் களைப் பற்றியும் தாங்கள் வாங்கியிருக்கும் மதிப்பெண்களையும் பற்றி விவாதித்தார்கள். அவனுடையதைவிட லீலாவின் மதிப் பெண்கள் குறைவாக இருந்தால் அவன் பெருமிதம் கலந்த புன்னகையொன்றை வீசுவான். இது லீலாவின் சுயகௌரவத்தைப் பாதித்துவிடும்! அதனை ஒரு சவாலாக ஏற்று அவனைவிட நன்றாகப் படிக்க முயற்சி செய்வாள்.

அடுத்த முறை அவனைவிட அதிக மதிப் பெண்கள் எடுத்தும் விடுவாள்! ஆனால் அதற்கடுத்த முறை அவன் அவளை மிஞ்சிவிடுவான்! ஒருவரை மற்றவர் மிஞ்சும் இப்போட்டியில் அவர்கள் தத்தம் திறமைத் தகுதியை உயர்த்திய வண்ணம் இருந்தனர்.

லீலாவுக்குத் தன் திறமையை வெளிக்கொணர் வதற்குத் தக்க போட்டி தேவைப்பட்டது. தன் மாணவ வாழ்க்கையில் அவள் தன் தகுதியை தாழ்ந்துபோக விடாமல் இருக்க முயற்சி செய்தாள்.

இப்போட்டி மனப்பான்மைதான் லீலாவை பின்னாளில் இங்கிலாந்தில் பார் இறுதி பரீட்சையில் அனைத்து மாணவர்களிடையே முதலிடம் வகிக்க உதவியது எனலாம். அவருடைய இச்சிறப்பான முயற்சிக்காக அவருக்கு ‘லாங்க்டன்’ பதக்கம் கிடைத்தது. அவர்தான் அப்பதக்கத்தைப் பெறும் முதல் பெண்மணி! தன் வாழ்க்கையில் எதிலுமே முதலிடத்தைத் தவிர வேறெதையும் வகிக்கக் கூடாதென்ற உறுதியுடைய லீலா, ஒரு சிறந்த வழக்கறிஞராக, நீதிபதியாக விளங்கியதில் அதிசயம் ஏதுமில்லை.

# எதிலும் முதலிடம்

அக்டோபர் 20, 1930ம் ஆண்டுபிறந்த நீதிபதி லீலா சேட், தன்னுடைய இப்போதைய நிலைக்கு மின்னல் வேகத்தில் உயர்ந்தவர். இங்கிலாந்தில் வக்கீல் படிப்பை முடித்த கையோடு இந்தியா வந்த லீலாசேட், முதலில் பாட்னா உயர்நீதிமன்றத்திலும், பின்னர் கல்கத்தா உயர்நீதிமன்றத்திலும் தொழிற்பயிற்சி செய்தார்.

1978இல், தில்லி உயர்நீதிமன்றத்தில் இவர் முதல் பெண் நீதிபதியாக நியமிக்கப்பட்டார். ஆகஸ்ட் 1991, ஹிமாசலப் பிரதேசத்தின் உயர்நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியாக நியமிக்கப்பட்டபோது அவர் இப்பதவியை வகிக்கும் முதல் பெண்மணியானார்.

இப்பொழுது ஓய்வு பெற்றுவிட்ட அவர், சமூகப் பணிகளில் ஈடுபட்டிருக்கிறார். பெண்ணுரிமை மற்றும் குழந்தைகள், குறிப்பாக அடிமைத் தொழிலாளர்களாக வாடுபவர்களுக்காக போராடுபவர்களில் முன்னணியில் இன்று நிற்கிறார் லீலா சேட். இவர் கல்வி, இயற்கை வளப்பாதுகாப்பு, சுற்றுச்சூழல் மற்றும் மனித உரிமைக்காகப் பாடுபடுபவர். திருமதி. சேட் 1995ஆம் ஆண்டு நிறுவப்பட்ட நீதிபதி சுனந்தா பண்டாரே அமைப்பின் நிறுவனர் மற்றும் அறக்கட்டளையாராகப் பணியாற்றிக் கொண்டிருக்கிறார். இந்த அமைப்பு, பெண்கள் மற்றும் குழந்தைகளின் வளர்ச்சிப் பணியில் ஈடுபட்டுள்ளது.



# சிறப்புத் தன்மையை நோக்கி ஒரு பயணம்

"இந்துப் பட்டிக்காட்டான் எங்கிருந்து வந்திருக்கிறான்? ஆங்கிலம் அறவே பேசத் தெரியாத இவனுக்கு நம் பள்ளியில் இடம் எப்படி கிடைத்தது?" ராஹுலைச் சுட்டிக்காட்டியபடி ஹென்றி கேட்டான். ராஹுல் அவனைப் பார்த்து முறைத்தான்.

"அவனைச் சீண்டாதே! கோபத்தில் உன்னைத் தூய இந்தியில் ஏசப்போகிறான்!" அவனுடைய கோபமுற்ற முகத்தைக் கண்ட அசோக் தன் நண்பனை எச்சரித்தான். சுற்றி இருந்தவர்கள் அனைவரும் கொல்லென்று சிரித்தனர்.

ராஹுலுக்கு அவர்களின் பேச்சு சரியாகப் புரியாவிட்டாலும் அவர்கள் தன்னை ஏளனம் செய்கிறார்கள் என்று மட்டும் நன்றாகப் புரிந்தது. அவமானத்தால் குன்றிய போதும் அவர்களைப் பழிக்குப்பழி வாங்க எந்த முயற்சியும் செய்யவில்லை. முதலில் அவர்கள் பேசும் மொழியிலேயே பதில் சொல்வதற்குக் கற்க வேண்டும். அதன்பிறகுதான் பேசவேண்டும் என்ற முடிவுக்கு அவன் வந்தான். அந்த ஆறு வயதுச் சிறுவனுக்குக் கோபத்தினால் பொங்கிய கண்ணீரைக் கட்டுப்படுத்துவது கடினமாகத்தான் இருந்தது. ஆனாலும் அவர்கள் எதிரில் அவன் அழவில்லை.

"சமஸ்கிருதத்தில் ஏதாவது சுலோகம் ஒப்பிக்கும் போட்டி மட்டும் வந்தால் அவர்கள் ஒவ்வொருவரையும் தோற்கடிக்க என்னால் முடியும். அவர்களைக் காட்டிலும் எவ்வளவோ விதங்களில் நான் தேர்ந்தவன்," என்று அவன் அன்று மாலை வீடு திரும்பும்போது தனக்குத்தானே கூறிக்கொண்டான். அவர்கள் தன்னை தொந்தரவு செய்யாதிருக்க என்ன செய்யவேண்டுமென்று அவன் சிந்தித்துக் கொண்டிருக்கும்போதே அவன் வீடு வந்துவிட்டது.

அவர்களுடைய குடும்பம் மகாராஷ்டிரத்தில் உள்ள வார்தாவிலிருந்து சமீபத்தில்தான் மும்பை வந்திருந்தது. ராஹுலின் பாட்டனார் திரு. ஜம்னாலால் பஜாஜ், மகாத்மா காந்தி வினோபா பாவே ஆகியோருடன் நெருக்கமாகப் பழகி சமூகத் தொண்டு புரிந்தவர். வார்தாவில் அவர்கள் வசித்த போது மதுராவிலிருந்து வந்திருந்த ஒரு பண்டிதரிடம் ராஹுல் இராமாயணம், மகாபாரதம், பகவத்கீதை மற்றும் இந்தி இலக்கியம் படித்திருந்தான். அவனுடைய படிப்பில் ஆங்கிலம் அறவே இருக்கவில்லை. மும்பை வந்த பிறகு புனித சேவியர் பள்ளியில் சேர்ந்தபோதுதான் அவன் முதல் முதலாக ஆங்கிலம் பயிலத் துவங்கினான். இதனால் அவனுக்கு ஆங்கிலம் புரியாதிருந்ததில் அதிசயம் இல்லை.

ராஹுல் பெருமூச்செறிந்தான். வார்தாவில் இருந்தபோது வாழ்க்கை எவ்வளவு எளிதாக, அமைதியாக இருந்தது? தன் அக்கா ஸுமனுடன் சண்டை போடுவதைத் தவிர வேறெந்தக் கவலையும் இல்லாமல் ராஹுல் சுற்றி வந்த நாட்கள் அவை. ஆனால் இப்பொழுது அவனுக்கு ஏகப்பட்ட கவலைகள் மனதைக் குடைந்துகொண்டிருந்தன. அன்று ஏற்பட்ட அவமானம் வேறு அவனை மிகவும் வருத்திக் கொண்டிருந்தது.

வீட்டில் தந்தை திரு. கமல் நயன் பஜாஜ் அவன் முகத்தைக் கண்டவுடன் ஏதோ நடந்திருப்பதைப் புரிந்து கொண்டுவிட்டார்.

"ராஹுல்! என்னப்பா நடந்தது?" என்று மென்மையாகக் கேட்டார். அன்று பள்ளியில் நடந்ததைப் பற்றி பேசும் மனநிலையில் இல்லாத ராஹுல் பதிலேதும் கூறவில்லை. ஆனால் அவன் தந்தையும் விடுவதாக இல்லை.



"காக்காஜி, மற்ற மாணவர்கள் எல்லாரும் எனக்கு ஆங்கிலம் தெரியாது என்று அறிந்து ஏளனம் செய்கிறார்கள்," என்று மட்டும் அவன் கூறினான். இதையும் கூட அவர் மீண்டும் மீண்டும் வற்புறுத்திக் கேட்ட பின்னர்தான் ராஹுல் கூறினான். அதைச் சொல்லி முடிப்பதற்குள்ளாகவே அவன் அவமானத்தால் குன்றிவிட்டான்.

"அவர்கள் கூறுவதில் தவறேதும் இல்லையே? ஆனால் நீ அவமானப்படவும் ஏதுமில்லை," என்று கூறிய தன் தந்தையை அவன் ஆச்சரியத்துடன் ஏறிட்டான். தன் வேதனையை அவர் உணர வில்லையா? பின் ஏன் எல்லாம் இயற்கையானது என்று கூறுகிறார்? அவனுக்கு ஒன்றும் புரியவில்லை.

அவன் ஏதும் பேசுவதற்கு முன்பே தந்தை தன் பேச்சைத் தொடர்ந்தார். "உனக்கு ஆங்கிலம் தெரியாது என்பது உண்மைதான் ஆனால் அதனை நீ கற்கவே இயலாது என்பது உண்மையல்லவே? இது வரை உனக்கு ஆங்கிலம் படிக்க வாய்ப்பு கிடைக்கவில்லை, அதனால் நீ அதைக் கற்கவில்லை." அவர் பேச்சில் இருந்த உண்மை ராஹுலைப் பலமாக தலையை ஆட்டி அவர் கூற்றை ஆமோதிக்க வைத்தது. "அப்பாடா! நம் தந்தைக்கு வேதனை புரிகிறது" என்ற எண்ணம் அவனுக்கு மிக்க மகிழ்ச்சியளித்தது.

அவர் தொடர்ந்து பேசினார்: "உதாரணத்திற்கு இரண்டு மாணவர்கள் இருக்கிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். ஒருவன் 90 சதவீதம் மதிப் பெண்கள் பெறும் திறமை பெற்றவன்; மற்றவன் 60-70 சதவீதம் மதிப்பெண்கள் மட்டுமே பெற முடிந்த சராசரி மாணவன். முதலாம் மாணவன் மனது வைத்தால் 100 சதவீதத்திற்கும் மேல் பெற முடியும். ஆனால் அவன் முயற்சியேதும் செய்யாமல் வெறும் 70 சதவீதம் மட்டுமே பெறுகிறான். ஆனால் சராசரி மாணவனோ கடும் உழைப்பினால் 90 சதவீதம் பெறுகிறான். இவ்விருவரில் ஒருவரைத் தேர்வு செய்ய வேண்டுமென்றால் யாரைத் தேர்ந்தெடுப்பார்கள் என்று நினைக்கிறாய்?"

"இரண்டாம் மாணவனை!" ராஹுல் உடனே கூவினான்.



"மிகச் சரியாகச் சொன்னாய்! ஏனென்றால்

அவனுடைய உழைப்பும், முன்னேற வேண்டுமென்ற துடிப்பும் அவனைத் தன் திறமையை மிஞ்சி பாடுபட வைத்தது. ஆனால் நீயோ ஏற்கெனவே 90 சதவீத மாணவன். நீ முயற்சி செய்தால் 100 சதவிதத்திற்கும் அதிகமாக மதிப்பெண்கள் எடுக்க முடியுமென்று எனக்கு முழு நம்பிக்கையுள்ளது. நான் உன்மேல் வைத்திருக்கும் நம்பிக்கையை உண்மையென நிரூபித்துக் காட்டு பார்க்கலாம்! இன்னும் சுமார் நான்கு மாதங்களில் ஆங்கிலம் கற்க வேண்டுமென்று நீ தீர்மானம் செய்தால் அது கண்டிப்பாக உன்னால் முடியும்!" என்றார் அவன் தந்தை.

இதைக்கேட்ட ராஹுலுக்குக் கட்டுக்கடங்காத மகிழ்ச்சி! அவர் தந்தை சொல்வதைக் கேட்கும் போது எல்லாம் மிக எளிதாக இருந்தது. அவன் தந்தை பேசப்பேச அவனுக்குத் தன்னாலும் ஆங்கிலம் கற்று பள்ளியிலுள்ள மாணவர்களைக் காட்டிலும் சிறந்தவனாக முடியுமென்ற நம்பிக்கை துளிர்த்து, மெல்ல மெல்ல வேர்விட்டுப் படர்ந்தது.

அவன் தன் தீர்மானத்தை நிறைவேற்றவும் செய்தான். ஒரு வருடத்திற்குள் நன்றாக ஆங்கிலம் பேசக் கற்றுக் கொண்டான், மும்பையிலுள்ள புகழ்பெற்ற கதீட்ரல் ஆண்கள் பள்ளியில் அனுமதிக்கப் பட்டான். அந்நாட்களில் அது மும்பையில் மட்டுமல்ல, இந்தியாவிலேயே மிகச்சிறந்த பள்ளிகளுள் ஒன்றாகக் கருதப்பட்டது.

மும்பை வந்ததிலிருந்து முதல் முறையாக ராஹுல் ஆர்வத்துடன் பள்ளி சென்றான். தான் மற்றவர்களைவிட எந்தவிதத்திலும் குறைந்தவனல்ல என்று தனக்குத்தனே நிரூபித்துக் கொண்டபின் ராஹுல் எல்லாத் துறைகளிலும் வேகமாக முன்னேறத் துவங்கினான். விளையாட்டு, படிப்பு மற்றும் பேச்சுப்போட்டி போன்ற பல்வேறு துறைகளில் அவன் சிறந்து விளங்கினான். இதனால் அவனுக்கு வகுப்பின் தலைமை மாணவன் பதவி கிடைத்தது.

அவன் தந்தை அடிக்கடி வியாபார விஷயமாக வெளியூர் சென்றாலும் தம் குழந்தைகளுடன் பேசவும், நேரம் செலவிடவும் என்றும் தவறியதில்லை. அவர் அடிக்கடி பேசியது தம் நாட்டைப் பற்றியும் ஆங்கிலேயர் ஆட்சியில் அது நசுக்கப் பட்டதைப்



பற்றியும்; வாழ்க்கையில் நேர்மையை கடைபிடிக்க வேண்டிய அவசியத்தைப் பற்றியும்; எது செய்தாலும் முழுமனதுடனும் அயரா உழைப்புடனும் செய்ய வேண்டும் என்பதையும் வலியுறுத்தினார். மேலும் பல விஷயங்களைப்பற்றி அவர் பேசினார். ராஹுலின் தாய் தந்தையர் இருவரும் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டு பல முறை சிறைக்குச்சென்று வந்தவர்கள். இந்தியா சுதந் திரம் அடைந்தபோது ராஹுலுக்கு வயது ஒன்பது.

அவன் சீனியர் கேம்ப்ரிட்ஜ் வகுப்பில் படிக்கும்போது வகுப்புத் தலைவனாக நியமிக்கப் பட்டான். கதீட்ரல் ஆண்கள் பள்ளி இங்கிலாந்து பள்ளிகளின் வழிமுறைகளைப் பின்பற்றி வந்தது. அவற்றில் ஒன்று, அங்கு நடத்தப்படும் நிகழ்ச்சிகள். இவை பள்ளி விருந்துகள் என்றழைக்கப்பட்டன. இவ்விருந்தின் முக்கிய நிகழ்ச்சியாக பால்ரூம் நடனம் நடைபெறும்.

நான்கு இல்லத் தலைவர்களும் தத்தம் ஜோடிகளை மேடைக்கு அழைத்துச் சென்று நடன நிகழ்ச்சியைத் துவக்கி வைக்கவேண்டும் என்பது பரம்பரையாக நடந்து வந்த வழக்கம். அவர்கள் நிகழ்ச்சியைத் துவக்கிவைத்தபின் மற்ற மாணவர்கள் நடனத்தில் கலந்து கொள்வார்கள். இல்லத் தலைவனான ராஹுலும் அவ்வாறே நடனத்தைத் துவக்கி வைத்தான். நிகழ்ச்சி முடிந்து வீட்டிற்கு வந்த அவன் மிகவும் மகிழ்ச்சியாக இருந்தான்.

மறுநாள் அவன் தந்தை அவனை அழைத்தார். "ராஹுல், நான் உன்னுடன் சிறிது பேசவேண்டும்," என்றார் அவர்.

"வருகிறேன் காக்காஜி," என்று கூறியவாறே வந்த ராஹுல், அங்கு வெடிக்கப்போகும் பூகம்பத்தைப் பற்றி அறியவில்லை. அன்று விடுமுறையாதலால் அவன் ஓய்வாக எந்த கவலையுமின்றி இருந்தான். முதல்நாள் நடந்த பள்ளி விருந்தைப் பற்றி அவன் இன்னமும் நினைத்து மகிழ்ந்து கொண்டிருந்தான்.

"நேற்று உங்கள் பள்ளி நடனத்தில் பங்கெடுத்துக் கொண்டாய் என்று கேள்விப்பட்டேன்," என்றார் அவன் தந்தை.

அவர் குரலில் இருந்த மாற்றத்தை உணராத

ராஹுல், "ஆமாம் காக்காஜி. இல்லத் தலைவனாக இருப்பதால் நான்தான் நடனத்தைத் துவங்கிவைக்க வேண்டும்," என்று உற்சாகமாகக் கூறினான். அவர் அவனைப் பாராட்டுவார் என்று எதிர்பார்த்த ராஹுலுக்கு அவர் பதில் பெரும் அதிர்ச்சியளித்தது.

"நீ நடனமாடியது நேற்றுதான் கடைசி தடவையாக இருக்கட்டும், புரிந்ததா?" அவர் குற்றம் சாட்டுவது போல் கூறியது அவனுடைய அதிர்ச்சியை மேலும் அதிகரித்தது. ஆனால் அவன் அவ்வளவு எளிதில் பணிவதாக இல்லை.





"காக்காஜி, அதுதான் பள்ளியின் மரபு," மறுப்பில் அவன் குரல் அவனையறியாமல் உயர்ந்தது.

"குரலைத் தாழ்த்திப் பேசு!" கண்டித்தார் அவர் தந்தை. "அதுதான் பள்ளியின் மரபு என்றால் அதைச் செய்யாமலிருக்க ஏதாவது வழியை நீ கண்டுபிடித்தாக வேண்டும், ஏனெனில், அது நம் குடும்பத்தின்—பஜாஜ் குடும்பத்தின் மரபல்ல." ஒவ்வொரு வார்த்தையும் தெளிவாக, நிதானமாக வெளிவந்தது.

"என்றோ ஒருநாள் கொஞ்ச நேரம் நடனமாடுவதால் என்ன தப்பு? அதை எதற்காகப் பெரிதுபடுத்த வேண்டும்," ராஹுல் விடாமல் வாதாடினான்.

"ஆண்-பெண் சேர்ந்து ஆடும் நடனம் நம் இந்தியப் பண்பாடு அல்ல, ராஹுல்! நம்மை ஆட்சி செய்த பிரிட்டிஷ்காரர்களைப்போல் அவர்களுடைய கலாச்சாரமும் நமக்கு அந்நியமானதுதான். நாம் நம்முடைய உயர்ந்த பண்பாட்டை நிலைநிறுத்த வேண்டும்; ஜம்னாலால் பஜாஜ் போன்ற சிறந்த மனிதர்களைக் கொண்ட நம் பஜாஜ் குடும்ப மரபுகளைக் கடைப் பிடித்து அதன் மதிப்பை உயர்த்த வேண்டும்." இதைச் சொல்லும்போது அவருடைய குரல் மிகவும் மென்மையாக இருந்தது. ஆனால் அதன் பின்னால் மறைந்திருந்த இரும்புத் தன்மையை ராஹுல் கவனிக்கத் தவறிவிட்டான். அதனால் அவன் மீண்டும் தன் கட்சிக்காக வாதாடினான்.

"ஆனால்..."

"இதில் எதிர்வாதம் செய்ய ஏதுமில்லை. நீ பள்ளிக்குச் செல்வது கல்வி கற்பதற்காக; அயல் மரபுகளைக் கற்பதற்காக இல்லை. அவை மற்றவர்களுக்கு உகந்ததாக இருக்கலாம், ஆனால் நம் குடும்பத்திற்கு அவை தேவையில்லாதவை. நான் சொல்ல வேண்டியதை நீ நன்றாகப் புரிந்து கொண்டிருப்பாய் என்று நினைக்கிறேன்."

"என்னால் பள்ளி விதிகளை மீறமுடியாது. பள்ளியின் மரபுகளை நான் கடைபிடித்துத் தானே ஆக வேண்டும்," ஒருவாறு ராஹுல் உளறிக் கொட்டினான்.

"அப்படியானால் நீ இந்த வீட்டைவிட்டு தாராளமாக வெளியேறலாம். வாழ்க்கையில் தான்

விரும்புவதைச் செய்யும் உரிமை நம் ஒவ்வொரு வருக்கும் உண்டு; உனக்கும்தான். ஆனால் அவ்வாறு நீ செய்ய வேண்டுமென்றால் அதை என் வீட்டில் வாழ்ந்து கொண்டு செய்ய முடியாது." அவன் தந்தை செய்தித்தாளைப் புரட்டலானார். அவரைப் பொறுத்த மட்டில் உரையாடல் முடிந்துவிட்டிருந்தது. ராஹுல் ஆதரவைத் தேடி தாயை நோக்கினான். என்ன இருந்தாலும் அவர் நவீன வாழ்க்கை முறைகளைப் பின்பற்றும் குடும்பத்திலிருந்து வந்தவர். அவருடைய குடும்பம் இங்கிலாந்தில் வாழ்ந்திருக்கிறது. இந்த மரபுகளெல்லாம் அவருக்குப் புதிதல்ல. அதனால் அவர் தன் சார்பில் பேசக்கூடுமென்று அவன் எதிர் பார்த்தான். அனால் அவரோ எதையுமே கண்டு கொள்ளாமல் தான் படித்துக் கொண்டிருந்த புத்தகத்தில் ஆழ்ந்திருந்தார். வேறு வழி ஏதும் புலப்படாததால் தந்தையின் சொல்லுக்கு, தான் அடிபணிந்துதான் ஆகவேண்டுமென்பதை ராஹுல் உணர்ந்தான்.

இதில் வேடிக்கை என்னவென்றால் இந்நிகழ்ச்சி அவனுக்குத் தன் தந்தையின்பால் மனக்கசப்பு உண்டாக்குவதற்குப் பதிலாக, இன்னும் அதிக மதிப்புக் கொள்ளச் செய்தது. அந்தக் குடும்பத்தில் குழந்தைகளின் மேல் கட்டுப்பாட்டு விதிகள் என்றுமே திணிக்கப்பட்டதில்லை. அவர்களுக்கு நெறிமுறை களைப் பற்றிய வழிகாட்டிகள் மட்டுமே கொடுக்கப் பட்டன. திணிக்கப்படாவிட்டாலும் அவற்றை அவர்கள் கடைப்பிடிக்க வேண்டுமென்று நிச்சயமாக எதிர்பார்க்கப்பட்டது. அவர்களின் தந்தை நிலை நாட்டிய சில முக்கிய விதிமுறைகளை குழந்தைகள் அனைவரும் கட்டாயமாகக் கடைப்பிடிக்க வேண்டியிருக்கும். இவை தவிர, அவர்களின் தந்தை என்றும் காரணமில்லாமல் திட்டவோ, அவர்கள் மேல் ஆதிக்கம் செலுத்தவோ மாட்டார். 'அப்படிப் பட்ட தந்தை இவ்வளவு உறுதியுடன் ஒன்றைப் பற்றி பேசுகிறார் என்றால் அதற்கு ஏதாவது முக்கியமான அடிப்படைக் காரணம் இருக்கவேண்டும்,' என்ற முடிவுக்கு அவன் வந்தான்.

அன்றுதான் அவனுக்கு பஜாஜ் குடும்பத்தின் அங்கத்தினராக இருப்பதன் மகத்துவம் புரிந்ததென்று கூறலாம். அக்குடும்பத்தின் உறுப்பினராக இருந்ததால்,



அவன் தாத்தா அக்குடும்பத்திற்கு பெற்றுத் தந்திருந்த சிறப்பையும், அதன் வழிமுறைகளைப் கடைப்பிடிக்க வேண்டிய அவசியத்தையும் அவன் உணர்ந்தான். அன்றிலிருந்துதான் அவனுக்கு இந்தியாவைப் பற்றிய விஷயங்களை அறிந்து கொள்ளும் ஆவல் ஏற்பட்டது. அந்த ஆவல் மெல்ல மெல்ல நாட்டைப் பற்றிய பெருமையாக மாறியது. மேலும், தன் தந்தை எளிமையை வலியுறுத்தும் காந்திய வழிமுறைகளைப் பின்பற்றும் ஒரு சிறந்த இந்தியர் என்பதையும் உணர்ந்தான்.

அக்குடும்பத்தில் அனைவரும்—குழந்தைகள் உட்பட—கதர் ஆடைகளைத்தான் அணிந்தனர். ஒரு பெரிய தொழிலதிபரின் மகனாக இருந்தும், மற்ற பணக்கார மாணவர்களைப்போல காரில் செல்லாமல் பேருந்தில்தான் ராஹுல் பள்ளிக்குச் சென்றான்.

“உனக்குக் கிடைக்க வேண்டிய மதிப்பு உன்னிடமிருக்கும் செல்வத்தைப் பொறுத்ததில்லை. அதனால் உன் செல்வத்தை உலகிற்கு காட்சிப் பொருளாக்கத் தேவையில்லை. தவிர, அவ்வாறு செய்வது பண்பான செயலும் அல்ல. நீ உள்ளத்தால் எப்படிப்பட்டவன் என்பதுதான் முக்கியம், நீ பணக்காரனா, ஏழையா என்பதல்ல,” என்று திரு. பஜாஜ் ராஹுலிடம் அடிக்கடி கூறுவார்.

பஜாஜ் குழந்தைகளுக்கு, தாம் மற்றவர்களைக் காட்டிலும் உயர்ந்தவர்கள் என்ற எண்ணம் வருமாறு என்றுமே நடத்தப்பட்டதில்லை. தம் குடும்பத்தின் பெயரை நிலைநாட்ட வேண்டிய பொறுப்பு ஒன்றுதான் அவர்களுக்குத் தாம் மற்றவர்களிடமிருந்து மாறுபட்டவர்கள் என்பதை அவர்களுக்கு உணர்த்தியது.

“ஒவ்வொரு இந்தியனுக்கும் தம் நாட்டைச் சிறந்த நாடாக்குகின்ற பொறுப்பு இருக்கவேண்டும். நாம் வாழ்க்கையில் எந்தத் துறையில் இருந்தாலும் இதனைச் செய்ய முடியும்,” என்று தந்தை தம் மக்களுக்கு அடிக்கடி கூறுவார். இதனைப் பலமுறை கேட்டிருந்தாலும், பள்ளியில் நடந்த நடன நிகழ்ச்சிக்குப்பிறகுதான் இந்தக் கூற்று அவன் மனதில் ஆழமாகப் பதிந்தது. நாட்டுக்காக தன்னால் என்னென்ன செய்ய முடியுமென்று முதல்முறையாக யோசிக்கலானான்.

ராஹுல் வளர, வளர, தன் தந்தையுடன் நடத்திய உரையாடல்களில் இன்பம் காணலானான். இவை சில சமயம் இரவு முழுவதும் கூட நீடிக்கும். தத்துவம், அறநெறி போன்ற பல விஷயங்களை அவர் களிருவரும் சம வயதினர்களைப் போல் அலசி னார்கள். ராஹுல் தன் கருத்துக்களை—அவை தன் தந்தையின் கருத்துக்களிலிருந்து மாறுபட்டிருந்தாலும் கூட—அச்சமின்றி வெளியிட்டான். தன் சந்தேகங் களைத் தீர்த்துக்கொள்ள அவன் இவ்வுரையாடல் களைப் பயன்படுத்திக் கொண்டான்.

"மேலை நாடுகளுக்கு இணையாக முன்னுக்கு வர வேண்டுமானால் நாம் வலிமை பெற வேண்டாமா, காக்காஜி?" ராஹுல் கேட்டான். நம் நாட்டை உலகின் மிகச் சிறந்த நாடுகளில் ஒன்றாக ஆக்க வேண்டுமென்று அவர் ஒருமுறை கூறியிருந்ததை அவன் மறக்கவேயில்லை.

"கண்டிப்பாக! வலிமை பல வழிகளிலிருந்து வரலாம். நம் பொருளாதார வளத்தால் வலிமை பெறலாம். நம் நாட்டுக்குத் தேவையான உணவு தானியங்களை உற்பத்தி செய்து, புதிய தொழிற்சாலை களை நிறுவி, வேலை வாய்ப்புக்களைப் பெருக்கி, மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதால்கூட நாம் வலிமை பெற முடியும்," என்று பதிலளித்தார் அவர். "நாம் ஆங்கிலேயர் ஆட்சியில் இருந்தவரை எதுவும் செய்ய முடியாத நிலையில் இருந்தோம். சுதந்திரம் கிடைத்தபிறகு நாம் பலவற்றையும் சாதிக்கும் நிலையில் இன்று இருக்கிறோம். அவற்றைச் சாதித்து நம் இலக்கை அடையத் தேவையானது, நம் ஒவ்வொருவரின் கடுமையான உழைப்பு மட்டுமே."

எவ்வளவு கடினமான காரியமானாலும் அதனை எளிதாக்கி விவரிக்கும் தன் தந்தையின் ஆற்றலை அவனால் வியந்து பாராட்டாமல் இருக்க முடியவில்லை.

ராஹுல் பெரியவனான பின்னர்கூட அவர்களின் உரையாடல்களின் போது அவன் தந்தை, அவன் குடும்பத்தொழிலில் ஈடுபட வேண்டுமென்று ஒரு முறைகூடக் கூறியதில்லை. இன்னும் பார்க்கப் போனால் அவர் கூறியது இதுதான் "உன் மனதுக்குப் பிடித்த துறையை நீதான் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்."



"ராஹுல், உனக்குப் பிடித்தமான எந்தத் துறையை வேண்டுமானாலும் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் உரிமை இருக்கிறது. ஆனால் நீ எந்தத் துறையைத் தேர்ந்தெடுத்தாலும் அதில் சிறந்து விளங்க வேண்டும். நீ ஒரு விளை யாட்டு வீரனாக ஆசைப்பட்டால், அந்த விளையாட்டில் உலகத்திலேயே சிறந்த மாவீரனாக முயற்சி செய். நீ தேர்ந் தெடுத்திருக்கும் துறையில் மிகச் சிறந்தவனாக உயர்வதற்கு, அயராத உழைப்பும், மனத்திடமும் தேவை. நான் உனக்கு முன்பொரு முறை சொன்ன 90 சதவீதம் மற்றும் 70 சதவீதம் மாணவர்கள் கதை நினைவிருக்கிறதா?"

ராஹுல் ஆமென்று தலையாட்டினான்.

மற்றொரு முறை குடும்ப நண்பர் ஒருவர் அவன் தந்தையிடம், ராஹுல் குடும்பத் தொழிலில் ஈடுபட வேண்டுமென்று கூறியபோது அவர், "அந்த முடிவை நான் ராஹுலிடமே விட்டுவிட்டேன். தனக்குப் பிடிக்காத எதையும் செய்ய அவனை எந்த விதத்திலும் கட்டாயப்படுத்தியது கிடையாது," என்று கூறினார்.

அவன்மீது கண்டிப்பு இருந்ததோ இல்லையோ, ராஹுல் ஏற்கெனவே முடிவு செய்திருந்தான். ஆனால் அவனுக்குச் சராசரி தொழிலதிபர் ஆவதில் விருப்பம் இல்லை. அவன் தந்தை சொன்னதுபோல் மிகச் சிறந்த தொழிலதிபர் ஆகவேண்டுமென்பதே அவன் குறிக்கோள்.

"பொருளாதாரத்திலும், சட்டத்திலும் பட்டம் பெற்ற பிறகு ஹார்வர்ட் சென்று படிப்பேன்," என்று இளைஞன் ராஹுல் தீர்மானித்துக் கொண்டான்.

அவனுடைய நல்விதி நிச்சயிக்கப்பட்டுவிட்டது. அவன் இனி செய்யவேண்டியது—இந்தியத்தொழில் துறையில் முன்னேறி பிரகாசிக்க வேண்டியதுதான். சிறப்புத் தன்மையை இலக்காகக் கொண்ட தன் வாழ்க்கைப் பயணத்தை அவன் மேற்கொண்டு விட்டான்.

"நான் இந்நாட்டின் வளர்ச்சியின் ஒரு முக்கிய அங்கமாக ஒருநாள் விளங்குவேன். என்னுடைய முழு முயற்சியால் இதை என்னால் சாதிக்க முடியும்," என்று அவன் மனதுக்குள் நினைத்துக் கொண்டான்.

தான் நினைத்தபடியே செய்தும், இன்றுவரை

செய்து கொண்டும் இருக்கிறார் ராஹுல் பஜாஜ். தன் தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் ஸ்கூட்டர், மோட்டார் சைக்கிள், ஆட்டோ மற்றும் வேன்களின் உதவியால் இந்த நாட்டையே ஓட்டிக்கொண்டிருக்கும் பஜாஜ் கம்பெனிகளின் தலைமைப் பொறுப்பை ஏற்று கொடிகட்டிப் பறந்து கொண்டிருக்கிறார். வாகனங்கள் மட்டுமல்லாமல்- பஜாஜ் கம்பெனிகள் பல்வேறு பொருட்களை உற்பத்தி செய்து, உலகம் முழுவதும் ஏற்றுமதி செய்வதிலும் ஈடுபட்டுள்ளன.



## ஹமாரா பஜாஜ்...

பஜாஜ் குடும்பத்தின் வாரிசான ராஹுல் பஜாஜ் இந்தியாவின் தொழில்துறை முன்னேற்றத்திற்காக செய்திருப்பவை ஏராளம். தன் பாட்டனார் திரு. ஜம்னாலால் பஜாஜ் மற்றும் தந்தை திரு. கமல்நயன் பஜாஜ் ஆகியோரால் ஈட்டப்பட்ட குடும்பப் பெருமையை திரு. ராஹுல் பஜாஜ் சிறப்பாக நிலைநாட்டி வருகிறார்.

1938ஆம் ஆண்டு ஜூன் 10 அன்று பிறந்த திரு. பஜாஜ், தன் பள்ளிப்படிப்பை மும்பையில் முடித்தார். பிறகு அவர் பொருளாதாரத்தில் மற்றும் சட்டத்தில் இளங்கலைப் படிப்பை முடித்து, ஹார்வர்ட் பல்கலைக் கழகத்தில் தொழில்நிர்வாகத்தில் முது கலைப்பட்டமும் பெற்றார். அதன் பின்னர் அவர் தம் குடும்பத் தொழிலில் சேர்ந்து, கடைநிலையிலிருந்து படிப்படியாக முன்னேறி, 1968ஆம் ஆண்டு பஜாஜ் ஆட்டோ லிமிடெட் நிறுவனத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்றார்.

1968இல் சுமார் 7.2 கோடியாக இருந்த ஆண்டு விற்றுமுதலை, 1996-97இல் அவர் சுமார் 290 கோடியாக உயர்த்தினார். அத்துடன் அவர் ஒவ்வொரு இந்தியனையும் 'ஹமாரா பஜாஜ்' பற்றி பெருமை கொள்ளச் செய்தவர். இன்று பஜாஜ் கம்பெனிகளின் பல பிரிவுகளிலும் பணிபுரிவோரின் மொத்த எண்ணிக்கை 33,000க்கும் அதிகமாகும்.

அவருக்குப் பல் விருதுகளும், சிறப்புச் சான்றிதழ் களும் கிடைத்தன. அத்துடன் இந்திய அரசாங் கத்திலும், தனியார் தொழிலிலும் இந்தியா மற்றும் மேலை நாடுகளிலும் அவர் பல பெருமைக்குரிய பதவிகளை வகித்து வருகிறார்.

இன்று அவருடைய அயரா உழைப்பாலும், முயற்சியாலும் 'ஹமாரா பஜாஜ்' இந்தியாவிலும்,

வெளிநாடுகளிலும் பல்லாயிரக்கணக்கான மக்கள் இடையே ஒரு குடும்பப் பெயராக திகழ்ந்து வருகிறது. அவருடைய பாட்டனாரும், தந்தையும் இன்று இருந்திருந்தால் அவரைப் பற்றி நிச்சயம் பெருமைப் பட்டிருப்பார்கள்.



# மின்னல் சிறுவன்

"பாபா, உனக்காக நான் என்ன வாங்கி வந்திருக்கிறேன் என்று பார்!" ஆனந்தின் அம்மா அவனை அழைத்தார். அவர் அப்பொழுதுதான் மார்க்கெட்டிலிருந்து வந்திருந்தார். அவர் குரலைக்கேட்ட ஆனந்த், ஆறு வயது சிறுவர்களுக்கே உரிய ஆர்வத்துடன், தனக்காக என்ன வாங்கி வந்திருக்கிறார் என்று காண வெளியே ஓடிவந்தான்.

அவர் தன் பையிலிருந்து ஒரு சதுரமான பெட்டியை வெளியில் எடுத்தார்.

"அதை என்னிடம் கொடுங்கள்!" என்று கூவினான் ஆனந்த். கலகலவென்று சிரித்தவாறே அப்பெட்டியை மேஜையின் மீது மெல்ல வைத்தார் அவர். அதைத் திறப்பதைப் பொறுமையின்றி பார்த்தவாறு நின்றான் அவன். திடீரென்று, "எனக்குத் தெரியுமே! இது செஸ்போர்டு (சதுரங்கப் பலகை) தானே? அம்மா! நான் போர்டை விரித்து வைக்கிறேன், ப்ளீஸ்!" கெஞ்சினான் ஆனந்த்.

"சரி. சரி. ஆனால் முதலில் போர்டைப் பார். இதில் எவ்வளவு கட்டங்கள் இருக்கின்றன என்று முதலில் எண்ணு, பார்க்கலாம்!"

"ஒன்று, இரண்டு, மூன்று– அறுபத்தி மூன்று, அறுபத்தி நான்கு! முப்பத்தியிரண்டு கறுப்புக்

கட்டங்கள், முப்பத்திரண்டு வெள்ளைக் கட்டங்கள்! இந்தக் காயின்களையும் எண்ணட்டுமா?" ஆவலுடன் கேட்ட ஆனந்தின் துடிப்பைக் கண்டு அவன் தாய் சிரித்தார்.

"பாபா (ஆனந்தின் செல்லப் பெயர்), இவை காயின்கள் இல்லை. இவைகளைச் 'செஸ்மென்' (சதுரங்கக் காய்கள்) என்று சொல்வார்கள். இவற்றில் கறுப்பு, வெள்ளை என்று இரண்டு வகைகள் இருக்கின்றன பார்!" விளக்கினார் அவர். "இந்த சிறிய செஸ்மென்னெல்லாம் ஒரே மாதிரி இருக்கின்றன" செஸ் போர்டைக் கண்டு அவன் அடைந்த உற்சாகத்தைப்போல் வேறெந்த விளையாட்டையும் கண்டு உற்சாகப்பட்டதில்லை.

"ஆமாம் பாபா, அவை 'பான்கள்' என்றழைக்கப் படும். விளையாடுபவர்கள் இருவரிடமும் தலா எட்டு பான்கள் இருக்கும். மற்ற எட்டு காய்கள் 'பீஸஸ்' எனப்படும். ஒவ்வொரு பீஸும் அதற்கான பிரத்தியேக வழியில் மட்டுமே நகரும்." ஆட்டத்தின் விதிமுறைகளை விவரித்தபடியே அவர் பலகையில் காய்களை வைக்கலானார். இருகோடியிலும் 'ரூக்'கள் (கோட்டை) அதற்கடுத்து நைட் (குதிரை) அதற்கடுத்து பிஷப் (பேராயர்). நடுவில் ராஜா மற்றும் ராணி என அவர் காய்களை வரிசைப்படுத்தினார். ஆனந்த் படுசுட்டியான சிறுவனானதால் சில நிமிடங்களிலேயே ஆட்டத்தைப் புரிந்து கொண்டுவிட்டான்.

"இப்பொழுது நாம் ஆடலாமாம்மா?"

ஆடத்துவங்கிய ஆனந்த் அன்று இரவுச் சாப்பாட்டையும் தூங்கப்போகும் நேரத்தையும் மறந்தான். "இந்தக் குதிரையை இங்கு நகர்த்தினால் என்னால் உன் ராஜாவைப் பிடித்துவிட முடியும், இல்லை?" ஆட்டத்தின் நுணுக்கங்களைச் சரியாகக் கற்காமல் அங்கிருந்து எழுந்திருக்க அவனுக்கு மனதில்லை.

"அட! மிகச் சரியாகச் சொல்லிவிட்டாயே! ஆனால் ராஜாவை 'பிடிக்க' மாட்டார்கள். அதனைச் சூழ்ந்து கொள்வதை 'செக்மேட்' என்று கூறுவார்கள். சரி, இப்பொழுது எழுந்து சாப்பிட வா. இன்று உனக்குப் பிடித்த புளிசாதமும், அப்பளமும் செய்திருக்கிறேன்!" என்று அவன் தாய் அழைத்தும் அவன் அங்கிருந்து நகரவில்லை. சாதாரணமான



நாளாக இருந்தால் இந்நேரம் கும்மாள மிட்டபடியே அவன் ஓடிப் போயிருப்பான். இன்றோ விளையாட்டு மும்முரத்திலிருந்த அவனுக்குத் தன் தாயின் குரல் கேட்கவேயில்லை. தானே வெள்ளை மற்றும் கறுப்புக்காய்களை வைத்து, இருதரப்புக்கும் அவனே விளையாடிக் கொண்டிருந்தான்.

ஆனந்துக்கு மற்ற விளையாட்டுக்களும் பிடித்தமானவைதான். தன் தாயுடன் அவன் டென்னிஸ் மற்றும் பாட்மிண்டன் விளையாடுவான். தாயார் அவனை என்றும் குழந்தையைப் போல் நடத்தியதில்லை; மாறாக தன் வயதினனைப்போல் தான் நடத்துவார். அவனுக்கு விளையாட்டில் விட்டுக் கொடுத்து அவன் தன்னை தோற்கடிப்பதால் அடையக்கூடிய மகிழ்ச்சியை அவர் என்றும் அனுமதித்ததில்லை. இருவரும் ஒரே வயதையொத்த வர்கள் போல் ஆடுவார்கள். விளையாடும்போதே அவனுக்கு அந்தந்த விளையாட்டின் விதிமுறைகளைச் சொல்லித்தருவார்.

மற்ற் சிறுவர்களைப்போல் அவ்வயதில் அவனுக்குக் கண்ணாமூச்சி, போலீஸ் திருடன், போன்ற விளையாட்டுக்களில் நாட்டம் இருக்க வில்லை. யாராவது அவனிடம் அவன் ஏன் அக்கம் பக்கத்துச் சிறுவர்களுடன் விளையாடுவதில்லை என்று கேட்டால், "அவை எல்லாம் விளையாட்டே அல்ல," என்பான் ஆனந்த்.

ஆனால் செஸ் விளையாடக் கற்றபின்னர் மற்ற விளையாட்டுக்களில்கூட அவனுக்கு நாட்டம் இருக்கவில்லை. சென்னையில் அவர்கள் வீட்டிற்குப் பக்கத்தில் ஒரு சதுரங்க விளையாட்டுச் சங்கம் இருந்தது. அவன் தாய் ஒருநாள் அவனை அங்கு அழைத்துச் சென்று அதன் அமைப்பாளர்களிடம் அறிமுகப்படுத்தி வைத்தார். அங்கு பல மேஜைகளில் ஆண்களும், பெண்களுமாய் செஸ் விளையாடிக் கொண்டிருந்தனர். அச்சின்னஞ்சிறிய பையனின் கண்களில் ஆர்வம் மின்னியது. 'இங்கு நம்மால் முடிந்த போதெல்லாம் வந்துவிட வேண்டும்,' என அவன் நினைத்துக் கொண்டான்.

மறுநாளே காலை உணவுக்கு முடிந்ததுமே அங்கு போய் விட்டான். "நான் யாருடன் விளையாடுவது?"

என்று அங்கிருந்த அதிகாரி ஒருவரிடம் ஆவலாகக் கேட்டான். மேஜைகள் ஒவ்வொன்றாக நிரம்பிக் கொண்டிருந்தன. ஒரு மேஜையில் ஒரு மனிதர் பலமாக சிந்தித்துக் கொண்டிருந்தார். ஆனந்தின் குரலைக் கேட்ட அவர், அவனைத் தன்னிடம் அழைத்து, "என்னுடன் விளையாடுகிறாயா?" என்று கேட்டார்.

"ஓ!" மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொண்ட ஆனந்த் அவருடன் ஆடலானான். அவர்களிருவரும் பார்ப்ப தற்கு விநோதமான ஜோடியாகக் காட்சியளித்தனர். அவர் சீரிய முகத்துடனும், சிறுவன் ஆனந்த் ஆர்வம் ததும்பும் முகத்துடனும் விளையாடலாயினர். சற்று நேரத்தில் அவர், 'செக்!' என்றவாறு ஒரு காயை நகர்த்தினார்.

ஏழு வயதான ஆனந்தின் முகம் வாடி விட்டாலும், நெஞ்சுறுதியுடன் புன்னகைத்தவாறே எழுந்து நின்று, தன்னைவிட பல வருடங்கள் மூத்த அம்மனிதருடன் கைகுலுக்கினான். "என்னுடன் விளையாடியதற்கு மிகவும் நன்றி," என்று கூறிவிட்டு அருகிலிருந்த மேஜையில் நடந்துகொண்டிருந்த விளையாட்டைச் சிறிது நேரம் பார்த்துக் கொண் டிருந்துவிட்டு வீட்டிற்குச் சென்றான்.

கோடை விடுமுறைக்காகப் பள்ளிகள் மூடப் பட்டிருந்தன. இனி பலமணி நேரம் இன்பமாகப் பொழுதுபோக்க அவனுக்கு ஒரு இடம் கிடைத்து விட்டது! அன்றிலிருந்து அவன் தினமும் காலைச் சிற்றுண்டியை முடித்துக்கொண்டு அங்கு செல்வதை வழக்கமாக்கிக் கொண்டான். அங்கு வருபவர்களுக்கு, தினமும் தன்னுடன் விளையாட யாரையாவது ஒரு கூட்டாளியைத் தேடும் அச்சிறுவனின் முகம் பழக்கமாகிவிட்டது. சில நாட்கள் அவன் ஆடிய எல்லா ஆட்டங்களிலுமே தோற்றுவிடுவான். தோற்ற பின்னர் ஒவ்வொருவரிடமும் அவன் அயராமல் கைகுலுக்கும் காட்சி பார்ப்பவர் மனதைத் தொடுவதாக இருக்கும்.

ஆனால் வீட்டிற்கு வந்து தன் ஏமாற்றத்தைத் தாயுடன் பகிர்ந்து கொள்வான். "அம்மா, இன்று இரண்டு ஆட்டங்களையும் தோற்றுவிட்டேன்," என்று துயரத்துடன் கூறும் அவன் குரலில் அழுகை எட்டிப் பார்க்கும்.

"அதனாலென்ன, பாபா? நீ நாளை நன்றாக



விளையாடுவாயென்று எனக்கு நம்பிக்கை இருக்கிறது. ஆட்டத்தைப் பற்றியும் நீ அதில் செய்த தவறுகளைப் பற்றியும், புது விஷயங்களை அறிந்து கொண்டாயல்லவா? அடுத்தமுறை விளையாடும்போது அத்தவறு களைச் செய்யமாட்டாய். நாம் நம் தவறு களிலிருந்துதான் பாடம் கற்று நம்மை நாமே திருத்திக் கொள்ளவேண்டும். மனதைத் தளர விடாதே!" என்று அவன் தாய் புத்திமதி கூறி ஊக்க மளித்தார். அவனும் தலையாட்டி அதனை ஆமோதித்தான்.

"காலை ஒன்பது மணிக்கெல்லாம் தவறாமல் ஆஜராகி விடும் அச்சிறுவன் யார்?" அங்கு வரும் பார்வையாளர்களில் ஒருவர் ஒருநாள் அச்சங்கத்தின் செயலடம் கேட்டார்.

"ஓ அவனா! அவன் பெயர் ஆனந்த். அவனுக்கு சதுரங்கத்தின்மீது மிகுந்த ஈடுபாடு இருக்கிறது. இதுவரை அவன் வென்ற ஆட்டங்கள் மிகக் குறைவு. தோல்வியுற்றாலும் அவன் தன் மதிப்பை என்றுமே இழந்ததில்லை. எனக்கே சில நேரங்களில் அவனைப் பார்க்கப் பரிதாபமாக இருக்கும். ஆனால் அவன் மனோதிடம் நிச்சயம் மெச்சப்பட வேண்டியது," என்றார் காரியதரிசி.

"அவனுடன் நான் நேற்று ஆடினேன். அவனுடைய ஆட்டம் மிகச் சிறப்பாக இருக்கிறது. பயிற்சியும், விடாமுயற்சியும் இருந்தால் அவன் ஒருநாள் நிச்சயம் முன்னணி ஆட்டக்காரனாக வருவான்," என்றார் மற்றொருவர்.

"உம்...ம்... விடாமுயற்சி! இச்சிறுவனுடைய வயதையொத்த மற்ற சிறுவர்கள் தோல்விகளால் மனமொடிந்து போயிருப்பார்கள்; ஆனால் இவனோ திரும்பத் திரும்ப முயற்சி செய்வதற்காக வந்து கொண்டே இருக்கிறான். இதற்காகவே அவனுக்கு ஒரு பரிசு தரவேண்டும், அல்லவா?" என்றார் அந்தப் பார்வையாளர்.

அவ்வாறு அவனுக்குத் தரப்பட்டதுதான் ஆனந்த் வாங்கிய முதல் பரிசு. ஆனால் வேடிக்கை என்னவென்றால் அது அவனுடைய ஆட்டத்திற்காகக் கொடுக்கப்பட்டது இல்லை! விடாமுயற்சிக்காக அவனுக்குக் கிடைத்த பரிசு, சதுரங்க ஆட்டம் பற்றிய

ஒரு புத்தகம். அவனுக்கு அப்பொழுது ஏழு வயது.

சதுரங்கத்தில் அவனுக்கிருந்த அளவுக்கதிகமான ஆர்வத்தைக் கண்டு கவலைப்பட்டார் அவன் தாய். சதுரங்கத்தைத் தவிர மற்ற விளையாட்டுக்களில் அவனை ஈடுபட வைக்க அவர் பட்டபாடு கொஞ்சம் நஞ்சமல்ல. அவனை டென்னிஸோ, பாட்மிண்டனோ விளையாட அழைத்தால் அவன் தவறாமல் கூறுவது; "அம்மா, ஒரே ஒரு ஆட்டம் செஸ் ஆடிவிட்டு டென்னிஸ் விளையாடப் போகலாமா?"

பள்ளியில் அவனுக்குக் கொடுக்கப்பட்ட பட்டப் பெயர் 'சதுரங்கச் சிறுவன்'. "ஆனந்த், என்ன யோசனையில் மூழ்கிவிட்டாய்? உன் ராஜாவை எப்படி காப்பாற்றுவதென்றா?" ஏனைய மாணவர்கள் அவன் அமைதியாக அமர்ந்திருப்பதைக் கண்டால் அவனைக் கிண்டல் செய்வார்கள். இனிமையான





குணமுடைய ஆனந்த் பதிலுக்குச் சிரிப்பான். அவர்களுடைய அன்பான கிண்டலை அவன் பொருட்படுத்த மாட்டான்.

ஆனந்த் சதுரங்கச் சங்கத்தில் ஆடும் ஆட்டங்களில் வெற்றி பெற ஆரம்பித்திருந்தான். அவனுக்கு ஆட்டத்தின் நுணுக்கங்களைக் கற்றுத்தரவும், மற்ற விதங்களில் உதவவும் பலர் முன் வந்தனர். அவனும் ஆர்வத்துடன் அவர்கள் கற்பித்தவற்றைக் கற்றான். ஊரில் நடைபெற்ற சதுரங்கப் போட்டிகளைப் பற்றிய அறிவிப்புக்கள் அவன் ஆர்வத்தைத் தூண்டத் தவறியதில்லை. சதுரங்கமே அவன் உயிர்மூச்சாக இருந்தது. அவன் வாழ்வது, கனவு காண்பது எல்லாமே அதற்காகத்தான் என்றால், அது மிகையாகாது. அவனுக்கு ஒன்பது வயதாகும்போது, இந்தியன் ரயில்வேயில் உயர் அதிகாரியாக இருந்த அவன் தந்தை திரு. விஸ்வனாதன், பிலிப்பைன்ஸ் நாட்டுத் தலைநகரமான மணிலாவுக்கு வேலை நிமித்தமாக செல்ல வேண்டியிருந்தது. அங்கு போனபோது, புதிய சூழ்நிலையில் நண்பர்கள் யாருமில்லாத நிலையில் அவன் தன் வீட்டுப்பாடங்களை முடித்தபின், ஓய்வு நேரத்தில் புத்தகங்களைப் படிப்பதிலும், தொலைக் காட்சி மற்றும் வீடியோ பார்ப்பதிலும், குறிப்பாகச் சதுரங்கம் ஆடுவதிலும் செலவிட்டான். வேறு கூட்டாளிகள் யாரும் இல்லாத நிலையில் அவன் தாய்தான் அவனுடன் விளையாடுவார்.

"அம்மா, அம்மா! ஒரு ஆட்டம், ஒரேயொரு ஆட்டம் ஆடலாம், வாருங்கள், ப்ளீஸ்!" என்று அடிக்கடி அவரைக் கெஞ்சுவான் ஆனந்த். அவனுடைய ஆர்வத்தைக் கெடுக்க மனதில்லாமல் அவரும் தான் செய்து கொண்டிருக்கும் வேலையை விட்டுவிட்டு அவனுடன் விளையாட வருவார்.

அவன் தாய் காயை நகர்த்த சிறிது நேரம் எடுத்துக்கொண்டால்கூட அவன் பொறுமையிழந்து, "காயை நகர்த்த எவ்வளவு நேரம் எடுத்துக் கொள்கிறீர்கள்!" என்பான். அவன் முறை வந்தால் மின்னல் வேகத்தில் தன் காயை நகர்த்திவிடுவான். சில சமயம் அவன் தாய் தன் காயை நகர்த்திய வுடனேயே, சிறிதும் தாமதிக்காமல் அவனும் தன் காயை நகர்த்திவிடுவான்.

வெகுவிரைவில் அவன் தன் தாயை மட்டு மல்லாமல் வீட்டிற்கு வரும் குடும்ப நண்பர்களையும், விருந்தினரையும்கூட முதலில் ஆடுவதற்கு இணங்கச் செய்து, பிறகு தோற்கடிப்பது வழக்கமாகிவிட்டது.

ஒருநாள் அவன் தாய், தொலைக்காட்சியில் சதுரங்கத்தின் அடிப்படையில் அமைக்கப்பட்டிருந்த ஒரு நிகழ்ச்சியைப் பார்த்தார். அதில் ஒரு ஆட்டத்தை முதலில் ஒளிபரப்பிவிட்டு, நிகழ்ச்சியின் முடிவில் அந்த ஆட்டத்தைப் பற்றிய புதிர் தரப்படும். புதிர்களுக்குச் சரியாக விடைகளை எழுதி அனுப்புபவர்களைக் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுத்து அழைத்து பரிசு வழங்குவார்கள். இது ஆனந்துக்கு ஏற்ற நிகழ்ச்சி என்று முடிவு செய்த அவர் உடனே அதனை வீடியோவில் பதிவு செய்தார். தினசரி ஒளிபரப்பாகும் அந்த நிகழ்ச்சியின் நேரம் அவன் பள்ளிக்குச் சென்றிருக்கும் நேரமாக இருந்ததால்தான் இந்த ஏற்பாடு.

ஆனந்துக்கு மட்டிலடங்கா மகிழ்ச்சி. பதிவு செய்யப்பட்டிருந்த ஆட்டத்தைக் கூர்ந்து கவனித்தான். அது அவன் வாழ்க்கையிலேயே மிக்க மகிழ்ச்சியான நேரமாக அமைந்தது. "அடுத்தமுறை நானும் அந்த மாதிரி காய் மாற்றத்தைச் செய்யப்போகிறேன்," என்று உற்சாகத்துடன் அடிக்கடி கூவியபடியே நிகழ்ச்சியைப் பார்த்தான். நிகழ்ச்சியின் முடிவில் கொடுக்கப்பட்டப் புதிர், அந்த ஒன்பது வயது சிறுவனுக்கு மிகவும் எளிதாக இருந்தது.

"அம்மா, என் விடைகளைச் சரிபார்க்கிறீர்களா? இதனை உடனே தபாலில் அனுப்ப வேண்டும்," என்றான் ஆனந்த்.

"இப்பொழுது இல்லை. முதலில் உன் உடைகளை மாற்றிக்கொண்டு சாப்பிடு," என்று கண்டிப்புடன் கூறினார். அவன் முகம் சட்டென்று வாடியதைக் கவனித்த அவர், உடனே தன் குரலைத் தாழ்த்தி மென்மையாக, "விரைவாகச் சாப்பிட்டுவிட்டுப் போனாய் என்றால் இன்றைய தபாலிலேயே இதைச் சேர்த்துவிடலாம், இல்லையா? உன் விடைகள் சரியாக இருந்து அதிர்ஷ்டம் இருந்தால் அடுத்த நிகழ்ச்சியில் நீ வரக்கூடுமல்லவா," என்றார்.

ஆனந்த் மகிழ்ச்சி பொங்கச் சிரித்தான். அவன் தேர்ந்தெடுக்கப்படுவதைப் பற்றி நினைக்கக்கூட இல்லை. அவனைப் பொறுத்த வரை அவன் எல்லா



புதிர்களையும் விடுவித்து விட்டது மட்டுமல்லாமல் அவையனைத்தும் சரியான விடைகள் என்று அவன் தாய் கூறிவிட்டதில் அவனுக்கு மிக்க மகிழ்ச்சி. சில ஆண்டுகளுக்கு முன் விடா முயற்சிக்காகப் பரிசுபெற்ற அவனுக்கு, புதிர்களை விடுவிப்பது தினசரி வேலைகளில் ஒன்றாகிவிட்டது.

விடா முயற்சி இம்முறையும் அவனைக் கைவிடவில்லை. "அம்மா, இங்கே பாருங்கள்! டிவி. கம்பெனியிலிருந்து என் பெயருக்கு லெட்டர் வந்திருக்கிறது!" ஒருநாள் ஒரு கடிதத்தை ஆட்டியபடி கூறினான் ஆனந்த். "நான் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறேன் என்று நினைக்கிறேன்!" என்று குதூகலித்தான்.

ஆமாம். குலுக்கல் முறையில் அவன் தேர்வாகியிருந்தான். "வரும் ஆகஸ்ட் 3ஆம் தேதி மணிலா தொலைக்காட்சி மையத்தில் நடக்கவிருக்கும் பரிசளிப்பு விழாவில் கலந்துகொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்," என்று அக்கடிதத்தில் எழுதியிருந்தது.

"வாவ்! நான் நிகழ்ச்சியில் பங்கெடுக்கப் போகிறேன்!" ஆனந்துக்கு சந்தோஷம் தாளவில்லை. குறிப்பிட்ட நாளன்று ஆனந்த் தன் தாயுடன் தொலைக்காட்சி மையத்திற்குப் போனான். நிகழ்ச்சித் தொகுப்பாளர் அவனைப் பார்வையாளர்களுக்கு அறிமுகப்படுத்திவிட்டு அவனுக்குப் பரிசளித்தார். இம்முறையும் பரிசு சதுரங்க ஆட்டத்தைப் பற்றிய புத்தகம்தான்.

மறுநாள் பள்ளியில் அவன் மிகவும் பிரபலமாகி விட்டான். ஆனால் புகழ் ஆனந்தின் தலைக்கேற வில்லை. அவன் புதிருக்கு எழுதிய விடைகள் ச ்யாக இருந்தபோதிலும் மேலும் இருமுறை மட்டுமே அவன் அந்நிகழ்ச்சியில் பங்கேற்க அழைக்கப்பட்டான். ஒவ்வொரு முறையும் அவனே பரிசு வாங்காததற்கு ஒரே காரணம் வெற்றி பெறுபவரைத் தேர்ந்தெடுக்கக் கையாளப்பட்ட குலுக்கல் முறைதான்.

அதன் பிறகு உள்ளூர் சதுரங்கப் போட்டிகளில் பங்கெடுக்கலானான். இத்தகையதொரு போட்டியில் பிலிப்பைன்ஸ் நாட்டின் தேசிய அளவில் பிரபலமான சிலரும் கலந்து கொள்வதாக இருந்தது. முந்தைய ஆண்டு வெற்றி பெற்றவருடன் ஆனந்த் மறுநாள் ஆடவிருந்தான்.

"அம்மா, அவரை என்னால் தோற்கடிக்க முடியுமா என்று தெரியவில்லை," என்று தன் சந்தேகத்தை வெளியிட்டான் ஆனந்த். அச்சிறுவனின் குரலில் கவலை பெரிதாகக் குடியிருந்தது.

"நீ கவலைப்படுவதைக் குறைத்துக்கொண்டு ஆட்டத்தை அனுபவிக்கக் கற்றுக்கொள்ளவேண்டும். உன்னுடைய எதிராளியின் பெயரையோ புகழையோ நினைத்துப் பயப்படக்கூடாது. சாமர்த்தியமாக விளையாடினால் யாராலும் வெற்றி பெற முடியும். அதேபோல் பெரிய ஆட்டக்காரரானாலும்கூட சில நாட்களில் சரியாக விளையாடாமல் தோற்றுவிடு வார்கள். எந்தவிதமான சூழ்நிலையையும் சமாளிக்க சிறப்பாகத் தயார் செய்துகொள்வது ஒன்றுதான் சரியான வழி," என்றவாறே அவன் தாய், சதுரங்கக் காய்களைப் பலகையில் அடுக்கலானார்.

அந்நேரம் சிறிதும் ஆறுதல் அடைந்தாலும், மறுநாள் போட்டிக்கு முன், அவனுடைய பயங்கள் யாவும் அவனை மீண்டும் ஆட்கொண்டன. ஆனால் ஆட்ட மேஜைக்குமுன் உட்கார்ந்தவுடன் அவை யெல்லாம் மறைந்துவிட்டன. தன் எதிராளி ஒரு வெற்றிவீரர் என்பதையும் அவருடன் விளையாட தான் சிறிதுநேரம் முன்வரை பயந்ததையும் மறந்தான். அவன் முன்இருந்த ஒரே இலக்கு மேஜை மேலிருந்த சதுரங்கப் பலகைதான்.

எப்பொழுதும் போல் ஆனந்த் அதிவேகமாக விளையாடினான். தன் எதிரிலிருந்த கட்டங்களின் மேலிருந்து கண்களை அகற்றாமல் உன்னிப்பாக கவனித்துக்கொண்டே இருந்தான். "அவர் மட்டும் தன் குதிரையை அந்தக் கட்டத்தில் வைத்தால் அவரை எளிதாக செக்மேட் செய்துவிடுவேன்." தன் எதிராளியின் அடுத்த நகர்வை வேகமாகக் கணக் கிட்டுக் கொண்டிருந்த ஆனந்துக்கு ஒரே மகிழ்ச்சி! ஆனால் அடுத்த கணமே, 'அத்தனை முட்டாள் தனமான நகர்வை அவர் கண்டிப்பாக செய்ய மாட்டார். ஒரு தேர்ந்த ஆட்டக்காரர் அத்தனை பெரிய தவறைச் செய்யவே மாட்டார்,' என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டான்.

ஆனால் அவன் அவர் எந்த நகர்வைச் செய்ய மாட்டார் என்று நினைத்தானோ அதையே அவர் செய்தார். அவன் எதிர்பார்த்திருந்த அதே குதிரையை



அவர் நகர்த்தியவுடன் ஆனந்தால் தன் கண்களையே நம்ப முடியவில்லை! சட்டென்று தன் ராணியை நகர்த்தி, 'செக்' என்றான்.

அவனுடைய எதிராளியின் ராஜா முற்றிலும் சூழ்ந்து கொள்ளப்பட்டிருந்தது! தோற்றவர் சதுரங்கப் பலகையை நம்ப முடியாதவராய், தலையை அசைத்தவாறு பார்த்துக் கொண்டிருந்தார். எதிரில், தன் தோள் உயரம்கூட வளராத சிறுவனைப் பார்த்தார். பின்னர் எழுந்து ஆனந்தின் கையைப் பிடித்து குலுக்கினார். "வெல் டன், மை பாய்!" (மிக்க நன்று, என் மகனே!) என்று அவன் தோளில் தட்டி பாராட்டினார். ஆனந்த் சந்தோஷ மிகுதியால் திணறினான்.

அவன் அம்மா சொன்னது எவ்வளவு உண்மை! மிகப் பெரிய ஆட்டக்காரர்கள் எவ்வாறு தவறு செய்ய வாய்ப்பிருக்கிறதோ, அவ்வாறே இளைஞர்களும் சரியான நகர்வுகளைச் செய்து வெற்றி பெறும் வாய்ப்பு இருக்கிறது என்பதை உணர்ந்தான். அன்று தான் அவனுக்குத் தன் ஆட்டத்தின்மீது நம்பிக்கையும், தன்னம்பிக்கையும் ஏற்பட்டது. அவன் முந்தைய ஆண்டு பட்டம் பெற்றவரை மிகச் சிறந்த முறையில் தோற்கடித்துவிட்டான்!

"அம்மா! நான் வென்றுவிட்டேன்! எப்படிச் செய்தேனென்று தெரியவில்லை. ஆனால் நான் அவரைத் தோற்கடித்துவிட்டேன்!" மகிழ்ச்சியாகத் தன் தாயிடம் கூறினான் ஆனந்த்.

"நீ ஓரே சீராகவும், புத்திசாலித்தனத்துடனும் விளையாடினாய், அதனால்தான் ஜெயித்தாய்!" சாதாரணமான தொனியில் அவர் பதிலளித்தார். அவனை அதிகமாகப் புகழ்வதால் அவன் தன்னடைமதியும், அளவுக்கதிகமான தன்னம்பிக்கையும் கொள்வதில் அவருக்கு விருப்பமில்லை.

அவனுடைய ஆட்டம் முன்னேற்றமடைந்து மேம்பாடு எய்தியது. வெகுவிரைவில் அவன் பள்ளியிலும், உள்ளூர் மட்டத்திலும் ஆடிய ஒவ்வொரு போட்டியிலும் வெற்றி பெறலானான். சில வருடங்களுக்கு முன், தான் ஆடிய ஒவ்வொரு ஆட்டத்திலும் தோற்ற சிறுவனுக்கும் இந்த வெற்றிச் சிறுவனுக்கும் எவ்வளவு வித்தியாசம்!

“ஆனந்த் எவ்வளவு வேகமாக ஆடுகிறான்! அவனுக்கிருக்கும் ஆற்றலில் பாதியாவது எனக்கு இருக்கக் கூடாதா?” என்று அவன் நண்பர்கள் ஏக்கத் துடன் கூறினர்.

“பெரியவனான பிறகு சதுரங்கத்தை வாழ்க்கைத் தொழிலாக ஏற்கப் போகிறாயா?” அவன் பள்ளித் தோழன் நெமொ கேட்டான்.

“எனக்குத் தெரியவில்லை. அதைப் பற்றி யோசிப்பதற்கு முன் நான் கற்க வேண்டியவை எவ்வளவோ இருக்கின்றன,” என்று அடக்கமாகப் பதிலளித்தான், ஆனந்த். ஆனால் அவன் பிஞ்சு மனதில் பிற்காலத் தொழிலுக்கான விதை விதைக்கப் பட்டுவிட்டது. அவன் குடும்பம் இந்தியா திரும்பிய பிறகு அவன் உள்ளூர்ப் போட்டிகளில் பங்கு பெறலானான்.

“இன்று ஆடுவதில் ஏதும் பயனில்லை. இன்று ஆனந்த் ஆடிக்கொண்டிருக்கிறான். மாலை வரை எல்லா ஆட்டங்களிலும் அவன்தான் வெல்வான்.” ஆனந்த் தன் மேஜையின் மீதிருக்கும் சதுரங்கப் பலகையை விட்டுக் கண்களை அகற்றாமல், ஆட்டத்தில் முழுக்கவனத்துடன் ஈடுபட்டிருப்பதைப் பார்த்து மற்ற ஆட்டக்காரர்கள் அலுத்துக் கொள்வார்கள்.

சென்னையிலிருக்கும் ‘தால் க்ளப்’பில் ஞாயிறு தோறும் நடைபெறும் போட்டிகளில் பரிசு ஏதும் கிடையாது. தோற்றவர் விலக வேண்டும் என்ற முறையில் விளையாடப்படும் அப்போட்டியில் ஆனந்த் அனைவரையும் விலக்கிவிடுவது வழக்கமாகி விட்டது! அதிலிருந்து தேசிய அளவிலும், சர்வதேச அளவிலும் போட்டியிட்டு வெல்வதென்பது அவனுக்குப் பெரியதாக இல்லை.

‘மின்னல் சிறுவன்’ ஆனந்த் உலக அரங்கில் பிரகாசிக்கத் துவங்கிவிட்டான்!

இன்று, சென்ற இடமெல்லாம் தன் வெற்றிக் கொடியை நாட்டி, சதுரங்கத்தில் தன் பெயரைப் பொன்னெழுத்துக்களால் பொறித்துக் கொண்டிருக் கிறார் ஆனந்த்.



# சென்னையிலிருந்து வந்த புலி

இந்தியாவில் தனி விளையாட்டுக்களில் உலக அளவில் வெற்றி வீரர்களைக் காண்பது மிக அரிது. அவர்களில் தன் துறையில் மிகச் சிறந்து விளங்கு பவர்களில் விஸ்வனாதன் ஆனந்தும் ஒருவர். 1969ஆம் ஆண்டு டிசம்பர் 11ஆம் தேதி பிறந்த ஆனந்த், மிகச் சிறிய வயதிலேயே செஸ் ஆட்டத்தில் ஈடுபாடு கொண்டு, பதினாறாம் வயதில் தேசிய வீரராக வாகை சூடினார். அவ்வளவு சிறிய வயதில் வெற்றி பெற்றவர்களில் அவர்தான் முதன்மையானவர்.

ஆனந்த் இந்தியாவின் முதல் கிராண்ட் மாஸ்டரும்கூட. உலக அளவில் அவர் இன்று இரண்டாம் இடத்தை வகிக்கிறார். உலகத்தின் மிகப்பெரிய ஆட்டக்காரர்களை போட்டிகளில் வென்றதோடல்லாமல், கம்ப்யூட்டர்களுடன்கூட விளையாடி வென்றிருக்கிறார். சில வருடங்களுக்கு முன் ஆம்ஸ்டர்டாமில், ஒரே நேரத்தில் ஆறு கம்ப்யூட்டர்களுடன் ஆடி வென்ற பெருமை இவரைச் சேரும்.

சிறு வயது முதலே செஸ் போட்டிகளில் பங்கேற்று வந்திருந்தாலும், அவர் தன் படிப்பைப் புறக்கணிக்கவில்லை. ஆனந்த் பொருளாதாரத்தில் ஒரு இளங்கலைப் பட்டதாரி. தான் பங்கு கொள்ளும் பல போட்டிகளிலிருந்து சிறிது நேரம் ஒதுக்க முடியுமே யானால், அவருக்குத் தன் மேற்படிப்பைத் தொடரும் எண்ணமும் இருக்கிறது. சர்வதேச சதுரங்கத்திற்கு ஆனந்த் ஆற்றியுள்ள தொண்டுதான் இன்று இந்தியாவின் பல சிறுவர் சிறுமியரை இந்த ஆட்டத்தில் ஈடுபாடு கொள்ளத் தூண்டியுள்ளது. கிரிக்கெட்டில் மட்டுமே ஈடுபாடு கொண்டுள்ள இத்தலைமுறையினரை வேறொரு ஆட்டத்தின்பால்

ஆர்வம் கொள்ளச் செய்வதென்பது போற்றப்பட வேண்டிய விஷயமாகும்.

இதனாலேயே அவரை 'ஓர் மனித செஸ்புரட்சி' என்று கூறுவதில் வியப்பேதுமில்லை.

அவருக்கு அர்ஜுனா விருது மற்றும் ராஜீவ் காந்தி கேல் ரத்னா விருதும் வழங்கப்பட்டது. இளம் வயதில் பத்மஸ்ரீ விருது வழங்கப்பட்டதும் இவருக்கே.



# கேள்வி கேட்ட சிறுவன்

"பால்! நீ எங்கிருக்கிறாய்?" க்வெட்டா ரயில் நிலையத்தில் தன் மகனைக் கவலையுடன் தேடிக்கொண்டிருந்த திரு. ராம் பியாரேலால் உரத்து அழைத்தபடி அங்கும் இங்கும் அலைந்தார்.

திரு. லால் லாகூருக்குச் சென்று கொண்டிருந்த தன் நண்பர் ஒருவரை வழியனுப்புவதற்காக ரயில் நிலையம் வந்திருந்தார். அவருடன் வந்திருந்த அவருடைய நான்கு வயது மகன் யஷ்பால், திடீரென்று காணாமல் போய்விட்டிருந்தான். அப்பொழுதுதான் நிலையத்திற்குள் நுழைந்திருந்த ரயில் வண்டி அச்சிறுவனின் கவனத்தை ஈர்த்திருந்தது. இதையறியாத பெரியவர்களின் இடையே சிறிது நேரம் கலவரம் நிலவியது.

"சார், அவன் இங்கிருக்கிறான்!" என்று அவனைத் தேடிக் கொண்டிருந்தவர்களில் ஒருவர் அறிவித்தார். சிறுவன் யஷ்பால், சரக்குப் பெட்டிகளுக்குப் பின்னால் நின்றவாறு, ரயில் பெட்டிகளைக் கவனமாக உற்று நோக்கிக் கொண்டிருந்தான்.

"பால், எங்கே போய்விட்டாய்?" நிம்மதிப் பெருமூச்சு விட்ட திரு. லால், தன் கோபத்தைக் கஷ்டப்பட்டு மறைத்தவாறு அவனிடம் கேட்டார்.

சிறுவனோ தன்னால் ஏற்பட்ட கலவரத்தைப்

பற்றி ஏதும் அறியாதவனாய் தந்தையிடம் தான் பார்த்ததைப் பற்றி கேள்வி கேட்கலானான். "அப்பா, இவை ஏன் இப்படி துருத்திக் கொண்டு நிற்கின்றன? ரயில் பெட்டிகள் ஒன்றோடொன்று சேர்ந்து ஏன் இல்லை?" ஆவலுடன் கேட்டான் பால்.

"என்ன?" அனைவரையும் கலவரப்படுத்திய பால்மீது ஒரு கணம் கோபம் கொண்ட திரு. லால், ஆவல் நிறைந்த அவன் முகத்தைக் கண்டதும், தன் கண்டிப்பை சிறிது தள்ளிபோட்டு விட்டு புன்முறுவலுடன், "அவை எதற்காக இருக்கின்றன என்று நீ சொல் பார்ப்போம்!" என்றார்.

இது அவனைச் சிந்திக்கத் தூண்டியது. சில நிமிடங்கள் சிந்தித்த பிறகு அவன் முகம் பிரகாசம் அடைந்தது.

"எனக்குத் தெரியுமே! இவை இல்லாவிட்டால் ரயில் பெட்டிகள் ஒன்றோடொன்று மோதி உடைந்து விடும்!" வெற்றிக்களிப்புடன் கூறினான் பால். அவன் தந்தை சிரித்தார்.

"பெட்டிகள் உடையாது, ஆனால் அவற்றில் பயணம் செய்பவர்களுக்கு மிகவும் அசௌகரியமாக இருக்கும், ஏனென்றால் பெட்டிகள் இடித்துக் கொண்டும், குலுங்கிக்கொண்டும் அவற்றுள் இருப்ப வற்றை அங்கும் இங்கும் சிதறவைத்துக் கொண் டிருக்கும்!" என்றார்.

யஷ்பால் இப்படித்தான், தன்னைச் சுற்றி இருப்பவற்றைப் பற்றி எப்பொழுதும் கேள்வி கேட்டவண்ணம் இருப்பான். கேள்விகளுக்குப் பதில் கிடைக்காவிட்டால், அவற்றுக்கு தானே விடை தேட முற்படுவான். "யஷ்பால் ஒருநாள் பெரிய சாதனைகள் புரிவான்,"என்று குடும்ப நண்பர்களும் அக்கம் பக்கத்தவரும் அவனைப்பற்றிக் குறிப்பிடுவர்.

க்வெட்டா, பூகம்பத்திற்குப் பெயர்போன ஊராகும். இதனால், சிறு நிலநடுக்கம் ஏற்பட்டாலும், பூகம்பத்திற்குப் பயந்து, மக்கள் தம் குடும்பங்களுடன் திறந்த வெளியில்தான் படுத்துறங்குவது வழக்கம். வீடுகள் இடிந்து விழுந்து மக்கள் இறப்பதைத் தடுப்பதற்காகவே இந்த ஏற்பாடு. இவ்வாறு திறந்த வெளியில் தூங்குவதென்பது சிறுவர்களுக்குக் கொண்டாட்டம். வெளியில் சாப்பிடுவதும், உறங்குவதும் அவர்களுக்கு ஏதோ சுற்றுலா



போலிருக்கும். மற்ற கூடாரங்களிலிருக்கும் தம் நண்பர்களை அழைப்பதும், விளையாடுவதும் அவர்களுக்கு இன்பமாக இருக்கும்.

ஆனால் நிலநடுக்கங்கள் எப்போதும் விளையாட்டாக இருக்காது. யஷ்பால் எட்டு வயது சிறுவனாக இருக்கும்போது ஒருமுறை மிகப் பயங்கரமான பூகம்பம் க்வெட்டாவைத் தாக்கியது. பல நூறு குடும்பங்கள் வீடுகளின் இடிபாடுகளிடையே சிக்கித் தவித்தனர். அவற்றில் பாலின் குடும்பமும் ஒன்று. பல மணி நேரம் இடிபாடுகளின் அடியில் புதைந்துகிடந்த பிறகே உதவிக் குழுக்கள் வந்து அவர்களை மீட்டனர். நினைவிழந்த அவனுடைய தங்கையை அவன் தாய் சுயநினைவிற்கு மீட்டார்.

இதுநாள் வரை விளையாட்டாக இருந்த பூகம்பம், சிறுவர்களுக்கு ஒரு பயங்கர உண்மை யாகியது. பலர் உயிர் இழந்தனர். யஷ்பாலும் அவன் குடும்பத்தினரும் இடிந்துவிட்ட தம் வீட்டருகில் உட்கார்ந்திருந்தனர். திரு. லால், தம் மனைவியை குடும்பத்தினருக்குத் துணையிருக்க விட்டுவிட்டு, மீட்குப் பணிகளில் ஈடுபடச் சென்றார். யஷ்பால் தன்னைச் சுற்றியுள்ள அழிவைக் கண்டு மிகுந்த துயரமுற்றான். வெடித்துக் குழிந்திருந்த சாலைகள், தரைமட்டமாகிவிட்ட கட்டிடங்கள் மற்றும் ஆங்காங்கே பற்றி எரியும் தீநாக்குகள் அவன் மனதைப் பெரிதும் பாதித்தன.

"பால், தெருக்கோடியிலிருக்கும் கடைகூட இடிந் திருக்குமா," என்று அவன் நண்பன் குந்தன் கேட்டான். மிட்டாய்களையும் தின்பண்டங்களையும் விற்கும் கடை அது. அவன் நண்பனின் மனதிலிருந்ததை பால் உடனே ஊகித்துவிட்டான்.

சிறிது நேர மௌனத்திற்குப் பிறகு, "அப்படித் தான் இருக்குமென்று நினைக்கிறேன்" என்றான் அவன்.

"போய்ப் பார்க்கலாமா?" இருவரும் இடிபாடு களில் இடறி விழுந்தவாறே அக்கடையை நோக்கி ஓடினர். கடை இடிந்து, கண்ணாடி பாட்டில்கள் உடைந்து அவற்றிலிருந்த மிட்டாய்கள் அங்குமிங்கும் சிதறிக் கிடப்பதைக் கண்டனர். இருவரும் மிட்டாய் களையும், மற்ற தின்பண்டங்களையும் தத்தம்

பாக்கெட்டுக்களில் நிரப்பிக் கொண்டனர். திரும்பி வந்த அவர்கள், பயத்தாலும், பசியாலும் அழுது கொண்டிருந்த குழந்தைகளுக்கு மிட்டாய் கொடுத்து சமாதானம் செய்தனர். இதனால் குழந்தைகள் பூகம்பத்தின் கொடுமையைச் சிறிதுநேரம் மறந்திருந்தனர்.

யஷ்பாலின் தாய் அவன் தங்கையை மடியில் வைத்துக்கொண்டு கவலையுடன் அமர்ந்திருந்தார். "நாம் இங்கே வெகுநேரம் இருக்க முடியாது; நிவாரண முகாம்களுக்குப் போய்விடவேண்டும்," என்றார் அவர். அவன் தந்தை தம் பணிகளிலிருந்து இன்னும் திரும்பி இருக்கவில்லை. அவன் தாய் தன்னால் மீட்க முடிந்த சில சாமான்களை வீட்டின் இடிபாடுகளிலிருந்து மீட்டு, ஒரு பெரிய பெட்டியில் வைத்தார். அதனைத் தலையில் வைத்துக்கொண்டு, குழந்தையை இடுப்பிலும், மற்ற சிறுவர்களின் கையைப் பிடித்துக் கொண்டும் கூடாரங்களை நோக்கி நடக்கலானார்.

அவரைப் பார்த்து யஷ்பாலுக்குப் பெருமை பிடிபடவில்லை. 'மற்ற பல பெண்மணிகளைப் போல் அழுது கொண்டிராமல் என் தாய் எவ்வளவு தைரிய மாய் இன்னல்களை எதிர்கொள்கிறார்!' என்று நினைத்தவாறே அவரைப் பின்தொடர்ந்தான். அவனைச் சுற்றிலும் இருந்த அழிவு அவனுள் பல கேள்விகளை எழுப்பியது.

"அம்மா, பூகம்பங்கள் எப்படி ஏற்படுகின்றன?" என்று தன் தாயைக் கேட்டான் பால்.

"எனக்குச் சரியாகத் தெரியாது. ஆனால் நிலத்தின் அடியில் பெரிய பாறைகள் நகர்ந்து ஒன்றோ டொன்று இடித்துக் கொண்டேயிருக்கும். சில சமயம் அவை வேகத்தோடு மோதிக்கொள்ளும்போது நிலநடுக்கம் ஏற்படுகிறது. இது பற்றி உனக்குப் பள்ளியில் இன்னும் விரிவாகக் கற்றுக்கொடுப் பார்கள்." பொறுமையாகப் பதில் அளித்தவாறே இடிந்த கட்டிடங்களுக்கிடையே மெல்ல நடந்தார் அவர்.

அதன்பின்னர் யஷ்பால் பல நாட்கள் தன் காதை நிலத்தில் பதித்து, பாறைகள் மோதிக் கொள்வதைக் கேட்க முயன்றான்!

பூகம்பம் வந்தபின் க்வெட்டாவிலிருந்து மக்கள் பெருமளவில் இடம் மாறினர். பாலின் தந்தை போர்த்



தளவாடங்கள் செய்யும் தொழிற்சாலையில் குமாஸ்தாவாகப் பணிபுரிந்து வந்தார். எனவே, அவர் க்வெட்டாவிலேயே தங்க நேர்ந்தது. ஆனால் அவர் தம் குடும்பத்தைப் பஞ்சாபிலிருந்த சொந்தக் கிராமமான ஜங்கில் விட்டு விட்டு வந்தார்.

கொஞ்ச நாட்கள் ஜங்கில் இருந்த பிறகு, பாலின் தாய், குழந்தைகளை அழைத்துக் கொண்டு தம் தந்தையின் ஊரான கோட் இஸாஷாவிற்குச் சென்றார். அது ஒரு மிகச் சிறிய கிராமம். அங்கு பாலின் தாய்வழி பாட்டனார் தம் வீட்டோடு இணைந்த ஒரு மாவு மில்லை நடத்தி வந்தார்.

மாவுமில் குழந்தைகளுக்கு மிகப் பிடித்தமான இடமாக இருந்தது. அங்கிருந்த பிரம்மாண்டமான இயந்திரம் அவர்களுக்கு வியப்பூட்டக்கூடியதாக இருந்தது. ஒரு உருளை, பெரியதாக இரண்டு அரவைக் கற்கள் மற்றும் ஐந்தடி விட்டத்தில் சக்கரங்கள் கொண்ட அதைப் பார்க்கவே பிரமிப்பு ஏற்படும். அதை இயக்கியவுடன், மேலிருந்த புகைபோக்கி வழியாக காற்று வேகமாக வெளியேறும். யஷ்பாலின் உறவுக்காரரான பேரி மாமா என்பவர்தான் அந்த மில்லை இயக்கினார். அவர் தன் சொந்த மூளையால் புகைபோக்கி மேல் ஒரு பானையைக் கவிழ்த்து, தன் ஒரு ஊதல் செய்திருந்தார். ஒவ்வொரு முறை காற்று புகைபோக்கி வழியே வெளியேறும் போதும் அப்பானை அதிர்ந்து ஒலியெழுப்பும். ஒலியைக் கேட்டு, ஊர்மக்கள் மில் திறந்துவிட்டதை அறிந்து கொண்டு வரத் துவங்குவார்கள்.

''மாமாஜி, இயந்திரத்தைத் தயவுசெய்து இயக்குங்களேன்!" என்று பாலும் அவன் சகோதரர் களும் அதிகாலையில் ஊதல் ஒலியைக் கேட்பதற் காகவே பேரி மாமாவை நச்சரிப்பார்கள்.

"இப்பொழுது இல்லை. ஒருமுறை இயந்திரத்தை இயக்கிவிட்டால் அதில் தொடர்ந்து தானியங்கள் போட்டபடி இருக்கவேண்டும். அதனை நிறுத்தி, திரும்பவும் இயக்குவது மிகவும் கடினம்," என்பார் பேரி மாமா.

ஊதல் ஒலி தவிர, பாலுக்கு அவன் மாமா அந்த இயந்திரத்தைப் பேணி பழுது பார்ப்பதைக் காணவும்

மிகவும் பிடிக்கும். குறைந்தது மூன்று நாட்களாவது நீடிக்கும் இவ்வேலை, மிகவும் நுட்பமாகச் செய்யப்பட வேண்டியது. இயந்திரம் அக்குஅக்காகப் பிரிக்கப் பட்டு, அரவைக் கற்கள் செதுக்கி கூர்மைப்படுத்தப் பட்டு மீண்டும் பொருத்தப்படும். யஷ்பால் அவருக்குக் கருவிகளை எடுத்துக் கொடுத்தும், இயந்திரத்தின் பாகங்களில் எண்ணெய் விட்டும் உதவுவான். தன் மாமா எந்த பள்ளிக்கும் போய் கற்காமல் தானே இத்தனை பெரிய வேலையைச் செய்வதைக்கண்டு பாலுக்கு மாளாத வியப்பு!

"இந்த இயந்திரத்தை நானாகவே முழுதும் பிரித்துத் திரும்பவும் பொருத்தி, இது எவ்வாறு வேலை செய்கிறது என்பதைக் கண்டுபிடித்தேன்," என்று வியப்பால் கண்கள் விரிய அவரையே பார்த்துக் கொண்டிருந்த பாலிடம் ஒருமுறை அவர் கூறினார். அவன் கண்களில் அன்றிலிருந்து அவர் பெரிய கதாநாயகனாகி விட்டார்.

பால் இன்னுமொரு பாடத்தையும் அன்று கற்றான். இயந்திரம் எவ்வளவு பெரியதாக இருந்தாலும் அது எவ்வாறு வேலை செய்கிறது என்பதை அறிந்து கொண்டால், அதன் பிரம்மாண்டத்தைக் கண்டு மிரளத் தேவையில்லை என்பதுதான் அது. அதன்பிறகு அந்த மில்லைக் கண்டு ஏற்படும் பிரமிப்பு அவனிடம் குறைந்து விட்டது.

தன் தாத்தாவின் கிராமமும், அங்கிருந்த மாவு மில்லும் எவ்வளவுதான் பிடித்திருந்தாலும் அவர்கள் க்வெட்டாவிலிருந்த தன் பழைய பள்ளி மற்றும் தோழர்களிடம் திரும்பியபோது அவனுக்கு மிக நிம்மதியாக இருந்தது. அவன் விட்டு வந்திருந்த நண்பர்களில் ஒருவன் லாலி. யஷ்பாலும் அவனும் சேர்ந்து பல சாகசச் செயல்களில் ஈடுபட்டிருந்தனர்.

இவற்றில் ஒன்று, அவர்கள் க்வெட்டா விமான தளத்தில் மாதத்திற்கு ஒருமுறை வரும் விமானத்தைப் பார்க்கப்போவது. லாலியின் வீடு அச்சிறிய விமான தளத்தின் அருகில், க்வெட்டாவின் ராணுவத் தளம் உள்ள பகுதியிலிருந்தது. அதனால் க்வெட்டாவிற்கு விமானம் வந்தால் அதைப்பற்றி அவனுக்குத்தான் முதலில் தெரியவரும். விமானம் வந்த அன்று இருவரும் தத்தம் சைக்கிள்களில் அதைப் பார்க்கப் போவது வழக்கம்.



விமானதளம் என்பது வெறும் ஒரு சிறிய ஓடுதளம் (ரன்வே) மட்டுமே. அங்கே ஒரு கட்டிடம்கூட கிடையாது. ஆனால் அவர்களுக்கு அந்த விமானமே அற்புதமாகத் தோன்றும். புழுதி படிந்த அச்சிறு பை-ப்ளேன் (இருவரைச் சுமக்கும் விமானம்) கல்கத்தாவிலிருந்து அவ்வளவு தூரம் பறந்து வந்திருப்பதை நினைத்து அவர்களுக்கு அதிசயமாக இருக்கும்.

“வாருங்கள் பையன்களா! விமானத்தைப் பார்க்க வந்தீர்களா?” என்றார் விமானி திரு. போஸ். இனிமையான குணமுடைய அவர், அவர்களைப் பார்த்து புன்னகைத்தார். அவர்கள் ‘ஆம்’ என்று தலையை ஆட்டினர்.

“நாளைக் காலை எட்டு மணிக்கு வாருங்கள்! உங்களுக்கு விமானத்தின் உள்புறம் காண்பிக்கிறேன். பிறகு மீண்டும் கல்கத்தா பயணம் மேற்கொள்வதற்கு முன்னதாக விமானத்தைப் பழுதுபார்ப்பதையும் நீங்கள் பார்க்கலாம்!” என்றார் அவர்.



மறுநாள் அவர் குறிப்பிட்ட நேரத்திற்கு இருவரும் அங்கு ஆஜராகி விட்டனர். “கல்கத்தாவிலிருந்து எங்கும் நிற்காமல் இவ்வளவு தூரம் பறந்து வந்தீர்களா?” என்று அவரைக்

கேட்டனர். பன்னிரண்டுவயது நிரம்பிய அவர்களுக்கு இதைப்பற்றி பொதுஅறிவு சுமாராக இருந்தது.

"இல்லை. வரும்வழியில் இருமுறை நின்று எரிபொருள் நிரப்பிக் கொண்டு வந்தேன். ஆனாலும் நான் பத்து மணி நேரத்தில் பயணத்தை முடித்து விட்டேன்!" விமானத்தின் விசைகளைச் சரிபார்த்த வாறே பதிலளித்தார் திரு. போஸ். பத்து மணி நேரத்தில் அவ்வளவு தொலைவு வந்துவிட்டாரா? ரயிலில் பயணம் செய்திருந்தால் எத்தனை நாட்கள் ஆகும்? அவர்களுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை.

விமானத்தைப் பார்ப்பதைத் தவிர நண்பர்கள் இருவரும் சேர்ந்து வேறு பல விஷயங்களையும்





செய்தனர். அந்நாட்களில் பலரும் ஆரிய சமாஜத்தில் சேர்ந்து சமூக சேவையில் ஈடுபட்டிருந்தனர். இதனால் சிறுவர்களும் சமூக சேவையில் ஈடுபட்டனர். யஷ்பால் தன் நண்பர்களுடன் வார இறுதிநாட்களில் வீடு வீடாகச் சென்று கோதுமை மாவு மற்றும் தானியங்களைச் சேகரித்து ஏழைகளுக்கு உணவளிக்க உதவுவார்கள். தம்மைவிட ஏழை எளியவர்கள்மீது இரக்கமும், அன்பும் வாழ்நாள் முழுவதும் யஷ்பாலின் ஒரு அங்கமாக விளங்கியது.

பள்ளியில் தான் சிறப்பாகப் படிப்பதோடு மட்டுமல்லாமல், தன்னைவிட படிப்பில் குறைந்த மதிப்பெண்கள் வாங்குபவர்களுக்கும் அவன் உதவினான். பள்ளியிலும் எப்போதும் யஷ்பால் கேள்விகள் கேட்டவண்ணம் இருப்பான். இருப்பினும் ஆசிரியர்கள் கேட்கும் எல்லா கேள்விகளுக்கும் அவனிடமிருந்து சரியான விடை கிடைக்கும். அவன் உயரத்தில் குறைவாக இருந்ததாலும், அவன் தலை உடலுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது மிகப் பெரியதாகக் காணப்பட்டதாலும், அவனுடைய நண்பன் ஒருவன் அவனை 'மோட்டா ஸர்' (பெருந் ததலையன்) என்று பட்டப்பெயரிட்டு அழைத்தான்!

ஆசிரியர் கேள்வி கேட்டபோதெல்லாம் மற்றவர்களால் பதில் சொல்ல முடியாமல் போனால் அவன், "மோட்டா ஸர்க்கு பதில் தெரிந்திருக்கும்," என்பான். அவன் சொல்வதற்கேற்ப, யஷ்பாலும் அதற்குச் சரியான விடையளிப்பான்!

பள்ளி அவனுக்கு எல்லா விதங்களிலும் பிடித்து இருந்தாலும் அங்கு பரிசோதனைக் கூடங்கள இல்லாதது பெரும் குறையாக இருந்தது. இதனால் பரிசோதனை செய்யவும், ஏன் பரிசோதனைகள் செய்யப்படுவதைப் பார்க்கவும் முடியாமலிருந்தது. ஒருமுறை பாலின் ஒன்றுவிட்ட அண்ணன் ஜகதீஷ், லயால்பூரிலிருந்து வந்திருந்தான். அவன் யஷ்பாலை விட இரண்டு வயது மூத்தவன். அவன் தன் லயால்பூர் பள்ளிக்கூடத்தில் நடக்கும் இரசாயனம் மற்றும் இயற்பியல் பரிசோதனைக் கூடங்கள் பற்றியும், அங்கு நடத்தப்படும் பரிசோதனைகள் பற்றியும் கூறக்கூற, தானும் அங்கு போய் படிக்க வேண்டுமென்ற ஆசை பாலுக்கு ஏற்பட்டது. அவனுடைய பெற்றோரும்

அதற்கு ஒப்புக் கொண்டனர்.

ஆனால் இதற்கு முன்பே அவன் தந்தைக்கு ஜபல்பூருக்கு மாற்றல் உத்தரவு வந்தது. தன் நண்பர்களின் அண்மையை இழந்தாலும் யஷ்பால் இம்மாற்றலால் மகிழ்ச்சியடைந்தான். அவன் நினைத்ததுபோல் ஜபல்பூரில் பள்ளிப்படிப்பு அவ்வளவு எளிதாக இருக்க வில்லை. அவனைச் சேர்க்கவிருந்த மகாராஷ்டிர உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியர் யஷ்பாலை எட்டாவது வகுப்பில் சேர்க்குமாறு அவன் தந்தையிடம் கூறினார். அவரோ, அவன் ஏற்கெனவே க்வெட்டாவில் எட்டாம் வகுப்பை முடித்து விட்டதால் ஒன்பதாவதில்தான் அவனைச் சேர்க்க வேண்டுமென்று வாதாடினார். "படிப்பில் மற்ற மாணவர்களுக்குச் சமமாக அவன் வெகுவிரைவில் முன்னேறி விடுவான்," என்று பலவாறு எடுத்துக் கூறிய பிறகே அவனை ஒன்பதாம் வகுப்பில் சேர்த்துக் கொள்ள சம்மதித்தார் தலைமையாசிரியர்.

யஷ்பால் படிப்பில் சிற்சில வித்தியாசங்களை எதிர்பார்த்திருந்தாலும், ஜபல்பூர் பள்ளிப்பாடத் திட்டத்தில் இருந்த ஒரேயடியான மாறுதல்களைத் தாக்குப்பிடிக்கச் சிறிது கஷ்டப்பட்டான். அதிலும் பல பாடங்கள் அவனுக்கு முற்றிலும் புதியவை. பாடங்கள் ஆங்கிலத்தின் வாயிலாகக் கற்றுத்தரப்பட்டன; இது அவனுக்கு மற்றமொரு சவாலாக இருந்தது. ஆனால் விடாமுயற்சியாலும், கடின உழைப்பாலும் அவன் தன் பாடங்களை சிறப்பாகக் கற்றான். ஆசிரியர்கள் எல்லாரும் மிகச் சிறப்பாகப் பாடம் கற்பித்ததால் அவனுக்கு அவ்வளவு சிரமமாகத் தெரியவில்லை. விரைவில் அவன் முன்போலவே வகுப்பின் முன்னணிக்கு வந்து, பாடங்களை அக்கறையுடன் படிக்கலானான்.

அவர்களுக்குப் பாடங்கள் கற்பித்த திரு. பவார் என்பவர் அவனுக்கு மிகவும் விரும்பிய ஆசிரியராக இருந்தார். எந்தப் பாடமானாலும், அதனைச் சுவை யாகவும், எளிதாகவும், கற்பித்ததுதான் அவருடைய சிறப்பு. உதாரணத்திற்கு, அவர் புவியியல் கற்பிக்கும் போது ஒரு பெரிய உலக வரைபடத்தை மாட்டி, அதில் அந்நேரம் உலகப் போர் எங்கெங்கு நடந்து கொண்டிருக்கிறது என்று சுட்டிக்காட்டி, அவற்றின் சீதோஷ்ண நிலை, அங்கு கிடைக்கக்கூடிய இயற்கைப்



பொருட்கள் போன்ற விவரங்களைக் கூறுவார்.

இது தவிர அவர் வடிவகணிதமும் கற்பித்தார். இது யஷ்பாலுக்குப் புதிய பாடமானாலும், மிகவும் பிடித்தமாக இருந்தது. கோணங்கள், சமதள வடிவங்கள், வளைகோடுகள் அவனை மந்திரத்தால் கட்டுண்டவனைப் போலாக்கின. எல்லாவற்றுக்கும் மேலாக அவன் மிக விரும்பியது, வடிவ கணிதத்தில் அவன் கண்டறிந்த பகுத்தறிவாகும். எந்தக் கேள்விக்கும் காரணத்துடன் விடைதேடும் அந்தச் சிறுவனுக்கு இப்பாடம் மிகச் சுவையாக இருந்ததில் அதிசயமில்லை.

தேற்றங்களையும், விதிகளையும் படித்து, அப்பாடத்தை சிறப்பாகக் கற்பதில் அவன் நாட்டம் காட்டினான். வடிவ கணிதத்தில் அவனுக்கு மிகவும் பிடித்த விஷயம் அது பகுத்தறிவியலை ஆதாரமாகக் கொண்டது என்பதுதான். ஒரு மெய்க்கோளை உண்மையெனக் கொண்டால், அதனின்று படிப் படியாக பகுத்தறிந்து விடையைக் கண்டுபிடித்துவிட முடியும். இது யஷ்பாலுக்கு ஜிக்-ஸா (திருகு வெட்டு) புதிரைப்போல் சுவாரசியமாக இருந்தது.

திரு. பவார், தான் மிக விரும்பும் மாணவன் யஷ்பாலிடம் கொண்ட விசேஷ அக்கறையால் இப்பாடத்தை இன்னும் சுவாரசியமாகச் செய்தார். அவன் கேட்கும் அறிவுபூர்வமான கேள்விகளை அவர் மிகவும் ரசித்தார். தேவையான பொது குறிப்புகளை மட்டும் தந்து, அவனைத் தானே விடைகளைத் தேடத் தூண்டினார். ஆசிரியர், மாணவர்கள் இருவரும் இம்முறையைப் பெரிதும் விரும்பினர், ஏனென்றால் யஷ்பாலுக்கும் எல்லாக் கேள்விகளுக்கும் எளிதாக விடை கிடைத்துவிடுவதில் விருப்பம் கிடையாது. பல மணி நேரப் போராட்டத்திற்குப் பிறகும் விடை கிடைக்கா விட்டால் மட்டுமே அவன் ஆசிரியரை அணுகுவான். ஆனால் அவனுடைய நேரம் வீணாகாது, ஏனென்றால் தானே முயற்சி செய்தால் அவனுக்கு ஒரு கணக்கைப் பல கோணங்களிலிருந்தும் அணுகிப் பார்க்கும் வாய்ப்புக் கிடைக்கும்.

இவையெல்லாம் சுலபமாக இருந்ததாக எக்காரணம் கொண்டும் நாம் நினைக்கக் கூடாது.

எவ்வளவு கஷ்டப்பட்டாலும் யஷ்பால் தானே தனக்கு மேலும்மேலும் கடினமான இலக்குகள் வைத்துக் கொண்டு, கடினமான உழைப்பாலும், அயரா முயற்சி யாலும் அவற்றை அடைந்து தன் ஆசிரியர்களை மகிழ்வித்தான். படிப்பில் இவ்வளவு உழைத்தாலும் யஷ்பாலும் அவன் சகோதரர்களும் விளையாட்டிலும் மற்ற கேளிக்கைகளிலும் பின்தங்கியதில்லை. தம் சைக்கிள்களை ஓட்டிக்கொண்டும் மற்ற சிறுவர் களுடன் விளையாடிக்கொண்டும் அவர்கள் பொழுதை இன்பமாகக் கழித்தனர். யஷ்பாலுக்குக் கலைரசனையும் உண்டு. அவன் ஹார்மோனியம் வாசிக்கவும், சித்திரம் வரையவும் கற்றுக்கொண்டான். சுவாமி தயானந்தர், கவிஞர் தாகூர் போன்ற புகழ் வாய்ந்த மனிதர்களின் சித்திரங்களைப் பென்சிலால் வரைந்தான். அவன் தந்தையின் நண்பர் ஒருவர் வரைவாளராக இருந்தார். யஷ்பாலுக்கு அவர் அலுவலகத்திற்குச் செல்வதென்றால் மிகவும் பிடிக்கும். ஏனென்றால் அவரிடம் அளவு முறை பற்றி அறிந்து கொள்ள அவனுக்கு வாய்ப்புக் கிடைத்தது.

ஜபல்பூரில் அனைவருக்கும் உலகப்போர் பற்றிய செய்திகளை அறிவதில் ஆர்வமிருந்தது. அதிலும் ஐரோப்பிய வானொலி நிலையங்களிலிருந்து ஒலி பரப்பான செய்திகள் உண்மையாகவும், பரபரப்பு மிகுந்தவையாகவும் இருந்ததால் அவற்றைக் கேட்க எல்லோரும் விரும்பினர். யஷ்பாலின் தந்தை ஒரு பழைய வானொலிப்பெட்டி வைத்திருந்தார், ஆனால் அவர்கள் வீட்டில் அதை இயக்கத் தேவையான மின்சாரம் இருக்கவில்லை. யஷ்பால்தான் இதற்கு ஒருவழி கண்டுபிடித்தான்.

தன் வீட்டுக்காரரின் மகளும், அவர்களுடைய விளையாட்டுத் தோழியுமான ஜக்கோவை அவன் அணுகினான். "ஜக்கோ, உன் வீட்டில் மின்சாரம் இருக்கிறதல்லவா? உன் வீட்டிலிருந்து என் வீடுவரை மின்சாரக் கம்பியை இணைத்தால், நீ தினமும் மாலையில் ஒருமணி நேரம் அதன் வழியே மின்சாரம் தருவாயா?" என்று அவளைக் கேட்டான்.

அவன் வேண்டுகோளைக் கேட்ட ஜக்கோ, சிறிது யோசனைக்குப் பிறகு அதற்கு ஒப்புக்கொண்டாள். அவளுடைய குழு யஷ்பாலின் குழுவிடம் 'பிட்டு' ஆட்டத்தில் தோற்கும் நாட்களைத் தவிர மற்ற



நாட்களில் இந்த ஏற்பாடு சிறப்பாக வேலை செய்தது! தோற்றால் அவள் நேராகத் தன் வீட்டிற்குப் போய் முதல் காரியமாக யஷ்பாலின் வீட்டிற்குச் செல்லும் மின்சார இணைப்பைத் துண்டித்துவிடுவாள்! அதன் பிறகு அவளைச் சமாதானப்படுத்தி, கெஞ்சி இணைப்பைத் திரும்பப் பெறுவதற்கு அவன் பாடு திண்டாட்டமாகி விடும்!

கருவிகளும், சாதனங்களும் எவ்வாறு ஏன் வேலை செய்கின்றன என்பதைப் பற்றி ஆர்வம் கொண்டிருந்த யஷ்பால், பள்ளியின் பரிசோதனைக் கூடங்களில் பரிசோதனைகளைத் கவனிப்பதையும், ரசாயனத்திலும், இயற்பியலிலும் தானே பரிசோதனைகள் செய்வதையும் பெரிதும் விரும்பினான்.

"இன்று நாம் செம்பின் வெப்ப எண்ணைக் கண்டுபிடிக்கப் போகிறோம்," என்று ஒருநாள் வகுப்பில் திரு. பவார் அறிவித்தார். யஷ்பால் உடனே உஷாராக கவனிக்கலானான். அப்பரிசோதனை ஒரு பொருளின் வெப்பத்தை, ஒரு அலகு உயர்த்த எவ்வளவு வெப்பம் தேவைப்படுகிறது என்பதை அளப்பதற்காகச் செய்யப் படுவதாகும்.

மாணவர்களுக்கு ஆளுக்கு ஒரு துண்டு செப்புக் கம்பி கொடுக்கப்பட்டு, பரிசோதனையை எப்படி நடத்த வேண்டுமென்று கற்பிக்கப்பட்டது. யஷ்பாலுக்கு இப்பரிசோதனை ஒரு புதிய உலகத்தையே கண்முன் கொண்டு நிறுத்தியது. வெப்பத்தின் பண்புகளைப் பரிசோதனைகள் மூலம் அளவிட முடியும் என்பது அவனுக்கு ஒரு அற்புதமான உண்மையாகத் தோன்றியது. வெப்பத்தை அளவிட முடியுமென்றால் மற்ற பொருள்களின் பண்புகளையும் அளவிட முடியவேண்டும் என்பது அவன் கணிப்பு. உதாரணத்திற்கு, அச்செப்புக் கம்பியைத் திரும்ப அதன் பழைய திட்டநிலைக்குக் கொண்டு வருவதைப் போல், நிலநடுக்கங்களின் வலு அளவு, விசை அளவு, பூமியிலிருந்து நட்சத்திரங்கள் வரையிலான தொலைவு, போன்ற பலவற்றையும் அளக்க முடியும் என்று அவன் நினைத்து மகிழ்ந்தான்.

அந்நாள் யஷ்பாலின் வாழ்க்கையில் மறக்க முடியாத நாளாகும். ஒரு சிறிய பரிசோதனை அவனுக்கு பிரபஞ்சத்தின் ரகசியங்களைப் புரிந்து

கொள்ள முடியுமென்ற நம்பிக்கையை ஏற்படுத்தி விட்டது. தன் தாத்தா வீட்டிலிருந்த பெரிய இயந்திரத்தைப் போலவே, பிரபஞ்சமும் ஒரு பெரிய இயந்திரம் போலவும், அதன் இயக்கத்தைப் புரிந்து கொள்வதற்கு விஞ்ஞான பரிசோதனைகள் போதும் என்பதும் அவன் அன்று அறிந்துகொண்ட உண்மைகள். ஆனால் அவன் இவற்றையெல்லாம் செய்ய வேண்டுமானால், முதலில் அதற்குத் தேவை யான கருவி வேண்டும்—அதாவது, இயற்பியலும் அதன் விதிகளையும் பற்றி நன்கு அறிவது மிக முக்கியம் என உணர்ந்தான். இவற்றைக் கற்று, பிரபஞ்சத்தின் இயக்கங்களைப் பற்றி சிறிதளவாவது புரிந்து கொள்ள முடியுமானால் அவன் தன் அறிவின் உதவியால் மக்களின் நல்வாழ்வுக்கு வழிவகுக்க முடியுமென்று உறுதியாக நம்பினான். அவ்வாறு செய்ய முடிந்தால் எவ்வளவு அற்புதமாக இருக்கும்!

அதன்பிறகு யஷ்பால் அப்பள்ளியிலும், திரு. பவாரின் மாணவர்கள் மத்தியிலும் மிகச் சிறந்த மாணவனாகத் திகழ்ந்தான். இயற்பியலில் அவனுக்கு இருந்த ஆர்வம் சிறிதளவும் குன்றவில்லை; திரு. பவாரும் அவனை ஊக்குவித்த வண்ணம் இருந்தார்.

அனைவரும் எதிர்பார்த்தவாறே யஷ்பால் தலைசிறந்த விஞ்ஞானியானார். வான் இயற்பியலில் அவருக்கிருந்த அறிவாற்றலைக் கொண்டு பின்னாளில் செயற்கைகோள் மூலமாகப் பாடங்கள் எடுக்கும் முறையை நம் நாட்டிற்கு அறிமுகப்படுத்தினார். இம்முறையினால் நாட்டில் எந்த மூலையிலிருக்கும் மாணவர்களும், வேறெங்கோ இருக்கும் ஆசிரியர்கள் நடத்தும் பாடங்களைக்கேட்டு, பரிசோதனைகளில் பங்கு கொள்ள முடியும். செயற்கைக்கோள் கல்வி முறை, விஞ்ஞானத்திற்கு அவருடைய பல பங்குகளில் மிக முக்கியமான ஒன்றாகும். இதற்கு முக்கியக் காரணம் அவருடைய இயற்கையான ஆர்வமும், தன் அறிவாற்றலை வளர்த்துக்கொள்ள அவர் எடுத்துக் கொண்ட முயற்சிகளும்தான்.



# செயற்கைக்கோள் வகுப்பறைகள்

நவம்பர் 26, 1926ஆம் ஆண்டு பிறந்த பேராசிரியர் யஷ்பால், இந்நூற்றாண்டின் மிகச் சிறந்த இயற் பியலார்களில் ஒருவர். அவர் மஸாசூஸெட்ஸ் இன்ஸ்டிட்யூட் ஆஃப் டெக்னாலஜியிலிருந்து இயற்பியலில் முனைவர் பட்டம் பெற்றார். இதனைத் தொடர்ந்து விண்கதிர்கள் ஆற்றல், இயற்பியல், வான் இயற்பியல், விண்தொழில்நுட்பம், தொலைத்தொடர்பு மற்றும் கல்வி முன்னேற்றத் துறைகளில் அரும்பணி யாற்றி இருக்கிறார்.

பேராசிரியர் யஷ்பால் இந்தியாவின் செயற்கைக் கோள் கல்விமுறையை நிறுவுவதில் ஒரு முக்கியமான அங்கம் வகித்திருக்கிறார். அவருடைய முயற்சியால் இன்று நாட்டின் பல மூலைகளிலும் வசிக்கும் கோடிக் கணக்கான மக்கள், தொலைக்காட்சி வழியே சிறப்புக் கல்வி கற்கும் வாய்ப்பைப் பெற்றிருக்கிறார்கள். தன் அயரா முயற்சியால் நவீன தகவல் தொடர்பு தொழில் நுட்பத்தை சராசரி மக்களுக்குப் பயன்படச் செய்து, நாட்டின் முன்னேற்றத்திற்காகத் தன் வாழ்க்கையையே அர்ப்பணித்த மிகச் சில விஞ்ஞானிகளுள் அவரும் ஒருவர். அவருடைய கணிப்பில் விஞ்ஞானம் வெறும் மெய்மை மட்டுமல்லாமல், மனித வாழ்க்கையில் கருணை, மற்றும் நன்னெறி போன்ற சிறந்த மதிப்பு களை மக்களுக்கு அறிவுறுத்த வல்லதாகும்.

அவர் பல்கலைக்கழக மானியக் குழுவின் (யுனிவர்சிட்டி கிராண்ட்ஸ் கமிஷன்) தலைமைப் பதவி, விஞ்ஞானம் மற்றும் தொழில் நுட்பத் துறையின் செயலர், பிற விண்வெளி குறித்த ஐக்கிய நாடுகளின் மாநாட்டின் பொதுச் செயலர் மற்றும் தேசிய வரைபட நிலையத்தின் தலைமைப் பதவி போன்ற பல பெருமைக்குரிய பதவிகள் வகித்திருக்கிறார். அவர்

தற்போது தேசிய ஆராய்ச்சிப் பேராசிரியராக நியமிக்கப்பட்டு, அப்பதவியைத் திறம்பட வகித்து வருகிறார்.

தேசிய மற்றும் உலக அளவில் அவர் பெற்றுள்ள விருதுகளில் குறிப்பிடத்தக்கவை, பத்ம விபூஷன் (1976) மார்கோனி இண்டர்நேஷனல் ஃபெலோஷிப் அவார்ட் (1980), அசோசியேஷன் ஆஃப் ஸ்பேஸ் எக்ஸ்ப்ளோரர்ஸ் வழங்கும் ஐந்தாம் வருடாந்திர விருது (1989), தொலைக்கல்வியில் சிறப்புத் தன்மைக்காக முதல் முறையாக வழங்கப்பட்ட லார்ட் பெர்ரி விருது .(1992), தொலைத் தொடர்பு மற்றும் விண்தொழில் நுட்பத்திற்காக வழங்கப்படும் ஆர்த்தர் சி. கிளார்க் விருது (1994) ஆகியவையாகும்.

பேராசிரியர் யஷ்பால் தொலைக்காட்சியில் பிரபலமான நிகழ்ச்சியான ‘டர்னிங் பாயிண்ட்’ அறிவுரையாளராக இருக்கிறார்.



# உயில்கொடை

குவாலியரில் இருந்த அந்த பெரிய பரம்பரை வீட்டில் இசைக்காக ஒதுக்கப்பட்டிருந்த அறையில் அம்ஜத் தன் தந்தையின் எதிரில் அமர்ந்திருந்தான். எட்டுவயதுகூட நிறையாத அம்ஜத் தன் ஸரோதில் ஒரு குறிப்பிட்ட இசைக் குறியீட்டைச் சரியாக வாசிக்க முயன்று கொண்டிருந்தான்.

"நீ வாசித்தது தப்பு. அதையே மீண்டும் வாசி!" என்றார் அவன் தந்தை. அவர் முகம் கடுமையாக இருந்தது. வியர்வையில் பிசுபிசுத்த விரல்களால் அம்ஜத் மீண்டும் முயற்சி செய்தான். தந்தையின் புருவங்கள் உயர்வதைக் கண்டதும் அவனுக்கு தான் அதே தவறைச் செய்தது புரிந்தது.

"கவனத்தை அங்கும் இங்கும் சிதற விடாமல் ஒழுங்காக வாசி" என்று அதட்டினார் அவர். அடக்கத்துடன் தலையாட்டிய அம்ஜத் இன்னொரு முறை வாசித்தான். திரும்பவும் தவறான ஸ்வரம் ஒன்று எட்டிப்பார்த்தது. இம்முறை அவன் தந்தை ஏதும் பேசாமல் எழுந்து அறையை விட்டு வெளியேறினார்.

தன் தந்தைக்குத் தன்னால் கோபமும், வருத்தமும் ஏற்பட்டதற்காக அம்ஜத் வருந்தினான். அப்போதே, எப்படியாவது தவறேதுமில்லாமல் அதை வாசித்தே

தீருவது என்று முடிவு செய்தான். அவன் கண்களில் உறுதி பளிச்சிட்டது. கைவிரல்களிலும், தோள்களிலும் ஏற்பட்ட வலியைப் பொருட்படுத்தாமல் முழுக் கவனத்துடன் வாசிக்கலானான். மெல்ல, மெல்ல ஸரோதிலிருந்து இசை வெள்ளமாய், தவறின் சுவடே இல்லாமல், பொழியலாயிற்று. அம்ஜத்திற்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. ஏனென்றால், அவன் சரியாக வாசித்தது மட்டுமல்ல, அவன் தந்தை புன்முறுவலுடன் அறைக்குள் திரும்பி வந்தார் என்பதாலும்தான்.

உஸ்தாத் ஹஃபீஸ் அலிகான், அம்ஜத்தின் தந்தை மட்டுமல்ல, அவர் இசை ஆசானும்கூட. இது அம்ஜத்துக்கு சில சமயம் மிகவும் கடினமானதாக இருந்தது. ஏனென்றால் அவர் உட்கார்ந்து அவனுக்கு முறையாக இசைப் பயிற்சி அளிக்க மாட்டார். அவர் வீட்டிலேயே குருகுல வாசம் செய்யும் மற்ற மாணவர்களுக்குப் பாடம் நடத்தும்போதும், அவர் ஸரோத் வாசிக்கும்போதும், பாடும்போதும் கேட்டு அங்கொன்றும், இங்கொன்றுமாய் கற்றதுதான் அம்ஜத்தின் இசைப்பயிற்சி.

மாலை வேளைகளில் புகழ்பெற்ற இசைக் கலைஞர்களும், பாடகர்களும் அவர்கள் வீட்டில், இசையைப் பற்றி விவாதிப்பதற்காகக் கூடுவது வழக்கம். சில நாட்களில் அவன் தந்தை விருந்தினர் களை மகிழ்விப்பதற்காக அவனைப் பாடவோ, வாசிக்கவோ அழைப்பார். அப்பொழுது அம்ஜத் தன் இனிய குரலில் பாடியும், ஸரோத் வாசித்தும் அவர்களை மகிழ்விப்பான். மற்ற நேரங்களில் அவர்கள் இசைக்கேற்ப தபலா வாசிப்பான்.

அம்ஜத்துக்கு இசையில் ஈடுபாடு இருந்த போதிலும், அக்கம் பக்கத்துச் சிறுவர்களின் விளை யாட்டுக்களில் பங்கு கொள்ள வாய்ப்பில்லாமல் இருந்தான். இசைப் பயிற்சி மற்றும் வீட்டுப்பாடங் களை முடித்த பிறகு அவனுக்கு வேறெந்த பொழுது போக்கிற்கும் நேரமே இருந்ததில்லை. இவை தவிர, விளையாடினால் ஏதாவது காயம்பட்டு விடுமோ என அவன் அஞ்சினான். ‘ஒருவேளை விளையாடும்போது பந்து விரல்களில் பட்டு விட்டால் என்ன செய்வது?’ என்று நினைத்து அவன் நடுங்கினான். விரல்களில் அடிபட்டுவிட்டால் எப்படி ஸரோத் வாசிப்பது?



இதனால் அவன் மற்ற சிறுவர்களுடன் விளையாடாமல் ஒதுங்கியே இருந்தான்.

அவன் பல நேரங்களில் தனிமையாக உணர்ந்தான். மற்ற சிறுவர்கள் அவனிட மிருந்து மாறுபட்ட பொழுதுபோக்குகளும், விருப்பங்களும் கொண்டவர்கள். இதனால் தன் வயதையொத்தவர்களுடன் அவனால் இசையைப் பற்றி விவாதிக்கவோ, இசை யமைப்பைப் பற்றி ஏதாவது கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்ளவோ முடியாமலிருந்தது. அவனுடைய நெருங்கிய தோழனான கருணேஷ்கூட உடற்பயிற்சி செய்வதையும் ஓடியாடி விளையாடுவதையும்தான் விரும்பினான். தவிர அவன் தன்னை அப்பகுதியின் சிறுவர்களின் தலைவனாகக் கருதினான். அவன்தான் சிலசமயம் அம்ஜத்தை வற்புறுத்தி கால்பந்து விளையாட அழைத்துச் செல்வான்.

அப்படித்தான் ஒருமுறை அம்ஜத் கால்பந்து விளையாடிக் கொண்டிருந்தான். அவனுடைய அணி கோல்போடுகின்ற நிலையில் இருந்தது. அவ்வாறு



கோல் போட்டிருந்தால் அவர்கள் அணி வெற்றி பெற்றிருக்கும். அம்ஜத் தன் அணி ஆட்டக்காரன் ஒருவனிடம் பந்தை உதைக்கவும், எதிர்அணியின் வலிமையான ஆட்டக்காரன் ஒருவன் அவன் எதிரில் வரவும் சரியாக இருந்தது. இருவரும் மோதிக்கொள்ள, அம்ஜத் கீழே விழுந்தான்.

'ஃபௌல்! ஃபௌல்! என்ற கூச்சலுக்கிடையே எதிர் அணியினர் அம்ஜத்தைச் சூழ்ந்து கொண்டனர். விளையாட்டை மறந்து அனைவரும் அடிதடியில் இறங்கினர். இரு அணியினரும் ஒருவரையொருவர் அடித்துக் கொள்ளலாயினர்.

அம்ஜத் மட்டும் கையை உயர்த்தவே இல்லை. ஆடாமல் நின்றுகொண்டிருந்த அவனை வலிமை





வாய்ந்த இரு பையன்கள் அடித்துக் கொண்டிருந்தார்கள். அதைக்கண்ட கருணேஷ் அவனுடைய உதவிக்கு ஓடிவந்தான். ஆனால் அதற்குள் அம்ஜத்தின் உதடு கிழிந்து, ஒரு கண் வீங்கிவிட்டிருந்தது. கருணேஷுக்கு ஒரே கோபம்!

"அவர்கள் அடிக்கும்போது ஏன் பொறுத்துக் கொண்டிருந்தாய்? அவர்கள் உன்னைவிட அதிக வலிமையுள்ளவர்கள் என்றுகூட தெரியவில்லை. நீ சுலபமாக அவர்களைத் திருப்பி அடித்திருக்கலாம் அல்லது சண்டைபோடுவதுபோல் நடிக்கவாவது செய்திருக்கலாம் இல்லையா? நீ சரியான பயந்தாங்கொள்ளி!" வார்த்தைகளைக் கனலாக அள்ளி வீசினான் அவன்.

அம்ஜத் சிறிது நேரம் பதிலேதும் கூறவில்லை. அடி வாங்கிய அவன் உடலெல்லாம் வலித்தது. காரணம் சொல்லத் தெரியாமல் கோபமும் வந்தது. எல்லாவற்றுக்கும் மேல் கருணேஷ் அவனைப் பயந்தாங்கொள்ளி என்று கூறியது அவனுக்கு வேதனையளித்தது.

சிறிது நேரம் கழித்து மெதுவாக, "நான் அவர்களை ஏன் அடிக்கவில்லையென்று உனக்கு நன்றாகவே தெரியும்" என்றான். "நான் அவ்வாறு செய்திருந்தால் அப்பாவுக்கு அது பற்றி உடனே தகவல் கிடைத்திருக்கும். தன் மகன்களில் ஒருவன் ரௌடியைப் போல் அடிதடியில் இறங்கியது அவரை வருத்தத்திற்கு உள்ளாக்கியிருக்கும். என்னால் என் குடும்பத்திற்கு கெட்ட பெயர் வருவதையும், அப்பாவை வருத்துவதையும் கனவிலும் நினைத்துப் பார்க்க முடியாதென்பது உனக்குத் தெரியாதா?" தன் வாயிலிருந்து வழிந்த ரத்தத்தைத் துடைத்தவாறே கூறினான் அம்ஜத்.

கருணேஷ் பதில் சொல்லவில்லை. தான் அவசரப்பட்டு அம்ஜத்தைக் குற்றம் சாட்டியதற்காக வருந்தினான். தன் நண்பனின் குடும்பத்தினர் அவர்களின் பரம்பரை வழிவந்த உயர்வான இசைத் துறையில் அவனை முன்னுக்குக் கொண்டுவர முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள் என்பது அவனுக்குத் தெரியும். "நான் ஏதேதோ பேசிவிட்டேன். என்னை மன்னித்து விடு," சிறிது நேர மௌனத்திற்குப் பின்

தன் நண்பனின் தோளைத் தட்டிக் கூறினான் கருணேஷ்.

இருவரும் வீட்டை அடைந்தபோது அவர்களைப் பார்த்து அம்ஜத்தின் தந்தை, "சண்டை போட்டுவிட்டு வந்தாயா? விளையாட வரும் முரடர்களிடமிருந்து விலகியிருக்கச் சொல்லி உன்னை எத்தனைமுறை கூறியிருக்கிறேன்?" என்று கோபித்துக் கொண்டார்.

கருணேஷ்தான் அம்ஜத்திற்காகப் பதில் கூறினான். "அம்ஜத் கையை உயர்த்தவேயில்லை. வேறொரு இடத்திலிருந்து வந்திருந்த சில பையன்கள் அம்ஜத்தை காரணமே இல்லாமல் அடித்துவிட்டார்கள்," என்றான் அவன். அம்ஜத்தின் தந்தை அவன் பேச்சை நம்புவதாக இல்லை. கடைசியில் அம்ஜத், "அப்பா, இனி நான் அந்தப் பையன்களோடு விளையாடப் போகவே மாட்டேன்" என்று மன்றாடிய பிறகுதான் அவர் கோபம் தணிந்தது.

அதன்பிறகு அவன் தாய் காயங்களைக் கழுவி, மருந்து தடவினார். அவர் கை மிருதுவாகவும், ஆறுதல் அளிப்பதாகவும் இருந்தது. "இனி போய் இசைப்பயிற்சி செய்!"என்றவாறு அவன் கையில் இனிப்பு ஒன்றைக் கொடுத்தார். குடும்பத்தில் எல்லாரையும் விட இளையவனாக இருப்பதில் நன்மைகளும் இருந்தன போலும்! அம்ஜத் மகிழ்ச்சியுடன் இசைஅறைக்குச் சென்றான்.

அங்கு சுவரில் மாட்டப்பட்டிருந்த படங்களில் இருந்த அவன் மூதாதையர்கள் அவனை வாஞ்சையுடன் பார்த்துக் கொண்டிருந்ததைப்போல் உணர்ந்தான். அவன் அந்த அறையில்தான் பிறந்தான் என்று அவன்தாய் அவனிடம் கூறியிருந்தார். "நீ இசையில், இசைக்காகப் பிறந்தவன்," என்று அடிக்கடி கூறுவார் அவர். அறையைச் சுற்றி பார்வையைச் சுழலவிட்ட அம்ஜத்தின் கண்களில் மூன்று வயதுச் சிறுவனாக இருந்தபொழுது வாசித்த குட்டி ஸரோத் பட்டது. அது அச்சமயம் அவனுடைய சிறிய கைகளுக்காகவே பிரத்தியேகமாகச் செய்யப்பட்டது.

அதை இப்பொழுது கையில் ஏந்திய அம்ஜத்துக்குத் தன் பாரம்பரியத்தின் பாரமும் பொறுப்பும் தன் சிறிய தோள்களை அழுத்துவது போலிருந்தது. அவனுடைய கூடப்பிறந்த சகோதரர்களும், ஒன்று



விட்ட சகோதரர்களும் இசையில் தேர்ச்சி பெற்றிருந்தாலும் அவன் தந்தை அவன் மேல்தான் நம்பிக்கை வைத்திருந்தார். அச்சிறுவனுக்குத் தானும் விரைவில் தன் தந்தைக்குத் துணை யாகச் ஸரோத் வாசித்துக் குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டுமென்ற உண்மை தெரியும். “என் அப்பா என்னைப் பற்றி பெருமைப்படும்படி இருப்பேன். அவர் நம்பிக்கையைக் குலைக்க மாட்டேன்,” என்று தன் குட்டி ஸரோதைக் கையில் வைத்துக்கொண்டு உறுதி பூண்டான் அம்ஜத்.

பின் நீண்ட பெருமூச்சோடு அதைக் கீழே வைத்துவிட்டுத் தான் வழக்கமாக வாசிக்கும் ஸரோதை எடுத்தான். சிறிது நேரத்தில் இசைப் பயிற்சியில் மூழ்கிய அம்ஜத் ஒரு புதிய ராகத்தை வாசிக்க முயன்றான். வெகுநேரம் முயன்ற பிறகும் அவனால் ஒரு குறிப்பிட்ட ஸ்வரத்தைச் சரியாக வாசிக்க முடியவில்லை. இறுதியில் பொறுமை இழந்தவனாய், “என்னால் இந்த இசைக்கருவியைக் கொண்டு நினைத்ததை வாசிக்க முடியவில்லை!” என்று கோபமாக உரக்கக் கூறினான்.

அவனுடைய குரலைக்கேட்ட அவன் தந்தை, அறையினுள் வந்து அவன் பக்கத்தில் அமர்ந்தார்.

“அதை என்னிடம் கொடு, நான் உனக்கு இசைத்துக் காட்டுகிறேன். ஸரோதை அன்புடனும், பொறுமையுடனும் கையாண்டால் அது நீ கேட்பதை எல்லாம் செய்யும், மகனே!” என்று மென்மையாகக் கூறினார். அதன்பின் அவர் விரல்கள் ஸரோதை இதமாக வருட, இசைமழை பொழியலாயிற்று. இந்த அதிசயத்தை அம்ஜத் வியந்து பார்த்துக் கொண்டிருந்தான். “பார்த்தாயா? உன்னால் ஸரோதை என்ன வேண்டுமானாலும் செய்ய வைக்க முடியும்—பாட, சிரிக்க, அழ—எல்லாமே உன் ஸரோத் உனக்காகச் செய்யும்,” என்றார் அவர். அது அம்ஜத்துக்கு ஒரு மறக்க முடியாத கணமாகும். அவன் கண்களில் நீர் துளித்தது.

இம்மாதிரி மென்மையான தருணங்களில் அம்ஜத்துக்குத் தன் தந்தையின் மேல் அன்பு பெருக்கெடுக்கும். ஆனால் மற்ற நேரங்களில் அவர்பால் அவன் உணர்ச்சிகள் விவரிக்க இயலாத கலவையாக

இருந்தன. அவரிடம் அவனுக்கு பயம், மரியாதை, அன்பு எல்லாம் ஒருசேரக் கலந்திருந்தன. அவன் தந்தை அந்நாட்களில் வாழ்ந்த மாபெரும் கலைஞர் களில் ஒருவர். அவர் மற்ற பலரையும் விட சிறந்த கலைஞராகக் கருதப்பட்டார். அம்ஜத்துக்கு அவர் முதலில் தன் தந்தையா இல்லை ஆசானா என்ற சந்தேகம் அடிக்கடி எழும். தவிர, அவன் தந்தை அவன் நண்பர்களின் தந்தைகளைவிட வயதில் மூத்தவர்; கிட்டத்தட்ட ஒரு தாத்தாவின் வயதை யொத்தவர். எது எப்படி இருந்தாலும் அம்ஜத்துக்கு அவரிடம் அன்பும், மரியாதையும் நிறையவே இருந்தன.

ஒருநாள் பைரவி ராகத்தில் ஒரு பாட்டை வாசித்துக் கொண்டிருந்த அம்ஜத் அதிலேயே ஒன்றிப் போய்விட்டான். அதனால் நடுவில் அறைக்குள் அவன் தந்தை வந்ததைக் கவனிக்கவில்லை. பாட்டை வாசித்து முடித்ததும் அவர், "வாஹ் பேட்டே ஸாஹப்!" (மிக்க நன்று, மகனே!) என்று மகிழ்ச்சியுடன் பாராட்டினார். அம்ஜத் மகிழ்ச்சியில் திக்குமுக்காடிப் போனான். தந்தை அவன் செய்கையால் மிகவும் மனமகிழ்ந்திருக்கும்போதுதான் அவனை அவ்வாறு அழைப்பது வழக்கம். அவரிடம் பாராட்டுப் பெறுவது அவனுக்கு ஆசிபெறுவதற்குச் சமமென்றால் அது மிகையாகாது. ஆனால் அன்று அதையும்விட முக்கியமான நாள். ஏனென்றால் அவர் அரிதாகச் செய்யும் ஒரு செயலைச் செய்தார். அவனை ஆரத் தழுவி உச்சி முகர்ந்தார்.

"உன்னுடைய மிகச் சிறந்த இசைக்கு ஒரு பரிசு தரவேண்டுமே," என்றவாறே தன் சட்டைப் பையிலிருந்து சில்லறைகளை எடுத்து அம்ஜத்திடம் புன்முறுவலுடன் தந்து, "உன் நண்பனுடன் போய் ஏதாவது படம் பார்த்துவிட்டு வா!" என்றார்.

"நன்றி அப்பா!" என்று அம்ஜத் சந்தோஷமாகச் சொன்னவன் நேரே கருணேஷ் வீட்டிற்குச் சென்றான்.

"நாமிருவரும் 'பைஜு பாவ்ரா' பார்க்கப் போகலாமா?" என்று கருணேஷைக் கேட்கவும் அவன் உடனே ஒப்புக் கொண்டான். அவர்கள் இருவரும் வறுத்த பட்டாணிக் கடலையைக் கொறித்தவாறே இனிமையான பாடல்கள் நிறைந்த அந்தப் படத்தை மிகவும் ரசித்துப் பார்த்தனர்.



அவனது பன்னிரண்டாம் வயதில் குவாலியரில் இருந்த அவன் குடும்பம், தில்லிக்கு இடம் பெயர்ந்தது. அங்கு புகழ்பெற்ற கலைஞர்கள் வாழும் குடியிருப்புப் பகுதியில் வசிக்கலானார்கள். த்ருபத் பாடகர்களான டாகர் சகோதரர்கள், தும்ரி பாடகி ஸித்தேஸ்வரி தேவி, கத்தக் நடனக் கலைஞர் ஷம்பு மஹராஜ் மற்றும் ஸிதார் கலைஞர் வாஹித்கான் முதலானோர் அப்பகுதியில் வசித்து வந்தனர். இசையும், நடனமும் கலந்த, கலைஞர்கள் ஒருவரையொருவர் மதிக்கும் சூழ்நிலையில் அம்ஜத் வளர்ந்தான்.

ஆனால் அவனைச் சேர்த்திருந்த பள்ளியான மாடர்ன் ஸ்கூல், இச்சூழ்நிலையிலிருந்து முற்றிலும் மாறுபட்ட ஒரு உலகமாக அவனுக்குத் தோன்றியது. குவாலியர் போன்ற சிறிய ஊரில் வளர்ந்த அம்ஜத் துக்கு இந்த உலகம் புதியதாகவும், புதிரானதாகவும் இருந்தது.

"அம்மா, இங்குள்ள பையன்கள் நம்மைப்போல் பேசுவதில்லை!" என்று அம்ஜத் தன் தாயிடம் முறையிட்டான். பண்புடன் மற்றவரை அழைப்பதும், பேசுவதும் பழகியிருந்த அம்ஜத்துக்கு தில்லி போன்ற பெரிய ஊரின் கொச்சையான மொழி அவனுக்கு அதிர்ச்சியளித்தது. முதலில் ஒதுங்கியிருந்த அவன் விரைவில் அவன் கூச்ச சுபாவத்தை மறந்து அனைவருடனும் பழகலானான். இதற்கு பெருமளவில் உதவியது அவன் ஸரோத் தான்.

அவன் பள்ளி நிகழ்ச்சிகளில் ஸரோத் வாசித்த போது தான் முதன்முதலாக மற்ற மாணவர்களின் கவனத்தை ஈர்த்தான்.

"இது என்ன இசைக்கருவி? நாங்கள் இதை இதுவரை பார்த்ததே இல்லை," நிகழ்ச்சி முடிந்து மேடைக்குப் பின்னால் இருந்த அம்ஜத்திடம் அவர்கள் கேட்டனர்.

இசையைப் பற்றி பேசுவதற்கு அம்ஜத்துக்கு மறு அழைப்பா தேவை? தன் கூச்சத்தையெல்லாம் விட்டொழித்துவிட்டு அவன் ஸரோதைப் பற்றி பெருமையுடன் பேசத் துவங்கினான். "இவ்விசைக் கருவியின் பெயர் ஸரோத். இது என்னுடைய மூதாதையர்களால் கண்டுபிடிக்கப்பட்டது. இது

நாட்டுப்புற இசையில் வாசிக்கப்படும் 'ரபாப்' என்னும் இசைக் கருவியிலிருந்து உருவாக்கப்பட்டது. ஆப்கானிஸ்தானிலிருந்து வந்த எங்கள் மூதாதையர் ஒருவர்தான் ரபாபை இந்தியாவிற்குக் கொண்டு வந்தார். ரபாபில் இசை தொடர்ச்சியாக வராமல், விட்டுவிட்டு வருமாதலால், அதை இந்துஸ்தானி இசை வாசிப்பதற்கு ஏற்றதாக மாற்ற வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இந்துஸ்தானி இசையில் ஆர்வமுடைய அவருடைய மகன் குலாம் பந்தகிகான், ரபாபின் அமைப்பை இப்போதைய ஸரோதின் வடிவத்திற்கு மாற்றியமைத்தார். அதன் பிறகும் காலப்போக்கில் இக்கருவி பல மாற்றங்களுக்கு உள்ளாகி இன்று இந்த வடிவத்தில் இருக்கிறது!" கிட்டத்தட்ட மூச்சுவிடாமல் பேசிய அம்ஜத் தன் உரையை முடித்தான்.

அவன் கூறிய ஸரோதின் கதை அவனைப் பள்ளியில் மற்ற மாணவர்களிடையே பிரபலமாக்கியது. ஆனால் சில மாணவர்கள் அவனுக்கு அளவுக்கு அதிகமாக முக்கியத்துவம் கிடைப்பதாக நினைத்தார்கள். அதனால் அவனை மட்டம் தட்டும் நோக்கத்துடன் அவனிடம் ஒருநாள் வந்தனர்.

"உன்னால் உன் ஸரோதில் இந்துஸ்தானி ராகங்களை மட்டுமே வாசிக்க முடியும். மேலை நாடுகளின் இசை மற்றும் சினிமா இசையை உன்னால் கண்டிப்பாக வாசிக்க முடியாது!" என்று ஒருவன் அவனிடம் சவால்விட்டான். இது அம்ஜத்தை அவமானப்படுத்தி விடும் என்று நினைத்தான் அவன்.

அம்ஜத்துக்கு சுருக்கென்று கோபம் வந்தது. "யார் உனக்கு அப்படி சொன்னார்கள்? ஸரோதில் எந்த விதமான இசையையும் வாசிக்க முடியும்! இது மிக அற்புதமானதொரு இசைக்கருவி தெரியுமா!" அவன் சவாலை ஏற்கும் விதமாகக் கூறிய அவன், ஒரு சினிமாப் பாடலை அவர்களுக்கு வாசித்துக் காட்டினான். மாணவர்கள் அனைவருக்கும் வியப்பு கலந்த மகிழ்ச்சி.

இந்நிகழ்ச்சிக்குப் பின் மாணவர்களிடையே அவனைப்பற்றி இருந்த கொஞ்சநஞ்ச தயக்கமும் மறைந்துவிட்டது. அவன் அவர்களுள் ஒருவனாக ஏற்றுக் கொள்ளப்பட்டான். அவர்களிடமிருந்து பல விதத்திலும் மாறுபட்டிருந்தாலும் அவன் அவர்களில் ஒருவனாகி விட்டான்.



ஒருநாள் தலைமையாசிரியர் அவனைத் தன் அலுவலகத்திற்கு அழைத்தார். "பள்ளிகளுக்கிடையே நடக்கவிருக்கும் இசைப் போட்டியில் நீ நம் பள்ளியின் சார்பில் பங்கெடுத்துக் கொள்ள வேண்டுமென்பது என் விருப்பம்," அவர் கட்டளையை ஏற்றுக் கொண்டான் அம்ஜத்.

அன்றிலிருந்து பள்ளியின் சார்பில் பல இசைப் போட்டிகளில் பங்கெடுத்துக் கொண்டு பரிசுகளையும், கேடயங்களையும் வாங்கிக் குவித்தான். பள்ளியின் இசை ஆசிரியர்கள் அவனை அனைத்து விதத்திலும் ஊக்குவித்தனர்.

பள்ளிக்கு வெளியிலும் அவன் தன் தந்தையுடன் இசை நிகழ்ச்சிகளில் வாசித்தான். மேல்நிலைப் பள்ளியில் இருந்தபோது அவனுக்கு முதல் முறையாக வெளிநாடு செல்லும் வாய்ப்புக் கிடைத்தது. பல பாடகர்கள், இசைக்கலைஞர்கள் அடங்கிய குழு ஒன்றில் அவனும் ஒருவனாகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தான். 'ஆசியா ம்யூஸிக் சொஸைட்டி' எனும் அமைப்பு இக்குழுவை அமெரிக்காவில் இசை நிகழ்ச்சிகள் வழங்க ஏற்பாடு செய்திருந்தது.

இது பற்றிக் கேள்விப்பட்ட அம்ஜத்தின் தந்தைக்கு கவலையாகிவிட்டது. "நான் உன்னை அனுப்ப மாட்டேன்!" என்று கூறிவிட்டார் அவர். அந்த மாபெரும் கலைஞருக்கு விமானத்தில் பறப்ப தற்கு பயம்! இதனாலேயே வெளிநாடுகளில் இசை நிகழ்ச்சிகள் நடத்த வந்த பல வாய்ப்புக்களை அவர் ஏற்றுக் கொண்டதில்லை. இப்பொழுது தன் அருமை மகனையும் விமானத்தில் பறக்கும் அபாயத்திலிருந்து காப்பாற்ற விரும்பினார் அவர்!

முதலில் தன்னைப் போகவிடாமல் தன் தந்தை எங்கே தடுத்துவிடுவாரோ என்று அவன் பயந்தான். "அப்பா ஸாஹப்! எனக்கு எதுவும் ஆகாது. இதில் பயப்படுவதற்கு எதுவும் இல்லை. என்னுடன் இன்னும் பலர் வரப்போகிறார்கள். தயவு செய்து அனுமதி தாருங்கள்!" என்று கெஞ்சினான் அவன். அவரை அமைதிப்படுத்தி இணங்க வைப்பதற்கு அவன் தன் திறமையெல்லாம் பயன்படுத்த வேண்டி யிருந்தது. ஒருவழியாக அவனை அனுப்புவதற்கு இணங்கினார். கண்களில் கண்ணீருடன் தன் இளைய

மகனை ஆசிகூறி வழியனுப்பினார் அவர்.

முதல்முறையாக தனியாகச் சென்ற அம்ஜத் சிறப்பாக ஸரோத் வாசித்து சுற்றுப் பயணத்தை வெற்றிகரமாக முடித்துத் திரும்பினான். இந்தியா திரும்பிய பிறகு அவன் தந்தையுடன் முன்போலவே இசை நிகழ்ச்சிகளில் பங்குகொண்டும், தனியாகவும் கச்சேரிகள் செய்தான். உஸ்தாத் ஹஃபீஸ் அலிகான் தான் கேட்கும் திறனை மெல்லமெல்ல இழந்து வந்ததால் தன் கச்சேரிகளைக் குறைத்துக்கொண்டு தன் மகனுக்கு அதிக வாய்ப்புக்கள் தந்து அவனை முன்னணிக்குக் கொண்டுவர முயன்றார்.

அம்ஜத்தின் அமெரிக்கா பயணம் முடிந்து கிட்டத்தட்ட ஒரு வருடம் கழித்து, அவன் தந்தைக்கு தில்லியில் பல சிறப்புப் பிரமுகர்களின் முன் னிலையில் ஒரு நிகழ்ச்சி நடத்த அழைப்பு வந்தது. அம்ஜத் வழக்கம்போல் தன் தந்தையுடன் வாசிப் பதற்கு ஆயத்தம் செய்துகொண்டான். இதுவும் மற்ற கச்சேரிகளைப்போல ஒன்றுதான் என்று அவன் நினைத்திருந்தான்.

கச்சேரி தொடங்குவதற்குச் சற்றுமுன் அவன் தந்தை மேடைக்குச் சென்றார். "இன்று என் மகனை இந்நிகழ்ச்சியின் முக்கிய கலைஞனாக உங்கள் முன் பெருமையுடன் அறிமுகப்படுத்துகிறேன்," என்ற அவர், குழம்பி நின்ற அம்ஜத்தை சைகையால் மேடைக்கு வரும்படி அழைத்தார்.

இத்தகைய அறிவிப்பை அவன் முற்றிலும் எதிர் பார்த்திருக்காததால் ஒரு நிமிடம் கலவரமடைந்தான்! நான் அப்பாவின் இடத்தை எப்படி நிரப்புவேன்? வந்திருக்கும் இசையறிவு மிகுந்த சிறப்பு விருந்தினர்கள், அவருக்குப் பதில் என்னை ஏற்றுக் கொள்வார்களா? என்றெல்லாம் கவலையுடன் சிந்தித்தவாறே அவன் மேடையை நோக்கி நடந்தான்.

அவனுக்குத் தனியாக வாசிப்பதைத் தவிர வேறு வழியில்லை, ஏனென்றால் அவன் தந்தை ஏற்கெனவே அவன் பெயரை அறிவித்துவிட்டிருந்தார். பயமும், பெருமையும் அவன் மனதில் போட்டி போட்டன. தன் இடத்தில் வாசிக்க அவன் தகுதி பெற்றவன் என்று அவன் தந்தை எண்ணியது அவனுக்கு மிக்க மகிழ்ச்சியளித்தது. உணர்ச்சிக் கலவையினூடே அவன் மேடையேறி அவர் காலைத்தொட்டு வணங்கினான்.



அவையினரின் எதிரில் அமர்ந்து ஸரோதைக் கையில் எடுத்தவுடன் அவனுடைய பயமெல்லாம் பனிபோல் விலக, ஒரு பிரார்த்தனையுடன் விரல்களால் அதை மெல்ல மீட்டலானான். அவன் உடல் முழுவதும் ஒரு புத்துணர்ச்சி எழுந்து அவன் விரல்களில் பரவியது போலிருந்தது. ஸரோதின் கம்பிகளை வருடி அவற்றின் மேல் விரல்களால் நடனமாடி, கொஞ்சி, அமுதமழை பொழிய வைத்தான். சிறிது நேரத்தில் அவையெங்கும் தெய்வீக இசை நிரம்பியது.

அவன் வாசிப்பு முடிந்ததும் கரவொலி அவையைப் பிளந்தது. அவன் தந்தை அவன் மீது வைத்த நம்பிக்கை வீண்போகவில்லை! ஸரோத்தின் மெல்லிசை, மரபு வழியில் அடுத்த தலைமுறையிடம் போய்ச் சேர்ந்துவிட்டது.

# அம்ஜத் கான் முதல்
# உஸ்தாத் அம்ஜத் அலிகான் வரை

உஸ்தாத் அம்ஜத் அலிகான் இந்தியாவின் முன்னணி இசைக் கலைஞர்களில் ஒருவர். 1945ஆம் ஆண்டு பிறந்த அவர், சமுதாய சக்கரவர்த்திகளின் தர்பாரை அலங்கரித்த பிரபலமான கலைஞர்கள் நிறைந்த குடும்பத்தை சேர்ந்தவர். அவருடைய தந்தையும், இசைக்குருவுமான உஸ்தாத் ஹஃபீஸ் அலிகான் போன்ற சிறந்த கலைஞர்களின் வரிசையில் வந்த அம்ஜத் அலிகான், தன் பரம்பரைக் கௌவரத்தை சிறப்பாகவே நிலைநாட்டி வருகிறார்.

தன்னுடைய இசைவாழ்க்கையில், அவர் பல புதிய ராகங்களைக் கண்டுபிடித்ததோடு, இந்துஸ்தானி இசை மரபை மீறாமல் அதன் வரையறைக்குள் ளாகவே பல புதுமைகளைப் புகுத்திய பெருமையும் அவரைச் சாரும். ஸரோதின் அமைப்பை தூய இந்துஸ்தானி இசையின் தேவைக்கேற்றவாறு மாற்றி அமைத்திருக்கிறார். தென்னிந்திய இசையான கர்நாடக இசை, மேற்கத்திய பெருநிலை இசை, பாப் இசை போன்ற பலதரப்பட்ட இசையை அம்ஜத் அலிகான் ரசித்துக் கேட்பார்.

உஸ்தாத் அம்ஜத் அலிகான் குழந்தைகளுக்காகப் பாடுபடுபவர்களில் ஒருவர். அவர்கள் தமது வாழ்க் கையில் இசைக்கு இடமளிக்க வேண்டுமென்பது அவருடைய அவா. 1986இல், யூனிசெஃபின் (ஐக்கிய நாட்டு சர்வதேச குழந்தைகள் நெருக்கடி நிதி) 40வது ஆண்டு விழாவையொட்டி அவர் 'ஏக்தா ஸே ஷாந்தி' (ஒற்றுமையினால் அமைதி) என்ற தலைப்பில் இசைத் தொகுப்பு ஒன்றை வெளியிட்டார். ஸ்பாஸ்டிக் அமைப்பு, இந்திய கான்சர் அமைப்பு, பார்வை யிழந்தோர் நிவாரண நிதி மற்றும் யூனிசெஃப் போன்ற அற அமைப்புகளுக்கு நிதி திரட்டுவதற்காக



கச்சேரிகள் பல நடத்தி யிருக்கிறார். தன் தந்தையின் நினைவில் குவாலியரில் உஸ்தாத் ஹாஃபீஸ் அலிகான் நினைவு மன்றம் ஒன்றை நிறுவி, அதன்வழியே இந்திய பெருநிலை இசையை மக்களிடையே பரப்பி வருகிறார்.

உஸ்தாத் அம்ஜத் அலிகான் பல விருது களால் கௌரவிக்கப்பட்டுள்ளார். இவற்றுள் பத்மஸ்ரீ (1975) பத்ம பூஷண் (1991) தான்சேன் விருது (1989) யூனிசெஃப் நிறுவியுள்ள இண்டர் நேஷனல் ம்யூசிக் ஃபோரம் விருது (1970) சங்கீத் நாடக அகாதமி விருது (1989) குறிப்பிடத்தக்கவை. யூனிசெஃப் அவரை தேசிய தூதுவராக நியமித்துள்ளது. இன்று அவர் இந்திய இசையை இந்தியாவிலும், வெளி நாடுகளிலும் பிரபலப்படுத்திக் கொண்டிருக்கிறார்.



# ஆடல் அழகி

ம்ருணாலினி தன் பாட்டியின் காலடியில் உட்கார்ந்து அவர் முகத்தை அன்புடன் பார்த்தவண்ணம் இருந்தாள். பாட்டி மிக அற்புதமான கதைகளைச் சொல்வார்கள். அவளுக்கோ கதைகளென்றால் உயிர்.

ஆண்டுதோறும் கோடை விடுமுறையில் ம்ருணாலினியின் குடும்பம், கேரளாவிலிருந்த ஆனக்கரை எனும் கிராமத்தில் தம் முன்னோர்கள் வசித்த வீடான வடக்கத்துக்கு வருவது வழக்கம். அவளின் சித்தி, மாமாக்களும் தத்தம் குடும்பங் களுடன் அச்சமயம் அங்கு வருவார்கள். அந்த பெரிய வீட்டை அவள் பாட்டி கண்டிப்பும் அன்பும் கலந்து பராமரித்து வந்தார்.

ம்ருணாலினிக்குத் தன் பாட்டியிடம் தனிப்பட்ட ஈர்ப்பு உண்டு. இளவயதில் பாம்படம் போட்டு நீண்டிருந்த அவருடைய காதுகள் தோள்வரை தொங்கிக் கொண்டிருக்கும். கேரளப் பாணியில் இடுப்பில் வெள்ளை நிறத்தில் வேட்டியும், தோளின் மீது 'முண்டு' எனப்படும் தாவணியும் அணிந்து அவர் வளைய வருவார். அவர் அணிந்திருக்கும் ஒரே அணிகலன் அவர் கழுத்திலுள்ள' உருத்திராட்ச மாலைதான்.

"அம்மம்மா! (பாட்டி) நீங்கள் ரவிக்கை ஏன்



அணிவதில்லை?'' என்று கேட்டாள் ம்ருணாலினி.

"ரவிக்கையா? அவற்றை நம்மைப் போன்ற ஒழுக்கமுள்ள குடும்பப் பெண்கள் அணிய மாட்டார்கள்!'' என்று சற்று கடுமையாகக் கூறினார் பாட்டி. அவர் சொன்னதன் பொருள் அவளுக்குப் புரியா விட்டாலும் அவர் குரலிலிருந்த கடுமையைக் கண்டு அவள் பாட்டியிடம் அதைப்பற்றி மேலும் கேட்கத் தயங்கினாள்.

அவளும் அவள் சகோதர சகோதரிகளுடன் வீட்டினருகில் இருந்த பெரிய குளத்தில் நீந்திவிட்டு வந்திருந்ததால் அவளுடைய தலைமுடி அப்பொழுது ஈரமாக இருந்தது.

அனைவரும் சீக்கிரம் எழுந்து குளித்து முடித்து, வீட்டில் நடைபெறும் விமரிசையான பூஜைக்குத் தயாராக இருந்தனர். ம்ருணாலினிக்கு அப்பூஜை மிகவும் அழகானதாகத் தோன்றும். பூஜை மணி யோசை, ஊதுபத்தி, கற்பூரம் மற்றும் பூக்களின் நறுமணம் அவளுக்கு மிகவும் பிடிக்கும்.

பூஜையறை கீழிருந்து கூரைவரை கடவுளின் படங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கும். அவற்றினுள் அவள் கண்ணனின் படத்தைத் தேடி அதில் தன் பார்வையைப் பதித்தாள். அது மிகவும் பிடித்த படம். அதில் கண்ணன் ஒரு காலை வளைத்துநின்று புல்லாங்குழல் ஊதிக்கொண்டிருப்பான். கண்களை மூடிக்கொண்டால் அவளுக்கு அக்குழலின் நாதம் கேட்பதுபோன்று இருக்கும். அது மட்டுமல்ல. கண்ணன்தான் அவள் மனதிற்கு பிடித்த தெய்வம்.

பூஜைக்குப் பிறகு அவர்களுக்குக் காலை உணவாக மொறுமொறுவென்ற தோசையும், அதற்கு தொட்டுக்கொள்ள எண்ணெயில் குழைத்த மிளகாய்ப் பொடியும் பரிமாறப்படும். நாள் முழுவதும் ஓடியாடி விளையாடுவார்கள். சிறுவர்கள் மலையாளத்தில் கலகலப்பாகப் பேசிக்கொண்டு, அங்கும் இங்கும் ஓடி, ஒருவரையொருவர் அழைத்துக்கொண்டு விளையாடு வதைப் பெரியவர்கள் கண்டு மனமகிழ்வர்.

"குழந்தைகளே! இங்கு வந்து ஏதாவது சாப்பிட்டு விட்டுப்போங்கள்!" ம்ருணாலினியின் சித்தி குன்னி லட்சுமி அம்மை அவர்களை அழைத்தார். நாள்

முழுவதும் அவ்வப்போது அவர்களுக்கு வாழைக்காய் மற்றும் பலாப்பழ வறுவல் அல்லது சுவையான இனிப்புப் பண்டம் போன்ற தின்பண்டங்களைச் சுவைக்க கொடுத்தவாறு இருப்பார். ஓடியாடி விளையாடுவது அச்சிறுவர்களுக்கு நல்ல பசியைத் தூண்டிவிட, அவர்கள் அவர் தரும் தின்பண்டங்களை ஆவலுடன் சாப்பிடுவார்கள். ம்ருணாலினிக்கு விடுமுறை என்றாலே ஓரே குதூகலம்தான்.

இவற்றைத் தவிர அவளுக்குத் தன் பாட்டியின் வீடு பிடித்திருந்ததற்கு வேறொரு காரணமும் இருந்தது. அங்குநாள் முழுவதும் பலர் வந்துபோய்க் கொண்டிருப்பார்கள். ஒரு சோதிடர் வந்து அவர்கள் அனைவரையும் உட்கார வைத்து வரிசையாக அனைவரின் எதிர்காலத்தைப் பற்றியும் கூறுவார். யாருக்காவது உடல் நலமில்லாமலிருந்தால், நாட்டு மருந்துகளுடன் விஜயம் செய்யும் மூசது எனும் உள்ளூர் வைத்தியர்; பலவிதமான பொருட்கள் விற்கும் வியாபாரிகள், என பலரும் வந்தவாறு இருப்பார்கள். ஆனால் இவர்கள் எல்லாரையும்விட ம்ருணாலினிக்கு மிகவும் பிடித்தவர்கள், இரவு முழுதும் அங்கு தங்கி அவர்களை மகிழ்விக்கும் கதகளி குழுவினர்தான். அவர்களின் நடனத்தைக் கண் கொட்டாமல் பார்க்கும் ம்ருணாலினி அவர்களின் ஒவ்வொரு அசைவையும் மனதில் பதியவைத்துக் கொண்டு தன் மனதிலேயே அவர்களுடன் ஆடுவாள்.

அந்நடனத்தைப் பார்க்கும் அவளுக்கு அது வேறொரு உலகம்போல் தோற்றமளிக்கும். மொத்தத்தில் அவ்வீடு குழந்தைகளுக்கான சொர்க்க மாக விளங்கியது.

ம்ருணாலினியின் பாட்டிவீடு அவருடைய சென்னை வீட்டிலிருந்து முற்றிலும் மாறுபட்டிருந்தது. சென்னையில் அவள் வீட்டில் பல மேலைநாட்டுப் பழக்க வழக்கங்கள் பின்பற்றப்பட்டு வந்தன. அவள் தன் தாயை 'மம்மி' என்று அழைப்பாள். அவளை மற்றவர்கள் 'பேபி மே' என்று அழைத்தனர். அவ்வீட்டின் பெயர் 'கில்கிரைஸ்ட் கார்டன்'. அவளுக்குத் தன் சென்னை வீடு பிடிக்காது என்பதில்லை. அதுவும் அவளுக்கு மிகவும் பிடித்தது தான். ஆனால் பாட்டி வீடு மாதிரி அங்கு அவளால் அவ்வளவு விஷயங்களில் ஈடுபட முடியாது. சென்னை



வீட்டில் அவள் தன் தோழர்களையும் ஒன்றுவிட்ட சகோதர சகோதரிகளையும் ஒன்றுதிரட்டி நாடகங்கள் நடத்துவாள். தவிர அவள் தாய் விருந்தோம்பலில் சிறந்தவர் என்பதால் அவரைத் தேடி வருவோர் மாலைத்தேநீர் விருந்துக்குத் தங்கி, ஓரிரு ஆட்டங்கள் டென்னிஸ் விளையாடிவிட்டுச் செல்வார்கள். ம்ருணாலினி மிகச்சின்ன பெண்ணானதால், அவளுடன் அவர்கள் டென்னிஸ் விளையாட மாட்டார்கள்.

ஆனால் அவள் இதைப் பொருட்படுத்திய தில்லை. ஏனென்றால் அங்குள்ள பயிற்சியாளர் அவளுடன் விளையாடுவார். விளையாட்டும், உயிரோட்டமும் நிரம்பிய அச்சிறுமி தன்னைச் சுற்றிலுமிருக்கும் இயற்கைச் சூழலை உணர்ந்து ரசித்தாள். ஆகாயம், மரங்கள் மற்றும் நிலம் அவள் கண்களுக்கு ஒரு தெய்வீக நடனத்தின் அங்கங்களாய்த் தெரிந்தன.

அவள் ஆறு வயது சிறுமியாக இருந்தபொழுது ஒரு இரவு அவள் ஒரு கனவு கண்டாள். அக்கனவில் அவள் ஒரு முடிவில்லாத ஒரு நீண்ட பாதையில் நடந்து கொண்டிருந்தாள். இருமருங்கிலும் மரங்கள் பாதையின்மீது பச்சைக்குடைபோல் விரிந்திருந்தன. நடந்து கொண்டேயிருந்த அவள் ஏனென்று புரியாமல் திடீரென்று ஓடத் தொடங்கினாள். தான் எங்கு போகிறோம், போகும் இடத்தில் என்ன காணப் போகிறோம் என்பதைப் பற்றிய இலக்கு இல்லாமல் அவள் ஓடிக்கொண்டிருந்தாள்.

அப்பொழுது, தூரத்தில் அவளுக்கு ஒரு சிறிய கோயில் தெரிந்தது. அவள் அக்கோயிலுக்குள் நுழைந்ததும் அங்குள்ள ஒளிமயமான நடராஜர்சிலை அவளுக்காகவே காத்திருந்ததைப்போல் உணர்ந்தாள். அச்சிலையின் காலடியில் விழுந்த அவளுக்கு அசரீரியாக ஒரு குரல் கேட்டது: "நீ என்றென்றும் நடனமாடிக் கொண்டிருக்க வேண்டும் குழந்தாய்!" என்று அது கூறியது.

பளிச்சென்று காலையில் கண் விழித்ததும் தான் பார்த்ததெல்லாம் மெய்யா கனவா என்று தீர்மானிக்க முடியாதவாறு அக்கனவு அவளது நினைவில் நின்றது. அனால் அவள் பிஞ்சு மனதில் ஒரு தீர்மானம் மட்டும்

உருவாகி விட்டிருந்தது. அவள் நிச்சயம் நடன மாடுவாள்! வேறெதைப் பற்றியும் அவள் கவலைப்பட வில்லை. அவளை நடராஜப் பெருமானே வாழ்த்திய பிறகு அவளுக்கு வேறென்ன வேண்டும்?

"மம்மி, எனக்கு நடனம் கற்க வேண்டும்." அன்று காலை உணவின்போது ம்ருணாலினி தன் தாயிடம் கூறினாள்.

அவரோ அதைப் பெரிதாக நினைக்காமல், "இவ்வளவு சிறிய பெண் நடனமாடுவதாக யாரும் கேள்விப்பட்டதில்லை. இதைப்பற்றி இனி பேசாமல் உன் பாடங்களைப் படி!" என்று கூறிவிட்டார்.

ம்ருணாலினி அவ்வளவு எளிதில் தன் ஆசையை மறந்துவிடுவதாக இல்லை. ஆனால் அதன்பின் ஒரு பயங்கரமான சம்பவம் நடந்தது. அவள் தந்தை திடீரென்று இறந்துவிட்டார். கனத்த இதயத்துடன் இருந்த அவள் தாய், ம்ருணாலினி தன் அன்பிற்குரிய தந்தையின் மறைவால் எவ்வளவு பாதிக்கப்பட் டிருந்தாள் என்பதை நன்கு அறிந்திருந்தார்.

அவரின் மறைவு நாட்டியம் கற்க வேண்டும் என்ற அவளுடைய உறுதியை மேலும் பலப்படுத்தியது. தன்னைப் புரிந்து கொள்ள முடியாதவர்கள் தன் கனவை எங்கே புரிந்துகொள்ளப் போகிறார்கள் என்று அவள் நினைத்ததே இதற்குக் காரணம். தனக்கு என்ன தேவை என்று தீர்மானம் செய்துகொண்டுவிட்ட அச்சிறுமி அதனைத் தேடும் முயற்சியில் இறங்கினாள். தனக்கு ஒரு குருவையும்தானே தேடிக்கொள்ள வேண்டும் என்பதை அவள் அறிந்திருந்தாள்.

"வா, பட்டத்தாயா, வண்டியில் கொஞ்ச தூரம் போய்வரலாம்," என்று அவள் தன்னைப் பார்த்துக் கொள்ள நியமிக்கப்பட்டிருக்கும் பணிப்பெண்ணை அழைத்தாள். பிறகு தன் டிரைவர் ஜார்ஜைத் தேடினாள்.

மூவருமாக வண்டியில் ஏறி சென்னையின் தெருக்களில் வெகுநேரம் சுற்றினர். ம்ருணாலினிக்கு மட்டுமே அவர்கள் எதற்காக இவ்வாறு அலை கிறார்கள் என்பது தெரியும். திடீரென்று வண்டியை நிறுத்தச் சொல்லி இறங்கித் தனக்கு உதவக்கூடும் என்று அவளுக்குத் தோற்றமளித்த யாராவது ஒருவரை நிறுத்தி, "நாட்டியம் கற்றுத்தருபவர் யாரையாவது உங்களுக்குத் தெரியுமா," என்று கேட்பாள். முதலில்



அவர்கள் அவளை வினோதமாகப் பார்த்தாலும், அவள் கண்களில் தெரியும் உறுதியைக் கண்டு வியந்து போவார்கள்.

தெரியாதென்று தலையை அசைத்துக் கூறிவிட்டு சென்றுவிட்டாலும் அவரின் ஏமாற்றமடைந்த முகம், 'தன்னால் அச்சிறுமிக்கு ஏதாவது உதவ முடிந்திருக்கக் கூடாதா' என்று நினைக்கத் தோன்றும். இன்று போலல்லாமல், அக்காலத்தில் நாட்டியம் அவ்வளவு புகழ் பெற்றிருக்கவில்லை. அதனால் நடன

ஆசிரியர்கள் பற்றி பலருக்குத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை.

சில சமயம் தன் பணிப்பெண்ணுடன் ஒவ்வொரு தெருவையும் உற்று நோக்கியவாறு பல மைல்கள் நடந்தாள். ஏதாவது மாயத்தால் தனக்கு ஒரு ஆசிரியர் கிடைத்துவிடக் கூடாதா என்று அவள் ஏங்கினாள். இது பல நாட்கள், பல வாரங்கள் நீடித்தது. தன் வீட்டினருக்கு மட்டும்தான் எதற்காக இவ்வாறு அலைகிறோம் என்பதை அவள் சொல்லவில்லை. இவ்வளவு ஏன், அவளுடனே சுற்றும் பணிப்பெண் ணுக்குக்கூட அவளின் ரகசியத் தேடலின் காரணம் தெரியாது! ஆர்வத்தால் பளபளக்கும் கண்களுடைய தன் குட்டி எஜமானியுடன் அவள் கூப்பிட்ட இடங்களுக்கெல்லாம் அவள் சென்றாள். ம்ருணாலினி நாட்டியத்தைப் பற்றி நினைத்துக் கொண்டிருப் பதையும், நடனமாடுவதைப் பற்றிக் கனவு காண்பதையும் அவள் எப்படி அறிவாள்?





சிறிது நாட்களில் ஒரு சிறுமி நாட்டிய ஆசிரியைத் தேடி அலையும் விஷயம் ஊரெங்கும் பரவிவிட்டது. ஒருநாள் ஒரு முதியவர் அவளை நோக்கி வந்தார். அவரைக் கண்டதும் ம்ருணாலினி நின்றாள்.

"சின்னம்மா, நீ எந்த நாட்டியத்தைப் பற்றி எல்லாரிடமும் கேட்கிறாய்?" என்று அன்புடன் கேட்டார்.

"எனக்குத் தெரியவில்லை. ஆனால் மரங்கள், பூக்கள் மற்றும் ஆகாயத்தில் மின்னும் நட்சத்திரங்கள் அழகாக ஆடுவதைக் காணும்போது என்னை அவற்றுடன் ஒன்றாக உணர்கிறேன். இதுதான் நாட்டியமாக எனக்குத் தோன்றுகிறது. இந்தப் பெரிய நகரத்தில் பலர் நடனக் கலையில் ஈடுபட்டிருக் கிறார்கள் என்று எனக்குத் தெரியும், ஆனால் நடன ஆசிரியர் எங்கு கிடைப்பாரென்று எனக்குத் தெரியாது. தாத்தா, உங்களுக்கு யாரையாவது தெரியுமா?" என்று கேட்டாள் ம்ருணாலினி.

அம்முதியவர் அவளின் விளக்கத்தையும் அதனைத் தொடர்ந்த கேள்வியையும் கேட்டு முறுவலித்தார். 'ஆறு-ஏழு வயதே இருக்கக்கூடிய இச்சிறுமிக்கு எத்தனை ஆழமான புலனறிவு இருக்கிறது!' என்று மனதிற்குள் வியந்தார் அவர்.

"நீ நடனமாட விரும்புவதைப் பற்றி உன் தாய் அறிவாரா? நடனம் பயில அவர் உனக்கு அனுமதி கொடுப்பாரா?" என்று கேட்டார்.

"நான் என்ன செய்தாலும் அவர் ஏதும் கூற மாட்டார்," ம்ருணாலினி அவசரமாகக் கூறினாள். "நான் சிறுபிள்ளைத்தனமாக அங்கும் இங்கும் அலைவதாக அவர் நினைத்துக் கொண்டிருக்கிறார். அதனால்தான் என்னைத் தினமும் கடற்கரை மணலிலும் நீரிலும் விளையாடுவதற்காக அனுப்புகிறார்."

"தனியாகவா?"

"அங்கு பாருங்கள்! என் ஆயா எப்பொழுதும் என்னுடன் இருப்பாள். அவள் என் உற்ற தோழி யாதலால் நான் எங்கு செல்கிறேனென்று என் தாயிடம் சொல்ல மாட்டாள். தயவுசெய்து உங்களுக்கு நடன ஆசிரியர் யாரையாவது தெரிந்தால் கூறுங்கள்!" என்றாள் அவள்.

"நீ என்னுடன் வா! உன் ஆயாவையும் அழைத்து வா. அவளுக்கு உன்னிடம் மிக்க பாசம் இருக்க வேண்டும், இல்லாவிட்டால் இப்படி உன்னுடன் தெருத்தெருவாக அலைய மாட்டாள்," என்று கூறினார் அவர்.

மூவரும் அத்தெருவின் கோடியிலிருந்த வெள்ளை அடிக்கப்பட்ட ஒரு சிறிய வீட்டை அடைந்தனர். அதை மற்ற வீடுகளிலிருந்து தனியாகப் பிரித்துக்காட்ட எந்த அடையாளமும் இல்லை. ம்ருணாலினிக்கு இனம் புரியாத குதூகலம் மனதை நிறைத்தது. தன் தேடல் அத்துடன் முடிவடைந்து விட்டது என்ற எண்ணம் அவள் மனதில் தோன்றியது. உள்ளே நுழையும்போதே வீடு துப்புரவாகவும், குளிர்ச்சி மிகுந்தும், பளபளக்கும் தரையுடன் இருந்ததையும் அவள் கவனித்தாள்.

உள்ளேயிருந்து வந்த ஒரு மூதாட்டி அந்தச் சிறுமியையும் அவளுடன் வந்திருந்த வயதான பணிப் பெண்ணையும் ஆச்சரியத்துடன் பார்த்தார். ம்ருணாலினியின் முகத்திலிருந்து தன் பார்வையை அகற்றாமலே தரையில் ஒரு பாயை விரித்து அவளை உட்காரும்படி பணித்தார். அவள் கீழே அமர்ந்து தன் பாவாடையை சரிசெய்துகொண்டாள். முதியவரும் அவள் எதிரில் அமர்ந்தார்.

அவர் முதலில் ஏதும் பேசாமல் அவள் கண்களை ஊடுருவி நோக்கியவாறு இருந்தார். அவருடைய பார்வை அவள் ஆன்மாவையே ஊடுருவுவது போலிருந்தது. ம்ருணாலினி பயப்பட வில்லை. ஏனென்றால், அதில் கனிவும், அன்பும் நிரம்பியிருந்தது. அவர் பேசுவதற்காகப் பொறுமை யாகக் காத்திருந்தாள்.

சற்று நேரம் கழித்து, "நான் ஒரு நடன ஆசிரியர்," என்றார் அவர். ம்ருணாலினியின் உள்ளம் துள்ளியது. "உனக்கு நடனத்தில் அவ்வளவு ஆர்வமிருந்தால் நீ என் மாணவியாகச் சேரலாம். ஆனால், அதற்கு உன் தாயின் அனுமதி பெற்று வரவேண்டும்."

"ஆனால், தாத்தா..." என்று தொடங்கினாள் ம்ருணாலினி.

அவளை அமைதியாக இருக்குமாறு சைகை செய்துவிட்டு அவர் தொடர்ந்தார். "உன் தாயிடம் என் பெயர் தஞ்சாவூர் பிள்ளை என்றும், நான் பரத



ஆசிரியர் என்றும் சொல். இன்றைய சமூகத்தில் கோயிலுக்குச் சொந்தமான பெண்கள் மட்டுமே பரதம் பயிலவும், ஆடவும் அனுமதிக்கப்பட்டிருக்கிறார்கள். நீ என்னிடம் கடவுளின் அன்பளிப்பாக வந்திருப்பதால் நான் உன்னை மாணவியாக ஏற்றுக் கொள்கிறேன். நீ ஆடுவதற்காகவே பிறந்திருக்கிறாய் என்பது என் கருத்து. நான் சென்னையில் சில காலம் இருப்பேன். நான் இருக்கும் வரை உனக்குப் பயிற்சி அளிக்கிறேன். எதிர்காலத்தைக் கடவுள் நிச்சயிக்கட்டும்," என்று கூறினார் அந்த முதியவர்.

ம்ருணாலினிக்கு அவர் பேசியதில் பாதிக்கு மேல் புரியவில்லை. அவர் நடன ஆசிரியர் என்பதும், தனக்குப் பயிற்சியளிக்க அவருக்குச் சம்மதம் என்பது மட்டும் அவளுக்கு நன்றாகப் புரிந்தது. அவளுக்கு அதுவே போதும்! அவள் உடனே எழுந்து அவர் காலில் விழுந்து நமஸ்கரித்தாள். அக்கணமே அவரைத் தன் குருவாக ஏற்றுக்கொண்டும் விட்டாள்.

அதன்பின் தன் ஆயாவின் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு, ஏறக்குறைய நடனமாடியவாறே வீட்டை நோக்கிச் சென்றாள். தன் ஆயாவும் மனதிற்குள்ளேயே நடனமாடிக் கொண்டிருந்தது அவளுக்குத் தெரியாது. அவளுக்கு ம்ருணாலினிமேல் மாளாத அன்பு என்பதால், அவள் மகிழ்ச்சியாக இருப்பதைக் கண்ட அவளுக்கும் மட்டற்ற மகிழ்ச்சி.

நடன ஆசிரியரைத் தேடத் தூண்டிய ம்ருணாலினியின் கனவு நனவாகிவிட்டது. இல்லை, அக்கனவு இனிதான் உண்மையாகப் போகிறது. அவள் நடனம் பயிலப் போகிறாள்! அவள் கனவில் நடராஜப் பெருமான் கூறியதுபோல் அவள் நடன மாடப் போகிறாள்!

வீட்டருகில் வந்ததும் அவள் சட்டென்று நின்றாள். "பட்டத்தாயா, இது நமக்கிடையில் உள்ள ரகசியம். மம்மியிடம் தயவுசெய்து சொல்லாதே. அவருக்குத் தெரிந்தால் என்னைப் பரதம் பழக அனுமதிக்க மாட்டார். நாமிருவரும் தினமும் உலவப் போகிறோமென்று அவருக்குத் தெரியும். என்றாவது வண்டியில் போனால், ஜார்ஜிடம் நாம் போகும் இடத்தைப் பற்றி மம்மியிடம் சொல்ல வேண்டாம்

என்று சொல்லி விடலாம்," என்றாள். அவளும் சரியென்று தலையாட்டினாள். தன் எஜமானி அம்மாளிடமிருந்து எதையும் மறைக்க பயந்தாலும், ம்ருணாலினிக்காக ஒப்புக் கொண்டாள்.

இவ்வாறு, கிட்டத்தட்ட மூன்று வருடங்கள் அவள் தஞ்சாவூர்ப் பிள்ளையிடம் அவ்வப்போது நடனம் பயின்றாள். அவள் தாய்க்கு இதனிடையே அவளின் நடனப் பித்து பற்றி தெரியவந்து, அவளை அவள் போக்கிலேயே விட்டுவிட்டார். அவள் ஆடுவதைக் கண்டு பெருமையும், மகிழ்ச்சியும் அடைந்தாலும் அவளுடைய உடல்நலத்தைப் பற்றி அவர் கவலைப்பட்டார்.

அதன்பிறகு அவளுக்குப் பயிற்சியளிப்பதற்காக ஆசிரியர்கள் வீட்டிற்கே வரவழைக்கப்பட்டார்கள். ம்ருணாலினியோ நாட்டியத்தில் திளைத்திருந்தாள். அடிக்கடி வந்த காய்ச்சலால் அவள் உடல்நலம் பாதிக்கப்பட்டது. உடல்நலம் தேறுவதற்காக அவளை சுவிட்சர்லாந்து அனுப்பிய பிறகும்கூட அங்கு தன் நாட்டியத்தை விடவில்லை. அங்கு பாலே மற்றும் கிரேக்க நடனம் பயின்றாள்.

"இவள் ஒரு சிறந்த நாட்டிய மங்கை!" என்று அன்னத்தைப் போன்றிருந்த அவள் அசைவுகளையும் நடனத்தின் நேர்த்தியையும் கண்ட அவள் ஆசிரியை அவளைப் பாராட்டினார்.

சுவிட்சர்லாந்தின் சீதோஷ்ண நிலை அவளுக்குப் பொருந்தியதால் விரைவிலேயே அவள் உடல்நலம் அடைந்தாள். விளையாட்டில் என்றுமே ஆர்வம் மிகுந்த அவள், டென்னிஸ், வலைப்பந்து, லாக்ரோஸ், பனிச்சறுக்கு, நிலச்சறுக்கு மற்றும் பனிக்கட்டி ஹாக்கி என்பன போன்ற அனைத்து ஆட்டங்களிலும் தேர்ந்தெடுக்கப்பட்ட பிற பள்ளிகளுடன் ஆடப்பட்ட போட்டிகளில் பங்கெடுத்துக்கொண்டாள்.

பள்ளியின் இறுதி நாள் ம்ருணாலினிக்கு மகிழ்ச்சியும் துயரமும் கலந்த நாளாக இருந்தது. மகிழ்ச்சியின் காரணம் அவள் அன்று கிரேக்க நடனப் பாணியில் மூன்று தனி நடனங்கள் ஆடினாள் என்பதும், உடற்பயிற்சிக் கூடத்தின் நாயகியாக அவள் விளங்கியதும்தான். துயரத்திற்கு காரணம், அன்று அவள் தன் ஆருயிர்த்தோழி பமீலா மார்கரெட் சன்னையும் மற்ற பள்ளித் தோழிகளையும் விட்டுப்



பிரிந்துபோய்க் கொண்டிருந்தது. பமீலாவும் அவளும் என்றென்றும் ஒருவரையொருவர் மறக்கமாட்டோமென உறுதி கூறி விடை பெற்றார்கள்.

சென்னை வந்தபிறகு ம்ருணாலினி இந்தியக் கலாசாரத்தின் வழிமுறைகளுக்கு எளிதாகத் திரும்பிவிட்டாள். அவள் சுவிட்சர் லாந்தில் இருந்த சமயம் ம்ருணாலினியின் தாய் இந்திய சுதந்திரப் போராட்டத்தில் ஈடு பட்டிருந்ததின் விளைவாக அந்நாளைய போராட்ட வீரர்கள் சரோஜினி நாயுடு, திருமதி விஜயலட்சுமி பண்டிட், திருமதி. கஸின்ஸ் போன்றவர்கள் அவர்கள் வீட்டிற்கு அடிக்கடி வரலாயினர்.

ஆனால் ம்ருணாலினிக்கோ வாழ்க்கையே நடனமாகவும், நடனமே வாழ்க்கையாகவும் இருந்தது. அவள் தொடர்ந்து நடனம் பயின்று ஆடினாள்... ஆடிக்கொண்டே இருந்தாள்... இன்றும் ஆடிக் கொண்டே இருக்கிறாள். தன் கலையை எதிர்காலத் தலைமுறையினருக்குக் கற்பித்துக் கொண்டிருக்கிறாள்.

# நடனமே வாழ்க்கை

ம்ருணாலினி சாராபாய் சர்வதேசப் புகழ்பெற்ற பெருநிலை நடனமணி, மற்றும் நட்டுவனார் ஆவார். இவர் இயக்கிய நாட்டிய நாடகங்கள் 300க்கும் மேற்பட்டவை. தமக்கே உரிய பாணியில், பெருநிலை மற்றும் நவீன நாட்டிய முறைகளைத் திறம்பட கலந்து வழங்குவதில் தேர்ந்தவர். மேலைநாட்டு நடனமான பாலே நடனம், ஆண்கள் ஆடும் கேரளத்தின் கதகளி போன்ற பலவகைப்பட்ட நடனங்களிலும் ஈடுபாடு கொண்டவர் திருமதி சாராபாய். கதகளியில் சிறப்புத் தொண்டு ஆற்றியமைக்காக அளிக்கப்படும் 'வீர சிருங்கலா' பட்டத்தைப் பெற்ற ஒரே பெண்மணி என்ற பெருமை அவரைச் சேரும்.

குழந்தைகளுக்காக நூல்கள் எழுதுவதோடு இளம் தலைமுறையினர் இடையே தம் விரிவுரை மற்றும் நிகழ்ச்சிகள்மூலம் நம் பண்பாடு மற்றும் கலைகளைப் பரப்புவதிலும் ஈடுபட்டுள்ளார். பல நாடுகளுக்கும் சென்று நடனநிகழ்ச்சிகளை நடத்தியுள்ள திருமதி சாராபாய் சென்ற இடமெல்லாம் நம் நடனக் கலையை புகழடையச் செய்து வருகிறார்.

விமரிசர்களால் 'இந்திய நடனத்தின் தலைமை ஆசான்' எனும் பட்டத்தைப் பெற்றிருக்கும் அவர், 1949ஆம் ஆண்டு அகமதாபாதில் 'தர்ப்பணா' என்ற நடிப்புக் கலைக்கழகம் ஒன்றை நிறுவி இயக்கி வருகிறார். திருமதி. சாராபாய், 'பிரெஞ்சு ஆர்கைவ்ஸ் இன்டர்நேஷனல்ஸ் டெலா டான்செ' எனும் அமைப்பு வழங்கும் பட்டயம் மற்றும் பதக்கம் வாங்கிய முதல் இந்தியராவார். இந்தியாவிலும் சர்வதேச அளவிலும் அவர் பல விருதுகள் பெற் றிருக்கிறார். அவற்றில் குறிப்பிடத்தக்கவை, பத்மஶ்ரீ (1968), பத்மபூஷண் (1992), சாந்தி நிகேதனின் விஸ்வபாரதி பல்கலைக்கழகத்தின் மிக உயரிய



பட்டமான 'தேசிகோத்தமா' (பட்டம் (1987) மற்றும் மத்திய பிரதேச அரசாங்கம் வழங்கும் 'காளிதாஸ் சம்மான்' விருது ஆகியவையாகும். அவர் சங்கீத நாடக் அகாதமியின் உறுப்பினரும் ஆவார்.

## தனிமைக் கலைஞன்



"டாடி உங்களுடைய தபால் தலைத்தொகுப்பைப் பார்க்கலாமா?" என்று கேட்டான் சிறுவன் ரஸ்கின். அவன் தன் தந்தையுடன் வசித்துவந்த ஆர்.ஏ.எஃப். கூடாரத்தில் ஒரு டிரங்குப் பெட்டியின் மேல் உட்கார்ந்திருந்தான். அவனுக்கு அவரிடமிருந்து கவர்ச்சிகரமான, பல தூர தேசங்களின் தபால் தலை களைப் பார்க்க மிகவும் பிடிக்கும். அவற்றைப் பார்ப்பதைவிட, அவர் கூறும் கதைகளைக் கேட்க இன்னும் அதிகமாகப் பிடிக்கும். அந்த அஞ்சல் தலைகள் வெளியான நாட்டைப் பற்றியும் அவற்றில் உள்ள படத்தைப் பற்றியும் அவர் கூறும் சுவையான தகவல்களை ஆவலுடன் கேட்பது வழக்கம். சில சமயங்களில் தன்னிடமுள்ள ஏதாவது ஒரு அரிய தபால்தலை அவருக்கு எப்படி கிடைத்தது என்று விளக்குவார். இவற்றையெல்லாம் கேட்கும் பத்து வயது சிறுவனான ரஸ்கினுக்கு ஏதோ சாகசக் கதை கேட்பது போன்றிருக்கும்.

அன்று திரு. பாண்ட் ஏதோ வேலையாக இருந்தார். "இப்பொழுது எனக்கு நேரமில்லை ரஸ்கின்! முதலில் நான் இந்தக் கவிதையை எழுதி முடித்து விடுகிறேன். அதன்பிறகு நாம் தபால் தலைகளை அடுக்கி வைப்போம், என்ன?" என்றார் அவர்.

"ஓ, டாடி! எழுதி முடித்தவுடன் அதை எனக்குப் படித்துக் காட்டுவீர்களா?" என்று ஆவலுடன் கேட்டான் ரஸ்கின். அவர் சரி யென்று தலையாட்டினார். ரஸ்கின் எழுந்து கூடாரத்தைவிட்டு வெளியே வந்து மைதானத்தைச் சுற்றி வரலானான்.

விமானப் படையில் பணியாற்றிய அவனுடைய தந்தை அவனைத் தன்னுடன் வைத்துக் கொள்வதற்குச் சிறப்பு அனுமதி வாங்கி யிருந்தார். இதனால் ரஸ்கின் பள்ளிக்குச் செல்ல முடியாமல் இருந்தது. அதைப்பற்றி அவன் ஏதும் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. அவன் தந்தையிடம் கற்றது பள்ளிக்கூடத்தில் கற்பிக்கப் பட்டதைவிட சிறப்பாக இருந்ததாக அவனுக்குத் தோன்றியது. 'எந்தப் பையனும் விரும்பக்கூடிய, மிகச்சிறந்த அப்பா என்னுடைய அப்பாதான்!" என பெருமையுடன் நினைத்துக் கொண்டான் அவன்.

ஆம், சில சமயங்களில் அவன் தன் தாயின் அருகாமைக்காகவும் அவர் தங்களுடன் இருக்க வேண்டுமென்றும் ஏங்கினான். அவன் சுமார் எட்டு வயது சிறுவனாக இருக்கும்போது, அவர் ரஸ்கினின் தந்தையிமிருந்து விலகிவிட்டிருந்தார். ஆனால் அவன் தந்தை அவனுக்குத் தாயும், தந்தையுமாக இருந்து கவனித்துக் கொண்டார்.

அவன் மைதானத்தைச் சுற்றி நடந்து கொண் டிருந்தபோது, "எங்காவது வெளியில் போகலாமா?" என்று கேட்டபடி அவன் தந்தை கூடாரத்திலிருந்து வெளியே வந்தார்.

ரஸ்கின் மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டான். அவனுக்குத் தன் தந்தையுடன் இம்மாதிரி வெளியில் செல்ல மிகவும் பிடிக்கும். அவர்கள் பேசியபடியே கடைவீதிகளில் நடப்பதும், கடைகளில் வைக்கப்பட் டிருக்கும் பொருட்களைப் பார்ப்பதும், சில சமயங் களில் சினிமா படங்கள் பார்க்கப்போவதுமாக பொழுதுகள் இன்பமாகக் கழியும். அன்று, திரு. பாண்ட் அவனை ஒரு புத்தகக் கடைக்கு அழைத்துச் சென்றார்.

"அப்பா! எனக்கு ஒரு புத்தகம் வாங்கித் தருகிறீர்களா?" என்று அவன் கேட்டான். அவர் முறுவலித்தார்.

"நிச்சயமாக, ரஸ்கின்! ஆனால் இன்று புத்தகத்துடன் உனக்கு வேறொன்றும் வாங்கித் தரப் போகிறேன்." பேசிக்கொண்டே அவர் நோட்டுப் புத்தகம் போன்றிருந்த ஒன்றைக் கையிலெடுத்தார். "இது ஒரு நாட்குறிப்பேடு. தினசரி நடப்பவற்றை நீ குறிப்பெடுத்துக்கொள்ள வேண்டுமென்பது என் விருப்பம். அப்படிச் செய்வதால் நீ அன்றாடம் என்னென்ன செய்தாய், நேரத்தை எப்படி செலவு செய்தாய் என்பது உனக்குத் தெரியவரும். அன்றாட நிகழ்ச்சிகளைப் பற்றி உன் சொந்தக் குறிப்புக்களைக் கூட இதில் நீ எழுதலாம். இது ஒரு குறிப்பேடாக உனக்குப் பயன்படும்" என்று கூறியவாறு அவர் அவனுக்காக இரண்டு நூல்களையும் வாங்கினார். அவற்றில் ஒன்று சார்லஸ் டிக்கன்ஸின் டேவிட் காப்பர் ஃபீல்ட்

அன்று இரவு உணவிற்குப் பிறகு அவன் தன் நாட்குறிப்பேட்டில் முதல் குறிப்பை எழுதினான். அது அன்று அவர்கள் வெளியில் சென்றதைப் பற்றியும் அவன் தந்தை அவனுக்கு வாங்கித் தந்திருந்த நூல்கள் மற்றும் நாட்குறிப்பேட்டையும் பற்றியது. 'நாளை டேவிட் காப்பர் ஃபீல்ட்டைப் படிப்பதுதான் முதல் வேலை!' என்று குண்டு குண்டான கையெழுத்தில் தன் நாட்குறிப்பை எழுதினான். தன் கையெழுத்து தந்தையின் கையெழுத்தைப் போலவே இருந்ததில் அவனுக்கு மாளாத பெருமை!

அவர்கள் வெளியில் சென்று வந்ததற்குச் சிறிது நாட்களுக்குள்ளாகவே அவன் தந்தையின் உடல்நலம் மோசமாகியது. சில காலமாகவே அவர் உடல்நலம் சரியில்லாமல் இருந்தார். ரஸ்கின் கவலைப்பட்ட தோடல்லாமல் பயப்படவும் செய்தான். ஆனால் ரஸ்கினின் வாழ்க்கையில் இதைவிட இன்னும் மோசமான அனுபவம் ஒன்று காத்திருந்தது. கடுமையான காய்ச்சலிலிருந்து மெல்லதேறிக் கொண்டிருந்த அவன் தந்தை, ஒருநாள் அவனை அழைத்தார்.

"ரஸ்கின், நீ சிம்லாவிலிருக்கும் ஒரு அற்புதமான பள்ளிக்குப் படிப்பதற்காகப் போகிறாய்," என்றார் அவர்.

"எனக்கு எங்கும் போக வேண்டாம்!" என்று மறுத்தான் ரஸ்கின். அவன் தந்தை தலையசைத்தார்.

"அது உன் நன்மைக்காகத்தான் மகனே!" என்று



தன் குரலில் இழையோடிய வருத்தத்துடன் மென்மையாகக் கூறினார் அவர்.

போகவே மனமில்லாமல்தான் ரஸ்கின் சில நாட்கள் கழித்து சிம்லாவிலிருக்கும் தன் புதிய பள்ளிக்குச் செல்லக் கிளம்பினான். பள்ளியில் அவன் தந்தையை நினைத்து ஏங்கினான். அவனுக்கு வீட்டு நினைவு வந்து தனிமை மிகவும் வாட்டியது. தன் தந்தையிடமிருந்து வாராவாரம் வரும் கடிதங்களை அவன் ஆவலோடு எதிர்ப்பார்த்திருப்பான். தினமும் அவற்றைப் பெட்டியிலிருந்து எடுத்து ஒவ்வொன்றாக மீண்டும் மீண்டும் படிப்பான். தன் நாட்குறிப்பைத் தினமும் எழுதவும் அவன் மறக்கவில்லை.

ரஸ்கின் பள்ளியில் சேர்ந்த சில நாட்களில் ஒரு இரவு, தங்கும்கூடத்தில் மாணவர்கள் அனைவரும் படுப்பதற்கு ஆயத்தம் செய்துகொண்டிருந்தனர். ரஸ்கின் தன் கட்டிலின்மீது நாட்குறிப்பேட்டைத் திறந்து வைத்துக்கொண்டு அமர்ந்திருந்தான்.

"நம் புதிய நண்பனுக்கு தான் பெரிய மேதாவி என்ற நினைப்பு போலும்!" என்றான் ஸ்காட். அவன் மற்றவர்களைவிட வயதில் மூத்தவன். மேலும் கட்டுமஸ்தான உடலோடு, பார்ப்பவர்கள் பயப்படும் படியான தோற்றம் உடையவன். அவன் வழிக்குச் சாதாரணமாக மாணவர்கள் யாரும் போக மாட்டார்கள். அவன் பேசியதைக் கவனிக்காதது போல் ரஸ்கின் எழுதுவதில் மும்முரமாக இருந்தான்.

'குதிரை மிகவும் விரைப்பாக இருக்கிறது, இல்லை?' என்றவாறே மற்றொரு மாணவனான ராணா, அவனுடைய நாட்குறிப்பேட்டைப் பிடுங்கப் போனான். ரஸ்கின் சாப்பிடும் சாப்பாட்டைப் பார்த்து அவனை மற்றவர்கள் 'குதிரை' என்று அழைத்தனர் போலும்! சாதாரணமாக, யாராவது சண்டைக்கு இழுத்தாலொழிய ரஸ்கின் அமைதி காப்பது வழக்கம்.

"எட்டி நில், இல்லாவிட்டால்..." நாட்குறிப்பேட்டைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு அமைதியான குரலில் ரஸ்கின் கூறினான்.

ஆனால் ஸ்காட்டுக்கோ இது ஒரு சவாலாக இருந்தது. இதனை கவனிக்காமல் விட்டால் மற்ற மாணவர்களின் மத்தியில் அவன் அவமானப்பட

நேரிடும் என்பதை அவன் உணர்ந்தான். அவன் பெரிதாகச் சிரித்தான்.

"ஓகோ! குதிரைக்கு மிரட்டவும் தெரியுமா?" என்றான் அவன். இதைக்கேட்ட ரஸ்கின் உடனே செயல்பட்டான். தன் குறிப்பேட்டை மூடிவிட்டு, கட்டிலைவிட்டு இறங்கி ஸ்காட்டை பலம்கொண்ட மட்டும் வேகமாகப் பிடித்துத் தள்ளினான். இதனை எதிர்ப்பார்த்திராத ஸ்காட் கீழே விழுந்தான். ரஸ்கின் உடனே அவன் மேலேறி உட்கார்ந்து அவனை முட்டியால் குத்தலானான். விரைவிலேயே ஸ்காட் தன்னை விட்டுவிடுமாறு கெஞ்சினான். பார்ப் பதற்குத்தான் அவன் பயில்வான் மாதிரி இருந்தானே தவிர, உண்மையில் ஸ்காட் வலிமையற்றவன். அவனுக்குக் கிடைத்த தண்டனை போதுமென்று ரஸ்கினுக்குத் தோன்றிய போது, எதுவுமே நடக்காதது போல் எழுந்து வந்து, தன் நாட்குறிப்பை விட்ட இடத்திலிருந்து தொடர்ந்து எழுதலானான். இப்பொழுது மற்ற மாணவர்கள் அவனைப் புது மரியாதையுடன் பார்க்கலாயினர்.

அனைவரும் உறங்கியபின், ரஸ்கின் மட்டும் தூக்கம் வராமல் படுத்திருந்தான். அவன் கண்களைக் கண்ணீர் நிறைத்தது. மெல்ல எழுந்து தன் பெட்டியைத் திறந்த அவன் தன் தந்தையின் கடிதங் களையெல்லாம் எடுத்தான். அவற்றை அப்படியே தன் தலையணையின் அடியில் வைத்துக்கொண்டு படுத்தான்.

ரஸ்கினுடன் மற்ற மாணவர்கள் பழக ஆசைப் பட்டனர். எல்லாருடனும் சமமாகப் பழகினாலும், அவனால் யாருடனும் நெருங்கிப் பழக முடிய வில்லை. தன் தனிமை தனக்கே உரியது என்றும் அதனை யாருடனும் பகிர்ந்து கொள்ள முடியாது என்றும் அவன் நினைத்தான். ஆனால் நாட்கள் செல்லச் செல்ல ரஸ்கினுடைய விளையாட்டுக் குணம் வெளிப்படலாயிற்று. அவன் விளையாட்டுப் போட்டிகளில் பங்கெடுத்துக் கொள்ளலானான். கால்பந்தாட்டத்தில் அவன் மிகச்சிறந்த முன்னிலை ஆட்டக்காரனாக விளங்கினான். வகுப்பில் மற்ற மாணவர்களுடன் சேர்ந்து கணக்கு ஆசிரியர் திரு. பென்னட்டைத் தொந்தரவு செய்தான்.

விளையாட்டு புத்தி மிகுந்திருந்தாலும், ரஸ்கின்



ஆங்கிலத்தில் நன்றாக எழுதும் புலமை பெற்றிருந்ததால் அவன் எழுதிய கட்டுரைகள் சிறப்பாக இருந்தன. அவற்றில் பல, வகுப்பில் மற்றவர்களுக்குப் படித்துக் காட்டப்பட்டன. இவ்வளவு இருந்தும் அவன் யாருடனும் அதிகம் பழகாமல் தனிமையையும், தன் புத்தகங்களையுமே நாடினான்.

கிட்டத்தட்ட பதினைந்து நாட்களாக அவனுக்குத் தன் தந்தையிடமிருந்து கடிதமே வந்திருக்க வில்லை. வாரம் ஒருமுறை எழுதும் அவனுடைய தந்தைக்கு இது வழக்கத்திற்கு மாறான விஷயம். ரஸ்கின் அவருடைய உடல்நலத்தைப் பற்றி கவலைப் படலானான். ஒருவேளை அவர் உடல்நலமில்லாமல் இருக்கிறாரோ? அப்படியிருந்தால் அவரை யார் கவனித்துக் கொள்வார்கள்? தனக்கு மிகவும் பிடித்தமான ஒரு மரத்தின் அடியில் அமர்ந்து ஒரு புத்தகத்தைப் படிக்க முயற்சித்துக் கொண்டிருந்த அவனுக்கு அதிலிருந்த ஒரு வரிகூட கண்ணுக்குத் தெரியவில்லை. தூரத்தில் தெரிந்த மலைகளை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த அவனுக்குத் தன் தந்தையிடம் திரும்பிச் சென்று விட மனம் துடித்தது. அச்சமயம் அவனுடைய வகுப்பு ஆசிரியர் ஒருவர் அங்கு வந்தார்.

"என்னுடன் கொஞ்சம் உலாவ வருகிறாயா," என்று அவர் ரஸ்கினைக் கேட்டார்.

'சரி,' என்று கூறிய ரஸ்கின் அரைமனதாகப் புத்தகத்தை மூடினான். திடீரென்று தன் ஆசிரியருக்கு உலாவுவதற்குத் தன் துணை ஏன் தேவைப்படுகிறது என்று, கற்பனையிலிருந்து கலைக்கப்பட்டதற்காக எரிச்சலடைந்த அவன் நினைத்தான்.

அவரோ, ஏதோ ஒரு கவலையில் மூழ்கியிருந்தது போல் காணப்பட்டார். இருவரும் மௌனமாகச் சிறிது தூரம் நடந்தனர். "ரஸ்கின், உன்னிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டும்," அவசரமாகச் சொன்னார் அவர். இதைக்கேட்ட ரஸ்கினுக்குப் பயமாக இருந்தது. "டாடி! அவருக்குத்தான் ஏதோ ஆகிவிட்டது" என்று நினைத்தான் அவன்.

"- உன்னைவிட கடவுளுக்கு உன் தந்தை அதிகம் தேவைப்பட்டதால்..." அவர் ஏற்ற இறக்கமில்லாத குரலில் கூறிக்கொண்டே இருந்தார். ஆனால் ரஸ்கின்

அவர் கூறுவதை முழுதும் கேட்க அங்கு நிற்கவில்லை.

அவனுடைய டாடி இறந்து விட்டார்.. இறந்து விட்டார்.. அவனுக்குக் கடவுளின் மேல் கோபமாக வந்தது. அவருக்குத் தன் தந்தையின் தேவை ஏன் ஏற்பட வேண்டும்? அவருடைய தபால்தலைத் தொகுப்பைத் தவிர கடவுளுக்கு அவரால் என்ன பயன், என்று அச்சிறுவன் நினைத்தான். கடவுளால் இவ்வளவு கொடுமையாக எப்படிச் செயல்பட முடிந்தது? உலகத்தில் அவனுடைய ஒரே நண்பனை அவனிடமிருந்து அவரால் எப்படிப் பிரிக்க முடிந்தது?

அழுதுகொண்டே ரஸ்கின் கண்மண் தெரியாமல் ஓடினான். விடுதிக்குத் திரும்பிய பின் தன் தந்தையின் கடிதங்களை எடுத்து மீண்டும் மீண்டும் படிக்கலானான். அவற்றைத் தொடும்போது, தன் அருமை அப்பாவைத் தொடுவதுபோல் உணர்ந்தான். மற்ற மாணவர்கள் தயங்கியவாறே அவனுக்குத் தம் வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்ட போதும், மாளாத தன் துயரத்தைப் பற்றி யாருடனும் பேசி ஆற்றிக்கொள்ள முடியாமல் தவித்தான்.

வருத்தம் தெரிவித்துக்கொண்ட பையன்களில் ஸ்காட்தான் முதலில் இருந்தான். "ரஸ்கின், உன் தந்தையின் மறைவைப் பற்றி கேட்க எனக்கு மிக்க வருத்தமாக இருக்கிறது," என்றான் அவன். தங்கு கூடத்தில் அவர்களிடையே சண்டை வந்த அன்றிலிருந்து ஸ்காட் ரஸ்கினின் வழிக்கு வருவதில்லை. தவிர ரஸ்கினிடம் அவனுக்கு மதிப்பும் கூடியிருந்தது.

ரஸ்கின் வறண்ட குரலில், "பரவாயில்லை, ஸ்காட் நடக்க வேண்டியது நடந்தே தீரும்," என்று பதிலளித்தான்.

அவனுடைய ஆசிரியர்கள் அவன் பள்ளியின் மருத்துவமனையில் சில நாட்கள் இருந்தால் தன் துயரத்தை மறப்பான் என்று நினைத்து அங்கு அனுப்பி வைத்தனர். ரஸ்கின் தன்னுடன் தன் தந்தையின் கடிதங்களையும்கூட எடுத்துச் சென்றான். அவனைப் பார்க்க அங்கு வந்த தலைமையாசிரியர் திரு. ப்ரீஸ்ட்லி அவனிடம், "ரஸ்கின், கடவுள் எப்பொழுதும் நல்லவர்களைத்தான் எடுத்துச் செல்வார். இனி நீ மனத்தைத் திடப்படுத்திக்கொள்," என்றார். கடவுளின் பெயரைக்கேட்ட ரஸ்கினுக்கு அவர்மேல் மீண்டும் வெறுப்பு ஏற்பட்டது.



அவன் கையிலிருந்த கடிதக் கற்றையைப் பார்த்த அவர், "இவை உன் தந்தையின் கடிதங்களா? நீ இவற்றை ஒரு பத்திரமான இடத்தில் வைக்க வேண்டும். இங்கே கொடு! நான் என்னிடம் வைத்துக் கொள்கிறேன். நீ வீடு திரும்பும்போது என்னிடமிருந்து அவற்றை வாங்கிக் கொண்டு போ," என்று கூறினார். துயரத்தின் எல்லைக்கே போயிருந்த ரஸ்கினுக்கு அவரை மறுத்துப் பேசவும் நா எழவில்லை. மௌனமாக அக்கடிதங்களை அவரிடம் ஒப்படைத்தான்.

அதன்பிறகு அவனுடைய நாட்குறிப்பேடுதான் அவனுடைய ரகசியங்களைப் பகிர்ந்து கொள்ளும் தோழனாக ஆனது. அன்றாடம் நிகழ்ச்சிகளின் தொகுப்பாக ஆரம்பித்த அது, அவனுடைய தந்தை கூறியது போலவே அவனுடைய கருத்துக்களையும், எண்ணங்கயையும் பிரதிபலிக்கும் குறிப்புகளாக உருமாறியது. இந்த ஒரு வேலையைத் தவிர வேறெதிலும் அதிகம் நாட்டமில்லாமல் அவன் விடுமுறைக்கு முன் எஞ்சிய நாட்களைக் கழித்தான்.

விடுமுறையை நினைத்து அவனுக்கு ஆர்வமோ, ஆவலோ இருக்கவில்லை. ஆயினும் அவன் வீட்டிற்குப் போகத்தான் வேண்டியிருந்தது. தலைமையாசிரியரிடம் ஒப்படைத்திருந்த தன் தந்தையின் கடிதங்களை அவன் மறக்கவேயில்லை. பள்ளியின் கடைசி நாளன்று அவன் அவற்றைத் திரும்பப்பெற அவருடைய அறைக்குச் சென்றான்.

"சார், நான் என் கடிதங்களைத் திரும்பப் பெறுவதற்காக வந்திருக்கிறேன்," என்று கூறினான் ரஸ்கின். அவன் சொன்னவற்றை இருமுறை கூறிய பிறகுதான் அவர் தான் பார்த்துக் கொண்டிருந்த காகிதங்களிலிருந்து தலையை உயர்த்தினார்.

"கடிதங்களா? என்ன கடிதங்கள்? என்னிடம் உன் கடிதங்கள் ஏதுமில்லை!" என்று கூறியவாறே அவர் தன் வேலையில் ஆழ்ந்து போனார். ரஸ்கினுக்கு பெருத்த அதிர்ச்சி!

"சார், அவை நான் என் தந்தையின்- மறைவிற்கு- பிறகு மருத்தவமனையில் இருந்தபோது நீங்கள் என்னிடமிருந்து எடுத்துக் கொண்டவை." ரஸ்கின் வாயிலிருந்து வார்த்தைகள் மிகவும் கஷ்டத்துடன்

வெளி வந்தன. ஆனால் தலைமையாசிரியரோ அவன் பேசுவதைக் கவனித்ததாகத் தெரியவில்லை.

"சார்!" ரஸ்கின் பொறுமையாக மீண்டுமொரு முறை தொடங்கினான்.

"இதோ பார், நான் இப்போது வேலையாக இருக்கிறேன். நீ போகலாம்," என்று கடுமையாகக் கூறிவிட்டார் அவர்.

ரஸ்கின் மெல்ல அறையைவிட்டு வெளியே வந்தான். அப்பொழுது அவன் அவரை வெறுத்தது போல் தன் வாழ்க்கையிலேயே யாரையும் வெறுத்த தில்லை. தன் தந்தையுடன் தனக்கிருந்த ஒரே இணைப்பு துண்டிக்கப்பட்டு விட்டதாக அவன் நினைத்தான்.

முற்றிலும் இடிந்து போனவனாய் அவன் அங்கிருந்து ஓடலானான். காலில் தட்டுப்பட்ட கற்களை ஒருவித வெறியுடன் உதைத்தவாறு இலக் கில்லாமல் ஓடினான். ஆனால் அவனுக்குத் தன் இழப்பை நினைத்து வருந்தவும் நேரமில்லை. வீட்டிற்குக் கிளம்ப வேண்டிய நேரம் நெருங்கியது— தன் தாயும் மாற்றாம் தந்தையும் இருக்கும் வீட்டிற்கு— அவனுடைய தந்தை இல்லாத வீட்டிற்குப் போக வேண்டும்.

அவர்கள் வசித்து வந்த ஊரான டேராடூனில் அவனுடைய மாற்றாம் தந்தை திரு. ஹரி அவனை அறவே கண்டுகொள்ளவில்லை. யாராலும் வேண்டப் படாதவனாய், தனியாய் அவன் ஊருக்கு வெளியே நீண்ட தூரம் நடக்கலானான். இயற்கையின் வனப்பும், செழுமையும் அவனை அரவணைத்ததுபோல் உணர்ந்தான் அவன். அங்குள்ள வண்ணான் துறையைக் கடக்கும்போது அங்கு விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்களோடு அவனும் சேர்ந்து விளையாடினான். அம்மாதிரி நேரங்களில்தான் ரஸ்கின் சிறிதேனும் மகிழ்ச்சியை அனுபவித்தான்.

இந்த இடைப்பட்ட காலத்தில் எழுத்து அவனுக்கு ஒரு நிரந்தரமான பொழுதுபோக்காக மாறியிருந்தது. தன் தனிமை உலாக்களில் தான் பார்த்த வற்றையும், அனுபவித்தவற்றையும் எழுத்தில் வடிக்கத் துவங்கினான். பறவைகள், ஆகாயம், மரங்கள் அனைத்தும் அவன் கவிதைகளில் இடம் பெற்றன. நாட்குறிப்பு எழுதுவதையும் அவன் நிறுத்தவில்லை.



தன் தந்தையின் கவிதைத் தொகுப்பை அவன் கண்டெடுத்திருந்தான். அவர் அவனுக்கு வாங்கித் தந்திருந்த டேவிட் காப்பர் ஃபீல்டை அவன் தன் கையிலெடுத்தான். அதன் கதாநாயகனான டேவிட்டின் வாழ்க்கையில் தன் வாழ்க்கையின் எதிரொலியைக் கேட்டான் ரஸ்கின். அதைக் கையில் வைத்துக் கொண்ட ரஸ்கினின் கண்கள் தொலைவில் வெறித்தன. 'எழுத்துதான் என் வாழ்க்கையாக இருக்கப் போகிறது', என்று அவன் மௌனமாகக் கூறிக் கொண்டான்.

பள்ளிக்குத் திரும்பிய ரஸ்கின் மும்முரமாக எழுதத் துவங்கினான். நாட்குறிப்பேட்டில் தன் ஆசிரியர்களைப் பற்றி நகைச்சுவையான நிகழ்ச்சிகளைக் கதை வடிவத்தில் எழுதினான். அவனுடைய நகைச்சுவை நடையும், சொல்வன்மையும் அவர்களை அப்படியே படம்பிடித்துக் காட்டின. ஒருநாள்



படிப்பறையில் ரஸ்கின் மும்முரமாக எழுதிக் கொண்டிருந்தபோது தன்னருகில் யாரோ நிற்பதை உணர்ந்தான். சட்டென்று தன் நாட்குறிப்பேட்டை மூடிவிட்டு மேலே பார்த்தவனின் கண்களுக்கு கடுமையான முகத்தையுடைய அவர்களுடைய விடுதி



ஆசிரியரான திரு. வில்சன் தென்பட்டார். அன்றைய அவன் குறிப்புக்கள் அவரைப் பற்றியவை!

ஒன்றும் பேசாமல் அவர் வகுப்பின் முன்பக்கம் போனார். "ரஸ்கின்! இங்குவா. வரும்போது உன் நோட்டுப் புத்தகத்தையும் எடுத்துவா!" என்றார். என்ன நடக்கப் போகிறதோ என்ற பயத்தில் ரஸ்கின் அவர் கூறியபடியே செய்தான். அவர் அந்நோட்டுப் புத்தகத்தை வாங்கி, வகுப்பின் முன்னிலையில் பக்கம் பக்கமாகக் கிழித்தார். ரஸ்கின் ஏதும் செய்ய முடியாமல் பார்த்துக் கொண்டிருந்தானே தவிர, அவரிடம் அதை திருப்பித்தரும்படி கெஞ்சவோ, வேண்டவோ இல்லை. மாறாக, இந்நிகழ்ச்சி அவனை எழுதுவதற்கு இன்னும் அதிக உறுதிபடச் செய்தது.

1947ஆம் ஆண்டு நாட்டில் கலவரம் தலை விரித்தாடிக் கொண்டிருந்த நேரம் அது. பிரிவினையின் எதிரொலி சிம்லாவில் பிஷப் காட்டன் பள்ளியிலும் கேட்டது. ஒரு நாள் ரஸ்கின் தோட்டத்தில் ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தபோது அவனுடைய நண்பன் அசார் கான் அவனருகில் வந்தமர்ந்தான். ''ரஸ்கின் நாங்கள் இங்கிருந்து போகிறோம்,'' என்ற அவன் கண்களில் நீர் நிறைந்திருந்தது. ரஸ்கின் சட்டென்று தலையுயர்த்தி அவனைப் பார்த்தான். "ஹனீஃப் மற்றும் ஓமரும் கூடப் போகிறார்கள் என நினைக்கிறேன். நாங்கள் பாகிஸ்தானில் ஒரு புதிய பள்ளிக்குச் செல்வோம்." அவன் இதைச் சொல்வதற்குள் வாய்விட்டு அழத் தொடங்கிவிட்டான்.

ரஸ்கினுக்குப் பழகிய மனிதர்களையும், சூழல் களையும்விட்டு பிரிவதன் துயரம் நன்றாகவே தெரியுமாதலால், அவனுக்குள் ஒரு இனம்புரியாத கோபம் எழுந்தது. நண்பன் அருகில் அமர்ந்து அவனைச் சமாதானப்படுத்த முயன்ற அவன், உள்ளுக்குள் தானும் அழுது கொண்டிருந்தான். அசார்தான் அப்பள்ளியில் அவனுடைய மிக நெருங்கிய தோழனாக இருந்தான். 'நான் நேசிப்பவர்களெல்லாம் என்னை விட்டுப் பிரிந்துபோய் விடுகிறார்கள்,' என்று அவன் தனக்குத்தானே வருத்தத்துடன் கூறிக் கொண்டான்.

அவனுக்குள்ளிருந்த துயரம் அவன் எழுத்தில் பிரதிபலிக்கவில்லை. அவை நகைச்சுவை உணர்வு மிகுந்திருந்தன. இவ்வாறு எழுதும் கணங்கள் ஒன்றில்தான் அவன் தன் முதல் படைப்பான "ஒன்பது மாதங்கள்" என்ற சிறுகதையை எழுதினான். அது அவன் ஆசிரியர் ஒருவரைப் பற்றியது. ரஸ்கின் நேரம் கிடைத்த போதெல்லாம் எழுதும் பழக்கம் உடையவன் என்பதால், தான் எழுதியதை ஒரு நோட்டுப் புத்தகத் திற்குள் அவசரமாக வைத்து மூடியிருந்தான். துரதிருஷ்டவசமாக அந்நோட்டுப் புத்தகத்தைத் திருத்துவதற்காக ஆசிரியரிடம் கொடுத்தபோது கதையை வெளியில் எடுக்க மறந்துவிட்டான்.

கையில் சிக்கிய அதை ஆசிரியர் சுக்கு நூறாகக் கிழித்தெறிந்தார். இது ரஸ்கினுக்குப் பழகிப்போன விஷயமாகி விட்டிருந்ததால் சலனமில்லாமல் தன் படைப்பு குப்பைக்கூடையில் அடைக்கலமானதை அவன் பார்த்துக் கொண்டிருந்தான்.

ரஸ்கின் தான் எழுதியவற்றை பத்திரிகைகளுக்கு அனுப்பத் தொடங்கியிருந்தான். அவன் பள்ளியில் இருந்தபோதே, 'இல்லஸ்ட்ரேட்டட் வீக்லி' எனும் ஆங்கிலப் பத்திரிகையில்தான் அவன் எழுதிய கதை முதல் முதலாகப் பிரசுரிக்கப்பட்டது. சென்னை யிலிருந்து பிரசுரிக்கப்பட்டு வந்த 'மை மேகசின் ஆஃப் இண்டியா' அவனுடைய கதைகளை தொடர்ந்து பிரசுரித்து வந்தது. அதில் துப்பறியும் கதைகளும், மர்மக் கதைகளும் எழுதி ஒவ்வொன்றுக்கும் சன்மான மாக ஐந்து ரூபாய் பெற்றான்.

இதனிடையில் அவன் 'என் தொழில்' என்ற நகைச்சுவை மிக்க கதையொன்றை எழுதினான். இது அவர்கள் கணக்காசிரியர் திரு. பென்னட்டைப் பற்றியது. மாணவர்களை ஒழுங்குபடுத்துவதற்காக அவர் பட்ட பாட்டைப் பற்றியதுதான் அக்கதை. வழக்கம்போல் ரஸ்கின் தான் எழுதியதை மறதியாக எங்கோ வைத்துவிட, அது அவர் கையிலேயே சிக்கிவிட்டது. இம்முறை அவர் அவனைப் பற்றி தலைமையாசிரியரிடம் புகார் செய்துவிட்டார்.

"இம்மாதிரி நடவடிக்கைகளில் ஈடுபடுவதைப் பற்றி நீ எச்சரிக்கப்படுகிறாய்," என்று அவர் கடுமை யாகக் கூறினார். அவர் கூறியபடி செய்யும் எண்ணம் துளியும் இல்லாவிட்டாலும், ரஸ்கின் தலையாட்டி



அதை ஒப்புக்கொண்டான். ஆனால் அவன் தொடர்ந்து பல கதைகளை எழுதினான். இதனால் ஒழுங்கு நடவடிக்கையாக அவன் பள்ளியிறுதிச் சான்றிதழ் அவனுக்கு வழங்கப் படவில்லை.

இதைப்பற்றி ரஸ்கின் அதிகக் கவலைப் படவில்லை. படைப்பிலக்கியத்தை தன் தொழிலாக இனம் கண்டுகொண்டு விட்டவருக்கு வெறும் பள்ளிச் சான்றிதழ் இல்லா விட்டால்தான் என்ன?

# எழுத்து இவருடைய உலகம்

ரஸ்கின் பாண்ட், 1934ஆம் ஆண்டு மே மாதம் 19ஆம் தேதி ஹிமாசல பிரதேசத்திலுள்ள கஸௌளலியில் பிறந்தார். உத்திரப் பிரதேசத்தின் மலைச்சாரல்களைத் தன் இருப்பிடமாகக் கொண்டு மசூரியில் வசிக்கும் திரு. பாண்ட், ஒரு முழுமையான இந்தியர். அவர் குழந்தைகளுக்காக கவிதைகள், நாவல்கள் மற்றும் சிறுகதைகள் உள்ளிட்ட 30 புத்தகங்கள் எழுதியுள்ளார். திரு. பாண்ட் இளம் வயதினர் உட்பட எல்லா வயது சிறுவர்களுக்கும் கதைகளும் கவிதைகளும் எழுதியிருக்கிறார். தன் எழுத்தின் வழியே இளம் தலைமுறையினரின் மனதில் சுற்றுச்சூழல் பற்றிய சிந்தனையை வளர்க்கப் பாடுபடுபவர். அவருடைய எழுத்து பெரும்பாலும் சுயசரிதையைத் தழுவியதாக இருந்தாலும் படிப்பவர்கள் மனதில் ஒரு பரிவை ஏற்படுத்தவல்லது. அவருடைய கதாபாத்திரங்கள் பெரும்பாலும் அவர் வாழும் மலைப்பகுதியில் வசிக்கும் அவருடைய நண்பர்களான எளிய மக்களாகும்.

அவருடைய நூல்கள் பல, இந்திய மற்றும் ஐரோப்பிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. தன்னுடைய பதினேழாவது வயதில் அவர் எழுதிய அவருடைய முதல் புத்தகமான 'ரூம் ஆன் த ரூஃப்,' அவருக்கு 1957ஆம் ஆண்டுக்கான ஜான் ரைஸ் நினைவுப் பரிசைப் பெற்றுத் தந்தது. 1987ஆம் ஆண்டு அவர் இந்தியன் கௌன்சில் ஃபார் சைல்ட் எஜுகேஷன் பரிசு மற்றும் 1992ஆம் ஆண்டு சாகித்ய அகாதமி வழங்கும் சிறந்த இந்திய இலக்கியத்திற்கான பரிசையும் பெற்றார்.



# பசுமைத் தந்தை

சுவாமிநாதன் அன்று மிக்க மகிழ்ச்சியுடனிருந்தான் அவன் வசித்துவந்த ஊரான கும்பகோணத்தில் ஒரு பெரிய கொசு ஒழிப்பு இயக்கம் நடக்கவிருந்தது. அவனுடைய பள்ளியும் அந்த இயக்கத்தில் பங்குபெற இருந்தது. அந்நாட்களில் கும்பகோணம், கொசுக் களுக்கு பெயர்போன ஊராக இருந்தது.

சுவாமிநாதன் தன் தந்தையிடம் சென்றான், "அப்பா, இத்தனை பெரிய ஊரிலுள்ள கொசுக்களை ஒழித்துக்கட்டுவது மிகவும் கடினமாயிற்றே? இத்தனை பெரிய வேலையை எப்படி செய்யப்போகிறோம்?" என்று கேட்டான்.

அவன் தந்தை டாக்டர் சாம்பசிவன் அவன் கவலையைக் கண்டு சிரித்தார். "நீ வேண்டுமானால் பார், அம்பி. இவ்வியக்கம் நிச்சயம் வெற்றி பெறும். நாம் ஒருவராக ஏதும் செய்யப்போவதில்லை. மக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்தால் எவ்வளவு பெரிய வேலையும் எளிதாகிவிடும். இவ்வியக்கத்தில் மக்கள் பெருந்திரளாகப் பங்குகொள்ளப் போகிறார்கள். மக்கள் திறன் எவ்வளவு வலிமை வாய்ந்தது என்பதை இன்று நீ கண்கூடாகக் காணப்போகிறாய்," என்றார்.

அவர் கும்பகோணத்தின் புகழ்வாய்ந்த அறுவை சிகிச்சை நிபுணர். சமீபத்தில்தான் அவர் நகராட்சித்

தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். சமூக ஈடுபாடுள்ள ஒரு சிறந்த குடிமகனான அவர், தான் நகராட்சித் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டால் கொசுக்களை ஒழிக்க நடவடிக்கை எடுப்பதாக வாக்களித்திருந்தார். இப்பொழுது அந்த வாக்கைத் தான் அவர் செயல்படுத்திக் கொண்டிருந்தார்.

கொசுக்கள் அதிகமாக இருக்கும் பகுதிகளைக் கண்டுபிடிக்க அவர் அவ்வூர்ப் பள்ளிகளின் உதவியை நாடியிருந்தார். தேவையான கொசு ஒழிப்பு மருந்து களை நகராட்சி வினியோகிக்க இருந்தது. கொசு ஒழிப்பு வேலையில் மக்கள் உதவுவதாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

"கொசுக்களால் மக்களுக்கு அவ்வளவு தீமையா?" சுவாமிநாதன் தந்தையிடம் கேட்டான்.

"அதோ, அந்த மனிதனைப் பார்த்தாயா? அவனுடைய கால்கள் எவ்வளவு வீங்கி இருக்கின்றன? அது கொசுக்கடியினால் ஏற்படும் யானைக்கால் நோய். கும்பகோணத்திற்கு யானைக்கால் நோயின் தலைநகரம் என்று பெயர். அந்த அவப்பெயரை அகற்றுவதற்கு நாம் முயற்சி செய்ய வேண்டாமா," அவர், சுவாமிநாதனைக் கேட்டார்.

"நிச்சயமாக முயற்சிக்க வேண்டும் அப்பா" என்று பதிலளித்தான் அவன்.

கொசு ஒழிப்பு இயக்கம் அவன் மனதைத் திரும்பவும் ஆக்கிரமித்தது. "அப்பா, எங்கள் பள்ளிக்கூடம் இந்த இயக்கத்தில் பங்குகொள்ள விருக்கிறது. எங்கள் ஆசிரியர் கொசுக்கள் அதிகமாகப் புழங்கும் இடங்களைக் கண்டறிவதற்காக எங்களை நேற்று அழைத்துச் சென்றிருந்தார். அப்பொழுது அவற்றின் உயிர்ச் சுழற்சி பற்றியும் விளக்கினார். நாங்கள் கொசுக்களின் முட்டைகளைக்கூட பார்த் தோமே!" ஆச்சரியத்தில் கண்கள் விரிய, சுவாமிநாதன் தன் தந்தையிடம் கூறினான்.

கொசு ஒழிப்பு தினத்தன்று ஊரே திரண்டு வந்துவிட்டது போலிருந்தது. ஆண்கள், பெண்கள் மற்றும் குழந்தைகள் தமக்குள் குழுக்கள் அமைத்துக் கொண்டு, ஆங்காங்கே தேங்கி நிற்கும் அழுக்கு நீர்க்குட்டைகளை மண்ணிட்டு நிரப்பியும், குப்பைத் தொட்டிகளைச் சுத்தம் செய்தும், சுறுசுறுப்பாக இயங்கினர். நகராட்சியால் வினியோகிக்கப்பட்ட



மருந்துகள், கொசுக்கள் அதிகமாகப் புழங்கும் திறந்த சாக்கடைகள் மற்றும் கழிவுக் குழய்களில் தெளிக்கப்பட்டது.

மாலை வெகுநேரம் கழித்து சுவாமி நாதன் சோர்ந்துபோய் வீடு திரும்பினான். அவன் உடலெல்லாம் தெருப்புழுதி படிந்து அழுக்காக இருந்தான். "எங்கள் வட்டாரம் தான் இன்று எல்லாவற்றிலும் சுத்தமானதாக இருந்திருக்கும்!'' தன் அண்ணன் தம்பிகளிடம் சுவாமிநாதன் பெருமையாகக் கூறினான்.

கொசு ஒழிப்பு இயக்கம், சுத்தமான தெரு எது என்ற போட்டியை ஏற்படுத்தி விட்டிருந்தது. இப் போட்டியினால் வந்த விளைவு, கும்பகோணம் முழுதும் தூய்மையாகப் பளிச்சிட்டது. குப்பை கூளங்கள் அனைத்தும் சேகரிக்கப்பட்டு ஊருக்கு வெளியே குப்பைமேடுகளுக்கு எடுத்துச் செல்லப் பட்டது. அவ்வூர் என்றுமே அவ்வளவு துப்புர வாகவோ, நறுமணத்தோடோ இருந்ததே இல்லை. தம் தந்தையின் சமூகத் தொண்டு சுவாமிநாதனிடமும் அவன் சகோதர சகோதரிகளின் மனதிலும் ஆழமாகப் பதிந்ததோடல்லாமல் அவரைப் பற்றிய பெருமையை யும் மனதில் தோற்றுவித்தது.

தன் தந்தை கூறிய மக்கள் திறனின் வலிமையை சுவாமிநாதன் அன்று கண்கூடாகக் கண்டான். மக்கள் முழுமூச்சுடன் பங்குகொள்ளும் எந்த முயற்சியும் வெற்றி பெற்றே தீருமென்ற நம்பிக்கை அவனுக்கு அன்றுதான் ஏற்பட்டது. இப்பாடம் அவன் மனதில் அழியாத சிற்பமாய் தீட்டப்பட்டு விட்டது.

ஆண்டுதோறும் சுவாமிநாதனும் அவன் சகோ தரர்களும் கேரளத்திலிருந்த அவர்களுடைய சொந்த ஊரான மொங்கொம்புக்குச் செல்வது வழக்கம். அவர் களுடைய் குடும்பத்திற்கு சொந்தமான காபி, தேங்காய் மற்றும் ரப்பர் தோட்டங்களும், நெல் வயல்களும் அங்கு இருந்தன. சித்தப்பாக்களும் பெரியப்பாக்களும், அத்தைகளும், குழந்தைகளும் நிரம்பிய மொங்கொம்பு வீடு திருவிழாக்கோலம் பூண்டிருக்கும். சுவாமி நாதனுக்கு அங்கு செல்வதற்கு மிகவும் பிடிக்கும்.

அங்கு குழந்தைகள் செய்யக்கூடிய விஷயங்கள் ஏராளம். விளையாடுவது தவிர, அங்கிருந்த மரங்களில் ஏறுவது, இராமாயணம், மகாபாரதம் போனற

நாடகங்களை எழுதி நடிப்பது போன்ற பல்வேறு பொழுதுபோக்குகளில் சிறுவர் சிறுமியர் அனைவரும் ஈடுபட்டனர். குழந்தைகளிடையே அவ்வப்போது சிறு சண்டைகள் வந்தாலும், அவர்கள் ஒற்றுமையாகவும் அன்புடனும் விளையாடினர். உறவினர்களும், தாத்தா, பாட்டியும் அவர்கள் மேல் அன்பைப் பொழிந்தனர். சிறுவர்களுக்கு இதைவிட வேறென்ன வேண்டும்?

சுவாமிநாதனுக்கு மொங்கொம்பு இன்னொரு காரணத்துக்காகவும் பிடிக்கும். அதுதான் மலைச் சாரல்களில் படிக்கட்டு போல அமைந்த காபித் தோட்டங்கள். தன் சித்தப்பாவுடன் வயல்களுக்கும் காபித் தோட்டங்களுக்கும் சென்று அங்கு நடக்கும் பயிர் சாகுபடி வேலைகளைக் கவனிப்பதில் அவனுக்கு மட்டற்ற மகிழ்ச்சி. அதேபோல் நீர் நிரம்பிய நெல்வயல்களும், அவற்றில் அதிவிரைவாக நாற்றுக்களை நடும் வேலையில் ஈடுபட்டிருக்கும் பெண்களைக் கவனிக்கவும் பிடிக்கும். ஒரே சீராக இயங்கும் அவர்களுடைய கைகளின் அசைவு அவனுக்குப் பார்க்க பார்க்க அலுக்காத காட்சி. நேர்க்கோடுகளில் நடப்படும் நாற்றுக்கள் அவனுக்கு வியப்பளிக்கும். அவர்கள் நாற்றுநடும் லாவகம் அவனுக்கு மிகவும் எளிதாக இருப்பதுபோல் தோன்றும்.

"சித்தப்பா, நானும் கொஞ்சம் நாற்று நடவா?" என்று கெஞ்சிய சுவாமிநாதனை அவர் சிரித்தவாறே அனுமதித்தார்.

"பார்ப்பதற்கு எளிதாகத் தோன்றும் இவ்வேலை உண்மையில் முதுகை உடைக்கும் வேலையாக்கும்," என்று எச்சரித்த அவருடைய சொல்லைக் கேட்ட பத்து வயதுச் சிறுவனான சுவாமிநாதன் சிரித்தவாறே உற்சாகத்துடன் நாற்றுக்களை நடத் தொடங்கினான். ஆனால் சில நிமிடங்களிலேயே அவன் முதுகு வலிக்கத் தொடங்கியது. நாற்றுநடும் பெண்களின் சிரிப்பலைகளுக்கிடையே அவன் வயலைவிட்டு வெளியே வந்தான். அவர்களுடைய அசைவுகளில் துளிக்கூட மாற்றமில்லை.

"இடைவிடாமல் ஒரே சீராக உங்களால் எவ்வாறு வேலை செய்ய முடிகிறது?" என்று அவன் அவர்களை வியந்து பாராட்டினான்.

"அவ்வாறு வேலை செய்தால்தான் எங்களுக்குக்



கூலி கிடைக்கும். நாங்கள் செய்யும் வேலையைப் பொறுத்துதான் கூலி நிச்சயிக்கப்படும்," என்று ஒரு வயதான பெண் கூறினார்

"சித்தப்பா, நாற்றுக்களை நட, வேறு எளிதான

வழி ஏதுமில்லையா? இதற்கு இயந்திரம் ஏதும் பயன்படுத்த முடியாதா?" என்று அவன் கேட்டான்.

"கிடையாது, அம்பி! எல்லா வேலைகளுக்கும் இயந்திரங்கள் வந்துவிட்டால் இவர்கள் பிழைப்பு என்னவாகும்? நம் நாட்டில் மக்கள் தொகை மிக அதிகமானதால், அவர்களுக்கு வேலையிருந்தால்தான் சம்பாதித்து சாப்பிட வழி கிடைக்கும்," என்று விளக்கினார்.

இது சுவாமிநாதனைச் சிந்திக்க வைத்தது. முதல் பார்வைக்குத் தோன்றியதுபோல் நாற்று நடுவது அவ்வளவு எளிதானதாக இல்லையென்று அவன் நினைத்துக் கொண்டான்! அதன் பின்னால் இவ்வளவு விஷயங்கள் ஒளிந்திருக்கின்றனவா என்று ஆச்சரியப்பட்டான்.

ஒருநாள் தன் ஒன்றுவிட்ட சகோதரர்களுடன் ஓடிவிளையாடிக் கொண்டிருந்தபோது தன் சித்தப்பா சில முக்கியமான நபர்களுடன் விவசாயம் பற்றி பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டான். அவன் மற்றவர்களுடன் ஓட முற்பட்டபொழுது அவன் செவிக்கு எட்டிய பேச்சு அவனை அங்கேயே நிற்க வைத்தது. சில செடிகள் இறந்ததைப் பற்றி அவர்கள் பேசிக் கொண்டிருந்தனர்.

"நாம் புதிதாக இறக்குமதி செய்த விதை வகை நன்றாக இல்லை. நாற்றுக்களெல்லாம் வாடிவிட்டன," என்று அவன் சித்தப்பா கூறினார். அதனைத் தொடர்ந்த நீண்ட உரையாடல் அவனுக்குப் புரிய வில்லை. ஆனால் அவர் கூறிய வாடிய நாற்றுக்கள் அவன் மனதைவிட்டு அகலவில்லை. "நாற்று எவ்வாறு வாடும்?" பச்சைப் பசேலென்ற நெல் வயல்கள் அவன் கண்முன் வந்து போயின. பலவாறு சிந்தித்த அச்சிறுவனுக்குக் கடைசியில் காரணம் புரிந்தது!

"பாவம் அவற்றுக்குத் தம் தாய்நாட்டின் நினைவு வந்திருக்கக் கூடும். புதிய மண்ணில் தழைக்க முடியாமல் அவை வாடியிருக்கக் கூடும்," என்று நினைத்த சுவாமிநாதனுக்கு அவற்றின்பால் இரக்கம் தோன்றியது. தன் அம்மா வெளியூர் சென்றால் அவனுக்கு தாயின் நினைவு வருவதில்லையா? அது போல்தான் வெளிநாட்டு நாற்றுக்களும் தம் தாய் மண்ணை நினைத்து வாடின என்று அவன் முடிவு செய்தான். வாடிய பயிரின் படம் அவன் மனத்



திரையை விட்டு வெகு காலம் அகல மறுத்தது.

கும்பகோணம் திரும்பிய பிறகு சுவாமிநாதன் செய்தித்தாள்கள் படிப்பதில் ஆர்வம் காட்டத் தொடங்கினான். அவை ஐரோப்பாவில் அச்சமயம் நடந்து கொண் டிருந்த இரண்டாவது உலகப் போரைப் பற்றிய செய்திகளால் நிரம்பியிருந்தன. அவற்றைப் படித்த சுவாமி நாதனுக்கு தன் தாய் தனக்கும் தன் சகோதரர்களுக்கும் கூறியிருந்த இராமாயணம், மகாபாரதப் போர்களைப் போலவே விறுவிறுப்பு நிறைந்தவையாகத் தோன்றின. போர் களில் உபயோகப்படுத்தப்பட்ட ஆயுதங்கள் மட்டுமே வித்தியாசப்பட்டதாக அவன் நினைத்தான்.

அர்ஜுனனும், பீமனும் வில்-அம்புகள், வேல் மற்றும் கத்திகளையும் உபயோகித்தார்கள் என்றால், இக்கால போர்வீரர்கள் துப்பாக்கி, ராக்கெட், நீர்மூழ்கிக் கப்பல் மற்றும் பீரங்கிகளின் உதவியுடன் போரிட்டனர்.

ஆனால் போரில் இறந்தவர்களைப் பற்றிய செய்திகள் அவனைப் பெரிதும் பாதித்தன. இந்தப் போர் நிச்சயமாகப் பழங்கதை இல்லை! கதையில் கௌரவர்கள் மடிவதைக் கேட்டுக் குதூகலமடைவது வேறு; உண்மையில் மனிதர்கள் ஆப்பிரிக்காவிலும் ஐரோப்பாவிலும் தினசரி மடியும் செய்திகளைப் படிப்பது வேறு, என்பதை சுவாமிநாதன் அப்பொழுது தான் உணர்ந்தான்.

1940ஆம் ஆண்டு, தன் பதினைந்தாவது வயதில் மெட்ரிகுலேஷன் தேர்வில் வெற்றி பெற்றான். அதன் பிறகு அவன் திருவாங்கூரில் அறிவியலில் இளங்கலை படிப்பதென்று முடிவு செய்யப்பட்டது. அந்நான்கு வருடங்களும் அவன் வாழ்க்கையின் திருப்புமுனை யாக அமைந்தன.

ஐரோப்பாவில் தொடங்கிய மகாயுத்தம் காட்டுத் தீயைப்போல் உலகமெங்கும் பரவலாயிற்று. சுவாமி நாதன் அந்நாட்களில் பிரபலமாக இருந்த ஹிந்து நாளிதழில் மூழ்கிக் கிடந்தான். செய்திகள் மட்டு மல்லாமல், பலதுறைகளில் பிரபலமாக இருந்தவர் களால் எழுதப்பட்ட தலையங்கம் மற்றும் கட்டுரை களையும் ஒரு வரி விடாமல் படித்தான். இதனைத்

தொடர்ந்து, கல்லூரி மாணவர்களிடையே பல விஷயங்களைப் பற்றியும் சூடான விவாதங்கள் எழுந்தன. இவற்றுள் பெரும்பான்மையானவை நாட்டின் நிலைமை பற்றியவைதான். சுதந்திரப் போராட்டம் உச்சக்கட்டத்தில் இருந்த நேரம் அது. அப்பொழுது மாணவர்களின் அபிமானத் தலைவர் சுபாஷ் சந்திர போஸ்தான்.

கல்லூரியின் மாணவர் சங்கம் மிகவும் வலிமையானதாக இருந்ததால் அதன் தலைமையில் ஆங்கிலேயர்களின் சர்வாதிகாரப் போக்கை எதிர்த்து போராட்டமொன்று ஏற்பாடு செய்யப்பட்டது. "நாம் உடல் பலத்தால் மட்டுமே ஆங்கிலேயரை விரட்ட முடியும்," என்று முழங்கினார் ஒரு மாணவர் தலைவர். பலத்த கரகோஷம் அவர் உரையை வரவேற்றது. 'வெள்ளையனே வெளியேறு' போராட்டம் நாடெங்கும் நடந்துகொண்டிருந்த நேரமாதலால் மேடைப் பேச்சுக்கள் புரட்சிகரமாகவும் கனல்பொறி பறப்பவையாகவும் இருந்தன. அதேநேரம் இந்தியா மற்றுமொரு பேராபத்தில் சிக்கித் தவித்துக் கொண்டிருந்தது. வங்காளத்தில் தலைவிரித்தாடிக் கொண்டிருந்த பஞ்சம், ஆயிரமாயிரம் உயிர்களைப் பலி வாங்கிக் கொண்டிருந்தது.

ஒருநாள் கல்லூரியின் வளாகத்தில் சுவாமிநாதன் மாணவர் தலைவரான ஜார்ஜ் குரியனைச் சந்தித்தார். "நாளை மாலை அவையரங்கில் இந்தியப் பொருளாதாரத்தில் உலகப்போரின் விளைவுகள் என்ற தலைப்பில் ஒரு பட்டிமன்றம் நடைபெறவிருக்கிறது. நீ கட்டாயம் வரவேண்டும்," என்றார் அவர்.

சுவாமிநாதனுக்குக் கரும்பு தின்னக் கூலியா தேவை? அவனுக்கு பட்டிமன்றங்கள் என்றால் மிகவும் விருப்பம். வாதங்களும், பிரதிவாதங்களும் மிகவும் சுவையாகவும், சிந்திக்கும் திறனைத் தூண்டுவதாகவும் இருக்கும். அவனுக்குச் சிந்திப்பதற்குப் புதிய கோணங்களும், பரிணாமங்களும் இவற்றிலிருந்து கிடைத்தன.

வழக்கமாக பார்வையாளராகப் போகும் சுவாமிநாதன் இம்முறை தானும் பட்டிமன்றத்தில் கலந்து கொள்ள முடிவு செய்தான். உலகப்போர் இந்தியாவின் உணவு தானிய உற்பத்தியை எவ்வாறு பாதித்துள்ளது என்பதைப்பற்றி பேசவிருந்தான்.



வங்காளத்தில் ஏற்பட்ட பஞ்சம் இந்த பாதிப்பை இரட்டிப்பாக்கியது.

அவன் பேச முடிவு செய்ததற்கு வேறொரு காரணமும் இருந்தது. அன்று காலை மனதை உலுக்கும் செய்தியொன்றை ஹிந்து பத்திரிக்கையில் படித்திருந்தான்.

க்ரேட் ஈஸ்டர்ன் ஹோட்டலின் பிரம் மாண்டமான கதவுகளுக்கப்பால் ஆயிரக் கணக்கில் மக்கள் பஞ்சத்தின் கொடுமையால் இறந்து கொண்டிருக்கும் வேளையில், ஹோட்டலினுள்ளே ஒரு சில செல்வச் சீமான்கள் விலையுயர்ந்த உணவுப் பதார்த்தங்களும், குடியுமாய் கும்மாளமிடுகிறார்கள்,' என்றது அச்செய்தி. மேலும் கடும் வறுமையில் வாடும் மக்கள் பசிதாங்காது எவ்வாறு சோற்றுப் பருக்கை களுக்காக அலைகிறார்கள் என்று அது எடுத்துச் சொன்னது. பணக்கார வாடிக்கையாளர்கள் வீணடிக்கும் உணவைப் பற்றியும், அது குப்பைத் தொட்டியில் கொட்டப்படும் அவலத்தையும் விளக்கியது. அதைப் படித்த சுவாமிநாதனின் மனதில் பஞ்சத்தைப் பற்றிய கொடூரமான படம் விரிந்து கண்களினின்று நீரை வரவழைத்தது.

பதினேழு வயதான அவ்விளைஞன் அப் பொழுதுதான் தன் நாட்டில் வறுமையில் வாடும் மக்களின் அவலநிலையைப் பற்றி சிந்திக்கலானான். 'போர் மற்றும் பஞ்சத்தைப் போன்ற ஏதாவது பேரிடர் வந்தால், பாதிக்கப்படுவது ஏழைகள்தானே தவிர பணக்காரர்களல்ல,' என்று அவன் நினைத்தான்.

இது எவ்வளவு தூரம் அவனைப் பாதித்தது என்பதை அவனுடைய அன்றைய உரையிலிருந்து புரிந்து கொள்ள முடிந்தது. பட்டிமன்றத்தில் அன்றைய நாயகன் சுவாமிநாதன்தான். "போர், பஞ்சம் போன்ற பேரிடர்களிலிருந்து நம்மைக் காத்துக்கொள்ள வேண்டுமென்றால் அதற்கு இருக்கும் ஒரேவழி நாம் உணவு தானிய உற்பத்தியை அதிகரித்து, அவற்றின் இருப்புக் குவிப்பைப் பெருக்கவேண்டியதுதான்" என்று அவன் வாதாடினான். "நம்மிடம் இயற்கை வளத்திற்கு ஏதும் குறைவில்லை. அதனால் நம் நாட்டினருக்குப் போதிய அளவு மட்டுமல்லாமல், ஏற்றுமதி செய்யவும் உணவு தானியம் உற்பத்தி செய்ய முடியும். நாம் ஏன் இதனைச் செய்யக்கூடாது? மனிதனால் உருவாக்கப்

பட்ட சிக்கல்களுக்கு மனிதனாலேயே தீர்வும் கிடைக்க வழி செய்யவேண்டும்.” அவனுக்குச் சிறுவயதில் தன் தந்தை கூறியது நினைவுக்கு வந்தது. “நாம் மக்களுக்குத் தேவையான உணவு தானியங்களை உற்பத்தி செய்யும் வேலையில் ஏன் ஈடுபடாமல் இருக்கிறோம்?” தாங்கிக் கொள்ளாத துயரத்துடன் அவன் அச்சபையினரிடம் வினவினான். அவனுடைய உரையைக் கேட்டவர்கள் உற்சாகத்துடன் கைதட்டி அவனைப் பாராட்டினர். அன்று சுவாமிநாதனின் மனதில் ஒரு பெரிய மாற்றம் நிகழ்ந்தது.

“நீ ஏன் விவசாயத்தில் ஈடுபடக்கூடாது? உன் குடும்பம் விவசாயக் குடும்பம்தானே? அவ்வாறு செய்வதால் நீ உன் எண்ணங்களுக்கு வடிவம் தரலாமில்லையா,” அவனுக்கு விவசாயத்தில் இருந்த அக்கறையைக் கண்டு அவன் வகுப்புத் தோழன் ஒருவன் சுவாமிநாதனைக் கேட்டான்.

“இல்லை கேசவா. நான் ஒரு விவசாயி. ஆனால் என் நிலத்திலுள்ள பயிர் மற்றும் என் நெற்களஞ்சியத்தை நிரப்பும் கவலையும் மட்டுமே எனக்கு இருக்கும். எனக்கோ நம் பரம்பரை விவசாயத்தை விட்டுவிடாமல் அதன் உதவியாலேயே உணவு உற்பத்தியைப் பெருக்கும் வழிகளை கண்டறிய ஆசை. இதற்குத் தேவை, ஏராளமான ஆராய்ச்சி. ஆனால் இந்த ஆராய்ச்சி பரிசோதனைக் கூடத்துடன் நின்றுவிடாமல் விவசாயிகளால் தத்தம் வயல்களில் பிரயோகிக்கப்படவேண்டும் இதெல்லாம் செய்ய வேண்டுமானால் முதலில் நான் பி.எஸ்.ஸி முடித்தவுடன் வேளாண்மைப் படிப்பு படிக்க வேண்டும்,” என்றான் சுவாமிநாதன்.

‘நான் மரபணு இயலில் தேர்ச்சி பெறுவேன். இவ்வறிவியல், தாவரங்களின் மேம்பட்ட விதை வகைகளை உருவாக்க உதவும்,’ என்று அவன் நினைத்தான். ஒரு முடிவுக்கு வந்த பிறகு அதற்குத் தேவையான விடைகளைத் தேடலானான். மேலை நாடுகளில் வெற்றிபெற்ற சில வழிமுறைகளான மேம்பட்ட விதை வகைகளின் உபயோகம் மற்றும் நவீன வேளாண்மை முறைகளைப் பின்பற்றுவதால் உணவு உற்பத்தியைப் பெருக்க முடியுமென்று அவன் நிச்சயமாக நம்பினான். தன் எண்ணங்களைப் பற்றி ஓயாமல் தன் நெருங்கிய நண்பர்களிடம் பேசினான்.



"நம் நாட்டின் சராசரி விவசாயியிடம் ஒரு சிறிய துண்டு நிலம்தான் இருக்கிறது என்று உங்களுக்குத் தெரியுமா? அச்சிறிய நிலத்தின் விளைச்சலை அவன் இரட்டிப்பாக, மூன்று பங்காகப் பெருக்க முடிந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்? இதைச் செய்ய அவனுக்குச் சிறந்த விதைகள் தேவை. இவற்றை நாமே இந்தியாவில் உற்பத்தி செய்து தரலாம் அல்லது வெளிநாடுகளிலிருந்து வரவழைத்த விதை வகைகளை நம் நாட்டின் தட்ப வெப்ப நிலைக்கேற்ப மாற்றலாம்–" பேசிக்கொண்டேபோன சுவாமிநாதனுக்குத் சித்தப்பாவின் வீட்டில் தான் சிறுவனாக இருந்தபொழுது கேட்ட உரையாடலும் அதனைத் தொடர்ந்து எழுந்த வாடிப்போன நாற்றுக் களின் நினைவுகளும் மனதில் நிழற்படங்களாய் விரிந்தன. வெளிநாட்டிலிருந்து வந்து, இங்குள்ள தட்பவெப்ப நிலைகளுக்குத் தம்மை மாற்றிக்கொள்ள முடியாமல் வாடிய நாற்றுக்கள் தம் தாய் மண்ணை நினைத்து ஏங்கியதாக அன்று தான் நினைத்ததை அவன் எண்ணிப் பார்த்தான். அவ்வாறு என்றும் நடக்காது. அவன் நடக்க விடமாட்டான்.

நினைவலைகளில் மூழ்கிவிட்ட சுவாமிநாதன் சுய நினைவு வந்தவனாய்த் தொடர்ந்தான். "...இல்லா விடில் அவை புதியமண்ணிலும் தட்ப வெப்ப நிலையிலும் தழைக்க இயலாமல் வாடி இறந்துவிடக் கூடும். ஓ! இதனைச் சாதிப்பதென்பது எவ்வளவு பெரிய சவால் என்பது தெரியுமா கேசவா? இதைச் சாதிக்க முடிந்தால் இவ்வுலகில் பஞ்சமென்பதே இருக்காது! நம் கைவசம் போதுமான உணவு தானியங்கள் இருந்தால் தெருக்களில் மக்கள் பசியால் வாடி மடிய மாட்டார்கள்." உணர்ச்சி வசப்பட்டுப் பேசினான் அவன்.

"இதையெல்லாம் எப்படி சாதிக்கப்போகிறாய் சுவாமிநாதா? நம் நாடு எவ்வளவு பெரியது என்பது உனக்குத் தெரியாதா?" கவலையுடன் கேட்டான் கேசவன்.

"மக்கள் திறனால் எத்தனை பெரிய இயக் கத்தையும் செய்து முடிக்க முடியுமென்பதை நான் கண்கூடாகப் பார்த்திருக்கிறேன்.." அவன் கண்முன் பல ஆண்டுகளுக்குமுன் கும்பகோணத்தின் மக்கள்

அனைவரும் திரண்டு கொசுக்களையும் அதனால் உண்டாகும் நோயையும் ஒழிக்க முன்வந்த காட்சி படமாக விரிந்தது. "நாம் செய்ய வேண்டியதெல்லாம் மக்களுக்கு இதன் முக்கியத்துவத்தைப் பற்றி அறிவுறுத்த வேண்டியதுதான். இயக்கம் ஒருமுறை செயல்பட ஆரம்பித்துவிட்டால் முன்னேற்றம் தானாக வரும். அதனை யாராலும் தடுத்து நிறுத்த முடியாது. அதன்பின் நம்நாடு, உலகத்தின் நெற் களஞ்சியம் என்று போற்றப்படப்போவது திண்ணம்!"

சுவாமிநாதன் பேசப் பேச அவன் கண்களில் ஒரு புதிய ஒளி தோன்றியது. ஒருநாள் இந்நாட்டின் பசுமைப் புரட்சிக்குத் தான் விதையிடப்போவதை அன்று அவன் அறிந்திருக்கவில்லை!

# மண்ணின் மைந்தன்

1925ஆம் ஆண்டு ஆகஸ்ட் 7 அன்று பிறந்த டாக்டர் எம்.எஸ். சுவாமிநாதன், இந்தியாவின் தலைசிறந்த விவசாய விஞ்ஞானிகளில் ஒருவர். வேளாண் மரபியலில் அவருடைய ஆராய்ச்சி நம் நாட்டில் மட்டு மின்றி உலக அளவிலும், குறிப்பாக வளரும் நாடுகளில் அவருக்குப் பெரும் வரவேற்பைப் பெற்றுத் தந்துள்ளது.

விளைச்சலை அதிகரிக்கக் கூடிய கோதுமை வகைகள், இயற்கையால் உண்டாகக் கூடிய பஞ்சம், வறட்சி போன்ற பேராபத்துக்களில் இருந்து தப்பிக்கும் வழி முறைகளைப் பற்றிய ஆராய்ச்சி, அரிசி மற்றும் கோதுமையின் மரபணு சார்ந்த மூல வளங்களின் பாதுகாப்பு, வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவதன்மூலம் பொருளாதார வளர்ச்சிக்கு வழி வகுத்தல், ஏழைகள்—அதிலும் குறிப்பாகப் பெண் களுக்கு—அம்முறைகளால் உதவி, இயற்கை வளப் பாதுகாப்பு போன்று, வேளாண்மைத் துறையில் அவருடைய பல தரப்பட்ட ஆராய்ச்சிகள் குறிப்பிடத் தக்கவை. 1960இல் தொடங்கி 1982வரையில் நடந்த இந்தியாவின் பசுமைப் புரட்சிக்குத் தலைமை வகித்த பொறுப்பு திரு. சுவாமி நாதனைத்தான் சேரும். இப்புரட்சிதான் இந்தியாவை உணவு தானியத்தில் தன்னிறைவுள்ள நாடாக மாற்றியது என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

திரு. சுவாமிநாதன், பிலிப்பைன்ஸிலுள்ள இன்டர்நேஷனல் ரைஸ் ரிசர்ச் இன்ஸ்டிட்டியூட்டின் பொது இயக்குநராக 1982லிருந்து 1988வரை பணி யாற்றியுள்ளார். இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் உள்ள பல்வேறு பல்கலைக்கழகங்கள் அவருக்கு 34 முறை முனைவர் பட்டமளித்துக் கௌரவித்துள்ளன.



அவர் பெற்றுள்ள விருதுகளில் பத்மஸ்ரீ (1967)

பத்மபூஷண் (1972), பிலிப்பைன் நாட்டு அரசாங்கம் அளிக்கும் ரேமன் மாகசெசே விருது (1971), பத்ம விபூஷன் (1989), ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் உலக விஞ்ஞான பரிசு (1986), வேளாண்மைத் துறையில் நோபல் பரிசுக்குச் சமமாகக் கருதப்படும் முதல் உலக உணவு பரிசு (1987) ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

தற்போது அவர் சென்னையிலுள்ள டாக்டர் சுவாமிநாதன் ஆராய்ச்சி மையத்தின் கௌரவத் தலைவராகப் பணியாற்றிக் கொண்டிருக்கிறார். இந்த நிறுவனம், பரம்பரை வழி முறைகள் மற்றும் நவீன முறைகளின் அடிப்படையில் கிராமப்புற மற்றும் வேளாண்மை வளர்ச்சிக்காகப் பாடுபட்டு வருகிறது.



# உலகம் அவளுடைய நாடக மேடை

புனேவாசிகளுக்கு அது ஒரு பழக்கப்பட்ட காட்சி. ஆறு அல்லது ஏழு வயது சிறுமி ஒருத்தி, பெரிய மீசையுடன் கம்பீரமான தோற்றம் கொண்ட ஒரு பெரியவருடன் துள்ளிக் குதியாட்டம் போட்டவாறு நடக்க, இருவரும் சிரித்துப் பேசியபடி மகிழ்ச்சியாக உலாவப் போவார்கள். இது ஒரு தினசரி நிகழ்ச்சி.

அச்சிறுமி தான் ஸாயி; அந்தப்பெரியவர் அவளுடைய தாத்தா—அந்நாளில் புகழ்பெற்ற கல்வியாளரும், கணக்கறிஞருமான ஸர். ஆர்.பி. பராஞ்ச்பே. அவர் இந்தியாவின் முதல் 'மூத்த ராங்க்லர்' பட்டத்தைப் பெற்றவர். அவள் அவரை 'அப்பா' என்றுதான் அழைப்பாள்.

நடந்து கொண்டே அப்பா அவளிடம் எளிய கணக்குப் புதிர்களைக் கேட்பார். இவை தவிர அவளுக்கு நீதிக்கதைகள், ஹான்ஸ் க்ரிஸ்டியன், ஆண்டர்ஸன் மற்றும் க்ரிம் ஸின் தேவதைக் கதைகள், அரபுக்கதைகள், பீர்பாலின் கதைகள் என்று

---

' கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் கணக்குப் பரீட்சையில் தேறியவர் ராங்க்லர் எனப்படுவார். அப்பரீட்சையில் முதலிடம் பெறுபவர் 'சீனியர் ராங்க்லர்' எனப்படுவார்.

பலவிதக் கதைகள் கூறி மகிழ்விப்பார். ஸாயிக்குக் கணக்குகளைவிட கதைகள் அதிகம் பிடிக்கும்.

ஒருநாள் அவர்கள் வழக்கம்போல் கிளம்பிய பொழுது ஸாயி, "அப்பா, எனக்கு ஒரு கதை சொல்லுங்கள்!" என்றாள்.

"ஊகூம். இன்று நீ எனக்குக் கதை சொல்!" என்றார் அவர்.

ஸாயியின் மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. அவள் சுவையான தேவதைக் கதையொன்று கூறினாள். அதில் அனல் கக்கும் வேதாளங்களும், ராஜகுமாரர் களும், பேசும் கிளிகளும், புதையல்களும் நிறைய இருந்தன!

"- அவர்கள் மகிழ்ச்சியாக வாழ்ந்தார்கள்!" என்று முடித்தாள் அவள்.

"உம்...ம்.." என்றார் அப்பா. "மிகவும் சுவையான கதை! இதை எங்கே படித்தாய்?"

"எங்கும் படிக்கவில்லை. நானே இட்டுக் கட்டினேன்!" என்று பதிலளித்தாள் ஸாயி.

தாத்தாவுக்குத் தன் பேத்தியின் ஆற்றலைக் கண்டு பெருமை பிடிபடவில்லை!

அதுதான் ஸாயியின் முதற் கற்பனைப் படைப்பு என்று சொல்லலாம். அதுவே அவளுடைய படைப்பு வாழ்க்கையின் முதல் படியும் ஆகும். அவள் எட்டு வயதுச் சிறுமியாக இருக்கும்போதே அவளுடைய முதல் புத்தகம், 'முலாஞ்சா மேவா' எனும் கற்பனைக் கதைத் தொகுப்பு வெளியானது.

ஸாயியும் நூல்களும் இணைபிரியா தோழர் களாக இருந்தனர். பராஞ்ச்பே குடும்பத்தில் ஒரு அறை முழுதும் புத்தகங்களுக்காக ஒதுக்கப்பட்டு, நூலகமாக மாற்றப்பட்டிருந்தது. அது ஒரு அற்புதமான நூலகம். அதில் கிரேக்க, ஜெர்மனிய, லத்தீன் மற்றும் பிரெஞ்சு மொழி உட்பட, பல மொழி நூல்கள் இருந்தன. இவற்றைத் தவிர மராத்தி மற்றும் ஆங்கில இலக்கியங் களும், நாவல்களும் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன.

ஸாயிக்கு பிறநாட்டு மொழிகள் புரியாது. அங்கிருந்த ஆங்கில, மராத்தி நூல்களே முக்கால்வாசி அவளுக்குப் புரியாதவைதான். ஆனால் அவளுக்கு நூல்களின் பிரத்தியேக வாசனை மிகவும் பிடிக்கும். அதனை முகர்ந்தவாறு அவள் புத்தகங்கள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் அலமாரிகளை மணிக்கணக்கில்



வியந்து பார்த்த வண்ணம் இருப்பாள். அவள் தாத்தா, மிகவும் அரிதான புத்தகங்களை எல்லாவற்றுக்கும் மேலுள்ள அடுக்கில் வைத்திருப்பது அவளுக்குத் தெரியும். ஏணி மேலேறித்தான் அவற்றை எடுக்க முடியும். அவற்றைப் படிக்கவோ, ஏன், தொடக்கூட முடியாவிட்டாலும், அவற்றைப் பார்ப்பதே அவளுக்கு மிக்க மகிழ்ச்சியளித்தது.

அந்நூலகம் அவளுக்குப் பிடித்ததற்கு மற்றொரு காரணமும் இருந்தது. அதில் ஒரு மூலையில் தன்னுடைய புத்தகங்களை அடுக்கி வைத்திருந்தாள். டாக்டர் டூலிட்டில் எனிட் ப்ளைடனின் கதைகள் மற்றும் டுவின்ஸ் (இரட்டையர்) கதைகள் உட்பட பல புத்தகங்கள் அதில் இருந்தன. புத்தகத் திரட்டு வளர்ந்துகொண்டே போனதற்கு முக்கிய காரணம், அவளை யாராவது உனக்கு என்ன பரிசுவேண்டும், என்று கேட்டால், 'ஒரு புத்தகம்!' என படடென்று பதிலளித்ததுதான். அவள் தாயோ, தாத்தாவோ செல்லம் கொடுத்து அவளைக் கெடுத்ததில்லை. ஆனால் புத்தகங்களைப் பொறுத்தவரை அவள் கேட்டது எப்போதும் கிடைக்கும்.

சிறுமி ஸாயியின் வாழ்க்கையில் அப்பா ஒரு மகத்தான இடத்தை வகித்தார். தாத்தாவும் பேத்தியும் பல மணி நேரம் சுவாரசியமாகப் பொழுதைக் கழித்தனர். மாலை இருவரும் நடக்கப்போவதைத் தவிர அவர்கள் தினமும் இன்னொரு காரியத்தையும் செய்தனர். அப்பா காலையில் முகச்சவசரம் செய்து கொள்ளும்போது ஸாயி அவருக்குப் படித்துக் காட்ட வேண்டுமென்பதுதான் அது. அவர் தன் பழமை வாய்ந்த சவரக் கத்தியைத்தான் பயன்படுத்துவது வழக்கம். தினமும் வெவ்வேறு வண்ணப் பிடியை யுடைய கத்தியைப் பயன்படுத்துவார் அவர்.

முகத்தில் சோப்பு நுரையைத் தடவிக் கொண்டே, "ம்-ம்.. இன்று செவ்வாய்க்கிழமையா? அப்படியானால் சிவப்புக் கத்தியால் சவரம் செய்ய வேண்டும்," என்பார் அவர்.

சவரம் செய்தவாறே ஸாயியிடம், "இன்று ஐவான் ஹோவிலிருந்து ஒரு பகுதியைப் படி," என்பார். அவள் தினமும் சார்லஸ் டிக்கன்ஸ், வால்டர் ஸ்காட் அல்லது ஜேன் ஆஸ்டின் போன்ற

இலக்கிய எழுத்தாளர்களின் நூல்களிலிருந்து ஒரு பகுதியைப் படிக்க வேண்டுமென்பது அவர் கட்டளை. ஆனால் அவளுக்கோ இது பெரும் தொல்லை தரும் விஷயமாக இருக்கும், ஏனென்றால் அவளைத் தொடர்ந்து படிக்க விடாமல் நடுநடுவே இடைமறிந்து அவளுடைய உச்சரிப்பைத் திருத்துவது அவர் வழக்கம்.

"பர்சிவரென்ஸ் எனும் வார்த்தையை இவ்வாறு உச்சரிக்க வேண்டும்," என்று கூறி அவளை அவ் வார்த்தையைச் சரியாக உச்சரிக்கக் கற்பதற்கு சில முறை ஒரே வாக்கியத்தை இருபதுமுறைகூட படிக்க நேரிடும். அப்படி ஒருவேளை உச்சரிப்பு சரியாக வந்துவிட்டால்கூட அவளை விடாமல், "வெரிகுட்! இப்பொழுது மீண்டும் அதே பத்தியைப் திரும்பவும் படி, பார்க்கலாம்!" என்பார்.

"இவ்வளவு தரம் இடைமறித்தால் எனக்குக் கதையின் தொடர்ச்சியே மறந்து போய்விடுகிறது," என்று அவள் முறையிட்டாலும் அவரிடம் அது எடுபடாது.

புத்தகங்களின் மீதான ஸாயியின் ஈர்ப்பு அவளுடனே வளர்ந்தது. பராஞ்ச்பே வீட்டில் புத்தகங்கள் வணக்கத்திற்குரிய பொருட்களாகப் போற்றப் பட்டன. ஒருநாள் நூலகத்திற்குள் வேகமாக ஓடிவந்த ஸாயியின் காலில் ஒரு புத்தகம் இடறியது. அலமாரியிலிருந்து கீழே விழுந்திருந்த அதனை யாரும் கவனித் திருக்கவில்லை.

"அங்கேயே நில்!" என்று அவள் தாத்தா கர்ஜித்தார். ஸாயி பயத்தில் உறைந்து போனாள். "நீ இப்பொழுது என்ன செய்தாயென்று தெரியுமா? அறிவை எட்டி உதைத்தாய்?! நீ உதைத்த புத்தகத்திடம் இப்பொழுது மன்னிப்புக்கேள்!" என்றார் அவர் கடுமையாக.

ஸாயியும் மறுபேச்சு ஏதுமின்றி, குனிந்து புத்தகத்தை வணங்கினாள். புத்தகங்களை மதிக்காது அவற்றைக் கையாண்டாலும் இதே தண்டனைதான். விதிமுறைகளை மீறினால், உரிய தண்டனையை அனுபவிக்க வேண்டுமென்ற உண்மையை அவள் சிறிய வயதிலேயே புரிந்து கொண்டு அதனை மதிக்கவும் கற்றுக் கொண்டாள்.

ஒரே குழந்தையாக இருந்ததால் ஸாயி பல



சமயங்களில் சகோதரர், சகோதரிகள் இல்லாத குறையை உணர்ந்தாள். இது அவளைத் தனிமைப் படுத்தியது. இதனால் விளையாடுவதற்கும், மற்ற பொழுது போக்குக்கும் அவள் தன் தோழர்களைத்தான் நாட வேண்டியிருந்தது. அவர்களோ அவளைச் சேர்த்துக்கொள்ளத் தயங்கினர். இதற்கு காரணம் ஸாயி சற்று குண்டாக இருந்ததுதான்.

"ஸாயி, உன்னால் எங்களுக்கு இணையாக ஓடமுடியாது," என்பான் சந்து.

"நீ விளையாடினால் ஆட்டமே நிதானமாகி விடுகிறது," என்பாள் மீரா மென்மையாக.

"நீ எங்களுக்குச் சமமாக ஆடுவதில்லை. நீ மிகவும் குண்டாக இருக்கிறாய்!" என்பாள் தேவயானி.

இத்தகைய பேச்சுக்களால் மனம் நொந்த ஸாயி, ஓர் ஓரமாக உட்கார்ந்து மற்றவர்கள் உற்சாகத்துடன் சிரித்து விளையாடுவதை ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருப்பாள். தான் என்ன செய்தால் தன்னை மற்றவர்கள் விளையாடச் சேர்த்துக் கொள்வதுடன் விளையாட்டில் நடுநாயகமான பங்கு தருவார்கள் என்று நெற்றியைச் சுருக்கியபடி அவள் சிந்திக்கத் துவங்கினாள். அவளுக்கு ஒன்று மட்டும் தெளிவாகப் புரிந்தது. அவ்விளையாட்டு அவளுடைய நிதானத் தாலோ, உடல் பருமனாலோ பாதிக்கப்படாததாக இருக்கவேண்டுமென்பதுதான் அது. சிந்தித்துக் கொண்டிருந்த ஸாயியின் முகம் திடீரென்று பிரகாசமாகியது.

"ஆஹா! எனக்கு ஒரு அருமையான விளை யாட்டு தெரியுமே!- புதையல்களும், மந்திரத் தீவுகளும் நிறைந்த விளையாட்டு!" என்று பலமாகக் கூவினாள் அவள்.

இதனைக் கேட்ட மற்றவர்கள் தம் விளையாட்டை நிறுத்திவிட்டு அவள் சொல்வதைக் கேட்கத் தொடங்கினர். ஓரக்கண்ணால் ஸாயி இதனைக் கவனித்தாள். பொங்கி வந்த மகிழ்ச்சிச் சிரிப்பை அடக்கிக் கொண்டு அவள் தனக்குத்தானே பேசுவதைப்போல் சொல்லலானாள்; "-ம்-ம் இதில் இரண்டு அணிகள் வேண்டுமே? ஒன்று நல்லவர்கள், மற்றொன்று கெட்டவர்கள்-"

இதற்குள் அனைவரும் அவளருகில் குழுமி விட்டனர். ஸாயியோ தன் மனதில் ஒரு அற்புதமான சாகசக் கதையை அவசரமாக உருவாக்கிக் கொண்டிருந்தாள்! சிறுவர், சிறுமியர் அதில் பங்கேற்று நடிக்க விருந்தனர். ஸாயி இயக்குனரானாள்! விரைவில் ஆட்டத்திற்குத் தயார் செய்யத் தொடங்கினர். சரிகைத் தாள்களில் கற்களைச் சுற்றி ஒளித்து வைக்க 'புதையல்களை' உருவாக்கினர்; பின், துப்புக்கள் அடங்கிய வரைபடங்கள் தயாரித்தனர். எல்லா விவரங்களையும் ஸாயி கவனமாக மேற்பார்வை செய்தாள்.

இந்தப் புதிய விளையாட்டு எவ்வளவு இன்பமாக இருந்ததென்றால், சிறுவர் சிறுமியர் தாங்கள் ஏதோ நாடகத்தில் நடிப்பதைப்போன்று உணர்ந்தனர். விளையாட்டை ஸாயி மாற்றிக் கொண்டேயிருந்ததால் அவர்கள் கிட்டத்தட்ட ஒரு வாரத்திற்கும் மேல் அதை விளையாட முடிந்தது. ஸாயி அவர்களை வெவ்வேறு பணிகள் செய்யுமாறு ஏவிக் கொண்டிருந்தாள். ஏனென்றால் அவளுக்குத் தானே விளையாட்டில் அடுத்து நடக்கப்போவது என்னவென்று தெரியும்? அவளில்லாமல் அவர்களால் அவ்விளையாட்டை விளையாடவே முடியவில்லை! தவிர அவர்களால் அவள் குண்டாக இருப்பதைப் பற்றியோ, மெதுவாக நடப்பதைப் பற்றியோ குறை கூறவும் முடியவில்லை!

ஆனால் சிறிது நாட்கள் விளையாடிய பின் அவர்களுக்கு அது அலுக்கலாயிற்று. "வேறு ஏதாவது விளையாடலாம், வாருங்கள்!" என்று யாரோ கூற அனைவரும் அங்கிருந்து ஓடிப்போயினர்-ஸாயியைத் திரும்பவும் தனியாக விட்டுவிட்டுத்தான்! ஸாயியின் மூளை சுறுசுறுப்பாக இயங்கலாயிற்று. இதைவிட அடுத்த விளையாட்டு இன்னும் சுவாரசியமாக இருந்தால்தான் எல்லோரும் திரும்பி தன்னிடம் வருவார்கள் என்று நினைத்து கவலைப்படலானாள். பலமான யோசனைக்குப் பிறகு அவள் கண்டுபிடித்த அடுத்த விளையாட்டும் அவ்வாறே இருக்க, சிறுவர்கள் அவளிடம் திரும்பினர்.

ஸாயியின் தந்திரத்தை அறியாத மற்ற சிறுவர்கள் அவள் புதிது புதிதாகக் கண்டுபிடிக்கும் விளை யாட்டுக்களில் திளைத்து மகிழ்ச்சியடைந்தனர். இவற்றில் குட்டி இயக்குனரான ஸாயி அடைந்த



மகிழ்ச்சியைப் பற்றி கேட்கவும் வேண்டுமா?

தாத்தாவிற்கு அடுத்தபடி ஸாயியின் தாய், சகுந்தலா பராஞ்ச்பே அவள் வாழ்க்கையில் முக்கிய இடத்தை வகித்தார். அவர் கண்டிப்பும், கட்டுப்பாடும் மிகுந்தவர். ஆனால் அவற்றை அன்பும், அரவணைப்பும் சேர்த்துக் கற்பிப்பதில் வல்லவர். தன் மகள் பல்வேறு துறைகளில் பிரகாசிக்க வேண்டும் என்பது அவருடைய அவா. ஆதலால் அவளை பல நடவடிக்கைகளில் ஊக்குவித்தார்-டென்னிஸ், இந்துஸ்தானி இசை, எழுத்து மற்றும் சமஸ்கிருத சுலோகங்களை மனப்பாடம் செய்வது போன்ற பலவற்றிலும் அவளைப் பங்கு கொள்ளச் செய்தார்.

"இன்று நீ அக்குன்றின் மேல் ஏறிவிட்டு வர வேண்டும். இல்லாவிட்டால் உன் பருமனை எப்படி குறைப்பது?" என்று ஒருநாள் அவர் ஸாயியிடம் கூறினார்.

"ஓ, ஆயி! (அம்மா) நான் குன்றை ஏறத்தான்

வேண்டுமா?" என்று கேட்டாலும் அவள் தன் தாய் சொன்னபடி செய்தாள். புத்தகங்களின் விஷயத்தில் தான் அவள் தாய் அவள் கேட்டதை வாங்கித் தருவார். மற்ற விஷயங்களில் அவர் நினைத்தபடி நடக்க முடியாது. அவளுக்குக் கிடைக்காதவற்றில் அவள் ஆசைப்பட்ட பொம்மைக் கல்யாணமும் ஒன்று.

அவளுடைய தோழிகள் தாங்கள் நடத்தும் பொம்மைத் திருமணங்களுக்கு அவளை அழைத்துக் கொண்டேயிருப்பார்கள். மஹாராஷ்டிரத்தில் இது சிறுமியர் விளையாடும் ஒரு பரம்பரை விளையாட்டு. குழந்தைகள் தாமே மந்திரங்கள் ஓதி ஒரு ஆண் பொம்மைக்கும் பெண் பொம்மைக்கும் திருமணம் செய்துவைக்கும் விளையாட்டுதான் அது.

ஸாயி இந்தத் திருமணங்களைப் பெரிதும் விரும்பினாள். அவளுக்குத் தானும் இம்மாதிரி ஒரு திருமணத்தை நடத்தவேண்டுமென்று ஆசை. ஒவ்வொரு முறை ஒரு திருமணத்திற்குப்போய் வந்த





பிறகும் அவள் தன் தாயை நச்சரிக்கத் தொடங்குவாள். அவள் தாயோ இது ஒரு முட்டாள்தனமான விளையாட்டு என நினைத்து அவளுக்கு அனுமதியளிக்க மறுத்தார்.

"நீங்கள் என்னை என்றுமே மகிழ்ச்சியாக விளையாட விட்டதில்லை," என்று முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டாள் ஸாயி. "ப்ளீஸ் என்னையும் பொம்மைக் கல்யாணம் நடத்த விடுங்களேன், நான் சத்தியமாக மிகவும் சமர்த்தாக இருப்பேன்" என்று கெஞ்சினாள் அவள்.

அவள் விடாமல் தன் தாயை நச்சரிக்கவும், ஒருநாள் அவள் தொல்லை தாளாமல் அவர் ஒப்புதல் கொடுத்துவிட்டார். "உனக்குப் பொம்மைக் கல்யாணம் தானே நடத்தவேண்டும்? சரி. ஆனால் அது யாருமே மறக்க முடியாத நிகழ்ச்சியாக இருக்கும், பார்!" என்று கூறினார்.

அவர் சொன்னதுபோலவே தானே எல்லா ஏற்பாடுகளையும் மேற்பார்வையிடத் தொடங்கினார். 'மணமகன்' மற்றும் 'மணமகளுக்கு' உடைகள் தைக்க பெட்டியிலிருந்து பட்டு மற்றும் ஜரிகைப் பூ வேலைப் பாடுகள் செய்யப்பட்ட துணிகளை எடுத்து ஸாயி மற்றும் அவள் தோழிகளிடம் கொடுத்தார்கள். அவர் களும் மிக்க உற்சாகத்துடன் உடைகள் தைப்பதிலும் நகைகள் செய்வதிலும் ஈடுபட்டனர். ஸாயி தனக்கே உரிய திறமையுடன் ஆண் பொம்மையின் தலைப் பாகையிலிருந்து பெண் பொம்மையின் கொலுசுவரை எல்லாவற்றையும் பார்த்துப் பார்த்துச் செய்தாள். இவ்வேலைகளெல்லாம் கிட்டத்தட்ட ஒரு மாதம் வரை நடந்தன.

ஒருநாள் அவள் பள்ளியிலிருந்து வந்த போது அவள் தாய் ஒரு பாண்டு வாத்தியக்காரருடன் பேசிக் கொண்டிருந்தைப் பார்த்தாள்.

''மம்மி, யாருக்குக் கல்யாணம்?'' என்று ஆவலாகக் கேட்டாள். புன்முறுவலுடன், "உன் பொம்மைக்குத்தான்!" என்றார் அவள் தாய்.

"அப்படியானால் நிஜமான பாண்டு வாத்தியத் துடன் என் பொம்மைக்குக் கல்யாணமா!!" அவளால் அதை நம்பவே முடியவில்லை.

''உன் பொம்மைகளுக்கு உண்மையான

கல்யாணம் செய்யலாம் என்று நான் கூறினேனே? இப்பொழுதுபோய் உன் வேலைகளைக் கவனி!" என்றார் அவர்.

குறிப்பிட்ட நாளன்று, வீடே கல்யாண மண்டபம்போல் காட்சியளித்தது. வரும் விருந்தினர்களுக்காக இனிப்பும் காரமும் தயாரிக்கப்பட்டிருந்தன. ஸாயி மராட்டிய மரபுப்படி புடவை அணிந்திருந்தாள். அவள் மணமகளின் தாய் அல்லவா? பாண்டு வாத்தியம் புடைசூழ, ரோஜா வண்ணத் தலைப்பாகை மற்றும் பட்டாடைகள் அணிந்த 'மணமகன்' ஒரு வெள்ளைக் குதிரைமீது இருத்தப்பட்டான். பாண்டுக்குழுவின் தலைவன் முன் செல்ல, அந்தக் கல்யாண ஊர்வலத்தில் அப்பகுதியில் வசித்த குழந்தைகள் அனைவரும் பங்கெடுத்துக் கொண்டனர். உண்மையிலேயே ஸாயி நடத்திய பொம்மைக் கல்யாணம் மிகவும் விமரிசையாக நடந்தேறியது.

நாடகங்களிலும், சாகச விளையாட்டுக்களிலும், கற்பனைக் கதைகளிலும் ஈடுபாடு கொண்ட சிறுமி ஸாயி, பெரியவளாகி இன்று இந்தியாவின் தலைசிறந்த திரைப்படம் மற்றும் நாடக இயக்குனராக விளங்குகிறார்.



# அன்று கற்பனை விளையாட்டுத் தலைவி, இன்று திரைப்பட இயக்குனர்

ஸாயி பராஞ்ச்பே லக்னோவில் பிறந்து புனேயில் வளர்ந்தவர். அறிவுஜீவிகள் நிறைந்த குடும்பத்தில் பிறந்த ஸாயி, சிறுவயது முதலே எழுத்திலும் படிப்பிலும் ஆர்வத்துடன் ஈடுபட்டதில் வியப்பு ஏதுமில்லை. எட்டு வயதில் அவளுடைய முதல் தேவதைக் கதைத்தொகுப்பு வெளியிடப்பட்டது. கொஞ்சம் பெரியவளானதும் புனேயின் சிறுவர் நாடகக் குழுவில் பங்கேற்கலானார்.

எழுபதுகளில் அவர் இயக்கிய பல செய்திப் படங்களும், குழந்தைகளுக்கான திரைப்படங்களும் விருதுகளைப் பெற்றன. குழந்தைகள் திரைப்பட அமைப்பிற்காக (சில்டிரன்ஸ் ஃபிலிம் சொஸைட்டி) அவர் 1971இல் 'ஜாது கா ஷங்க்' (மந்திரச் சங்கு) என்ற திரைப்படத்தைத் தயாரித்தார். 'சிக்கந்தர்', (1973) மற்றும் த்ராக்கி (1989), அவர் இயக்கிய மற்ற குழந்தைகள் படங்களாகும். ஸாயி பல செய்திப் படங்களையும், குறும் திரைப்படங்களையும் தயாரித்துள்ளார். இவற்றில் 'அங்கூட்டா சாப்' (கைநாட்டு) எனும் படம் முதியோர் கல்வி பற்றியது. இப்படம் இந்திய அரசாங்கத்தால் கிராமங்களில் பரவலாகத் திரையிடப்பட்டது. 'சூடியான்' (வளையல்கள்), எனும் குறும்படம் அவருக்கு சமூகக் கருத்துடைய சிறந்த செய்திப்படத்துக்கான தேசிய விருதைப் பெற்றுத்தந்தது. அவருடைய படங்கள் அனைத்துமே நுண்ணுணர்வுள்ள, சமூக சிந்தனையை அடிப்படையாகக் கொண்டு படைக்கப் பட்டவை.

அவர் பல தொலைக்காட்சித் தொடர்களையும், முழுநீள திரைப்படங்களையும் இயக்கியுள்ளார்.

'ஸ்பர்ஷ்' (1979) அவருடைய முதல் முழு நீளப்படம். இது அவருக்கு சிறந்த இந்தி திரைப்படத்துக்கான விருது உட்பட மூன்று தேசிய விருதுகளைப் பெற்றுத் தந்தது.

தற்போது 'இளைஞர்கள் மற்றும் குழந்தைகள் திரைப்படத்துக்கான தேசிய மையம்' என்ற அமைப்பின் தலைவராக உள்ளார்.



